**Mr. S. Kulandhaivel, M.A., M.Phil.**
Assistant Professor, Department of English,
Ganesar Arts and Science College, Melasivapuri-622403,
Tamil Nadu, India.
E-mail: english.kulandhai@gmail.com

**Mr. B. Senthil Kumar, M.A., M.Phil., (Ph.D).**
Assistant Professor, Department of English,
Alagappa Govt. Arts College, Karaikudi, Sivaganga-630003,
Tamil Nadu, India.
E.Mail: skbosesk@gmail.com

**Ms. A.Angayarkanni, M.A., M.Phil.**
Assistant Professor, Department of English,
St Antony's College of Arts and Science for Women, Dindigul-624005,
Tamil Nadu, India.
E-mail: aangayarkanni@yahoo.com

**Mr. R. Ganesh Kumar, M.A., M.Phil., B.Ed.**
P.G. Assistant of English,
A.P.T. Durairaj Hr.Sec. School, Madurai,
Tamil Nadu, India.
E-mail: rgkumar321@gmail.com

PUBLISHER: D. Maheswari,
3/350, Veterinary Hospital Back side,
Virudhunagar – 626001.
Mobile: 8526769556
Mail: maheswari@ijtlls.com
dmakesh88@gmail.com, ijtllsetamiljournal@gmail.com

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics.

**Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

**D. Maheswari**
**Publisher and Director**

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area.

Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal.

**D. Maheswari**

# பொருளடக்கம்/Comtents

# வாழ்த்துரை

**Ijtlls** எனும் பன்னாட்டு தமிழ் இதழை இனிதே தொடங்கி நடத்துவதில் மிகவும் பெருமையடைகிறோம். தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் தொன்மையினை வெளிகொணரும் வகையில் இவ்ஆய்விதழ் அமைந்துள்ளது. தமிழ் ஆய்வாளர்கள், பேராளர்கள் மற்றும் ஆர்வலர்கள் தங்கள் ஆய்வை இயற்றி ஒப்புமை மற்றும் உயர்வு பெற இது ஓர் அரிய களமாகும். இது இப்பன்னாட்டு இதழின் இரண்டாம் தொகுதியின் இரண்டாம் வெளியீடாகும். *என் பணி தமிழ் பணி செய்து கிடப்பதுவே* என்பதற்கிணங்க ஆராய்ச்சி மாணவர்கள் மற்றும் பேராளர்களால் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வழங்கப்பட்டு இவ்விதழ் வளம் பெற்றுள்ளது. இவ்விதழின் சிறப்பு இருமொழிகளில் (தமிழ் மற்றும் ஆங்கிலம்) ஆய்வு கட்டுரைகளைக் கொண்டிருப்பதாகும். தமிழ் வளர்ச்சிக்காக அதன் தொன்மையை உலக அரங்கிற்கு எடுத்துச் செல்வதே இவ்ஆய்விதழின் நோக்கமாகக் கொண்டாளப்பட்டுள்ளது. மேன்மேலும் இப்பன்னாட்டு இதழ் வளர்ச்சியடைய அனைவரின் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

- பதிப்புக்குழு


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# கொண்டி மகளிர்/உரிமை மகளிர்/வேளங்கள்
# Gondi Women/Urimai Women/Velems

**மு.கயல்விழி,** உதவிப் பேராசிரியர், பச்சையப்பன் மகளிர் கல்லூரி, காஞ்சிபுரம்.
**M.Kayalvizhi,** Assistant Professor of Tamil, Pachaiyappa's College for Women, Kanchipuram.
**ORCiD:** https://orcid.org/0000-0002-4678-7588
**DOI:** 10.5281/zenodo.3628589

## Abstract

*In reality, Women are the back bone of our society. They were given superior status and deep respect in our Tamil culture but due to Arayanization our ancestors treated them as slaves and servants. They defeated foreign countries and captured number of young women and keep them as their concubines in the Seraglio.The Chola and the Pandiya kings established various living quarters for this like women. The women were treated illegitimately always and no civil liberties were provided for them. From the Sangam age itself, this like bad treatment was enacted against them. On the ther words, Tamil kings, in one way honoured women and in other way misused them. They are called as Gondi Women or Urimai Women and the places they are kept are called as Velems. The paper investigates the related evidences in regard to Gondi Women and Velams.*

.

**Keywords:** Gondi Women, Urimai Women, Velems, Tamil Culture, The Triumvirs

## முன்னுரை

பெண்கள் ஒரு நாட்டின் கண்களைப் போன்றவர்கள். அவர்கள் மானிட சமுதாயத்தைத் தாங்கும் தூண்களாகவும், மனித வாழ்வு என்ற விருட்ஷத்தின் வேர்களாகவும் திகழ்கின்றனர். பெண்களை எப்பொழுதும் ஆணினின்று பிரித்துப் பார்க்கவியலாது. இதையே இறைவனின் அர்த்தநாரீஸ்வரத் தத்துவம் உணர்த்தும். அவள் தாயாக, சகோதரியாக, மனைவியாக, மகளாக பல்விதமாகப் பரிணமித்து ஆணின் வாழ்க்கையில் பங்கேற்கின்றாள். எல்லா நாடுகளும் பெண்களைப் போற்றியதை விட நம் முன்னோர்கள் பலபடி அதிகம் போற்றி வந்தனர். பூமியை, நதிகளை, நிலவை, மரங்களைப் பெண்களாக உருவகப்படுத்திப் போற்றியது இக்கருத்தை உணர்த்தும். பெண்களுக்கு அரசியல் அதிகாரம் அளித்தும், குடும்பப் பொறுப்புகளை நல்கியும், கற்றறிந்த கவிஞர்களாக்கியும் அழகு பார்த்தனர் நம் முன்னோர். ஒரு நாணயத்திற்கு இரண்டு பக்கங்கள் உள்ளது போன்று பெண்களை உயர்த்திய நம் முன்னோர்கள் அவர்களுக்குச் சொல்லவியலாத அநீதியும் இழைத்ததை வரலாறு சுட்டிக் காட்டும்.

உலக நாடுகளில் பெண்களைப் போகப் பொருளாகவும் சிற்றின்பத்திற்கான கருவியாகவும் பயன்படுத்தி வந்ததற்கு நம் நாடும் விலக்கன்று. சுயநலத்தால் உந்தப்பட்டுத் தம் நாட்டுப் பெண்களைப் போற்றிப் பாதுகாத்த தமிழ் மன்னர்கள் அதற்கு முற்றிலும் மாறாய் அயல்நாட்டுப் பெண்களுக்குக் கொடுமைகளையும், அநீதியையும் ஒருங்கே இழைத்தனர். கொண்டி மகளிர், உரிமை மகளிர் என்று அவர்களுக்குப் பெயர்கள் சூட்டி தம் காம இச்சைகளை தீர்த்துக்கொண்ட அவலத்தைக் காண்கின்றோம். இம்மன்னர்கள் அப்பெண்களைப் பள்ளியறைப் பாவைகளாகவும், வேலைக்காரிகளாகவும், ஏவல் மகளிராகவும் பயன்படுத்தி,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அவர்கள் தங்குவதற்கு வேளங்களை உருவாக்கி, அவற்றிற்கு பெயர்கள் சூட்டி மகிழ்ந்தனர். வேலியே பயிரை மேய்வது போன்று நாட்டில் அநீதிகளைக் களைய வேண்டிய அரசர்களே அநீதி இழைத்தனர். வேளங்கள் நம் முன்னோர் பெண்களுக்கு இழைத்த அநீதியின் அடையாளங்களாகும். இவை பழந்தமிழ் சமுதாயத்தின் பெருமைகளுக்குக் களங்கமாகவும், கரும்புள்ளியாகவும் இன்றளவும் திகழ்ந்து வருகின்றன.

## கொண்டி மகளிர்

பண்டைய தமிழகத்தில் பெண்ணடிமைத்தனம் என்பது எப்பொழுதும் இருந்த ஒன்று. இக்கொடுமையின் வித்து சங்க காலத்திலே இடப்பட்டுவிட்டது. பெண் அடிமைகள் சங்க காலத்திலும் இருந்தனர். அவர்கள் "கொண்டி மகளிர்" என்று அழைக்கப்பட்டனர். தொல்காப்பியர் இத்தகையப் பெண் அடிமைகளை "ஓ அடியோர்" என்று அழைக்கின்றார். இதற்கு உரை எழுதிய இளம்பூரணர் "ஓ அடித்தொழிற் செய்வோர்" என்று பொருள் தருகின்றார். சங்கம் மருவிய கால நூலான நாலடியார் இவர்களை "ஓ தொழுத்தைமார்" என்று அழைத்து இவர்கள் இருப்பை உறுதி செய்தது. பழைய உரையாசிரியர்கள் இத்தகையப் பெண்களைத் "தோற்றார் பால் பிடித்து வந்த மகளிர்" என்று மேலும் விளக்குகின்றனர். இவ்வாறு சங்ககாலத்தில் தோற்ற நாடுகளிலிருந்து பிடித்து வரப்பெற்ற பெண் அடிமைகள் அரசனின் காமக்கிழத்திகளாகவும், ஏவல் மகளிராகவும், செவிலித் தாய்களாகவும் பணிபுரிந்து வந்தனர். சான்றாக தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் போரில் பிடித்து வரப்பட்ட பெண்கள் மதுரையில் வாழ்ந்து வந்ததைக் குறிக்கலாம். **"நெஞ்சில் நடுக்கூறூஉக் கொண்டி மகளிர்" (மதுரை.583)** அதே போன்று சோழன் கரிகாலனால் பிடித்து வரப்பெற்ற பெண்கள் காவிரிப் பூம்பட்டினத்தில் வசித்து வந்தனர். **"கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி" (பட்டி.246)** போரில் பிடித்து வரப்பெற்ற அரசு மகளிர் பணிப்பெண்களாக பணியாற்றியச் செய்தியைப் பட்டினப்பாலைக்கு உரைவகுத்த நச்சினார்க்கினியார் கீழ்கண்டவாறு விளக்கமளிக்கின்றார்:

> **மகளிர் பலரும் நீருண்ணும் துறையிலேச் சென்று மூழ்கி மெழுகும், மெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக் காலத்தே கொளுத்தின அவியது, விளக்கத்தினையும் உடைய பூக்களைச் சூட்டின. கறியினையுடைய அம்பலம் கந்து தெய்வம் உறையும் தறி வம்பலர் சேர்க்கும் பொதியில் புதியவர்கள் பலரும் ஏறித் தொழுதற்குத் தங்கும் பொதியில் பொதியிலை மெழுகி விளக்கும் இட்டிருக்க வம்ப மகளிர் வைத்தார். இதனால் தமக்கும் புகழ் உளதாம் என்று கருதி. (நச்சினார்க்கினியார்)**

சங்கம் மருவிய காலத்ததிலும் பெண்ணடிமைத்தனம் இருந்ததை மணிமேகலை உறுதி செய்யும். **"வண்டிற்றுறக்கும் கொண்டி மகளிர்" (மணி.18:109)**
இவற்றால் சங்ககாலத் தமிழ் மன்னர்கள் தம் எதிரிகளைத் தோற்கடித்து, அவர்களின் மகளிரை சிறைபிடித்து வந்ததை இலக்கியங்கள் உறுதிசெய்யும். ஆனால் இது மேல் நாடுகளை போன்றல்லாமல் அளவோடு காணப்பட்டது.

## வேளங்கள்/உரிமை மகளிர்

வேளங்கள் என்பவை பெண் அடிமைத்தனத்தின் அடையாளங்களாகும். இவை தமிழ்ச் சமுதாயத்தின் புண்மையாகும். ஒவ்வொரு தமிழனும் எண்ணி வெட்கித் தலைகுனியச் செய்யும் அவமானத்தின் சின்னங்களாகும். இடைக்காலத் தமிழ் மன்னர்களான சோழர்களும், பண்டியர்களும் போர்களின் பொழுது தான் வென்ற நாடுகளிலிருந்து பொன்னையும், பொருளையும் கொண்டு வருவதுடன் அந்நாட்டு அரசு மகளிரையும், இளம் பெண்களையும் கவர்ந்து வருவதைப் பெருமையாகக் கருதினர். இவ்வாறு பிடித்து வரப்பெற்ற பெண்களுக்கு தனிக் குடியிருப்புகளை உருவாக்கி தம் பாதுகாப்பில் வைத்திருந்தனர். அப்பெண்கள் "உரிமை மகளிர்" என்று அழைக்கப்பட்டனர். எனவே அன்னியர் எவரும் இம்மகளிரை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அணுகுவது இயலாததாயிற்று. இப்பெண்டிர் வசித்த இருப்பிடங்கள் யாவும் “வேளங்கள்” என்று அழைக்கப்பட்டன. முதலாம் இராஜேந்திர சோழன் ஒன்பது லட்சம் போர் வீரர்களுடன் சென்று சாளுக்கிய நாட்டைத் தோற்கடித்து பல்லாயிரக்கணக்கான இளம் பெண்களை அடிமைகளாகப் பிடித்து வந்தான் என்று சாளுக்கியரின் ஹோட்டூர் கல்வெட்டு உரைப்பது இச்செய்தியை உறுதிசெய்யும் **(சோழர்களின் அரசியல் கலாச்சார வரலாறு ப:236).** இக் கல்வெட்டுச் செய்தியை சோழர்களுடைய மெய்க்கீர்திகளும், இலக்கியங்களும் உறுதி செய்கின்றன.

**பாண்டியன் முடிதலைக்கொண்டு அமர்முடித்து**
**அவன் மடக்கொடியை வேளமேற்றி**

என்ற மூன்றாம் குலோத்துங்கனின் மெய்கீர்த்தி அவன் பாண்டிய நாட்டு அரசு மகளிரைக் கவர்ந்து வந்து தன் காமக் கிழத்திகளாக்கிய செய்தியை பெருமையுடன் உரைப்பதைக் காணலாம்

**அடர்புரி விளங்கரியு**
**அரிவையர் குழாத்தோடு மகப்படபிடித்து…**
**தேவியர் குழாமும் பாவையரீட்டமு**
**மினையன பிறவு முனைவயிற் கொண்டு**

போன்ற வரிகளும் இதையே புலப்படுத்தும்.

**விண்ணோடு காத்து முசுகுந்தன் மிண்டநாள்…**
**மண்ணோடு கண்ட மடந்தையரும் (இராஜராச.70)**
**சாய அரமகளிர் தத்தம் திருமார்பில்**
**கோயிலுரிமைக் குழாம் நெருங்கி (இராஜராச.79)**

என்ற இராஜராசன் சோழனுலாவும்

**மீன்ம் புகு கொடி மீனவர்**
**விழி அம்பு உக ஒழக்**
**கானம் புக வேளம் புகு**
**மடவீர் கடை திறமின் (கலிங்க.40)**

என்று ஜெயங்கொண்டாரும் இக்கருத்தை உறுதி செய்கின்றனர். இவற்றால் பிறநாட்டுப் பெண்களைக் கவர்ந்து வருதலை சோழ மன்னர்கள் பெருமையுடன் கருதினர் என்பது புலனாகின்றது. பழிக்குப் பழியாக அதே போன்றதொரு செயலை 200 ஆண்டுகள் கழித்து பாண்டிய மன்னர்களும் சோழ நாட்டின் மீது செய்து முடித்தனர். சோழ மன்னர்கள் இவ்வாறு கவர்ந்து வந்த பெண்களைத் தஞ்சையிலும், கங்கை கொண்ட சோழபுரத்திலும் குடியமர்த்தினர். சோழர்களால் தோற்கடிக்கப்பட்டு பல நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட அழகியர் இவ்வுளவகத்தில் வசித்து வந்தனர். இடைக்காலத்தில் தஞ்சையிலும் கங்கை கொண்ட சோழபுரத்திலும் ஏராளமான வேளங்கள் காணப்பட்டன.

## தஞ்சையின் வேளங்கள்

சோழரின் தலைநகர் தஞ்சையில் கீழ்கண்ட வேளங்கள் அமைக்கப்பட்டிருந்தன:-

1. அபிமான பூஷணத் தெரிந்த வேளம்
2. அருள்மொழித் தேவர் தெரிந்த திருபரிகாரத்ததார் வேளம்
3. இராசராசத் தெரிந்த பாண்டித் திருமஞ்சனத்து வேளம்
4. உத்தம சீலியார் வேளம்
5. உய்ய கொண்டான் தெரிந்த திருமஞ்சனத்து வேளம்
6. பஞ்சவன் மாதேவியார் வேளம்

## கங்கை கொண்ட சோழபுரத்தின்வேளங்கள்

சோழரின் இரண்டாம் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தில்

1. கீழை வேளம

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

2. திரிபுவன மகாதேவியார் வேளம்
3. பழைய வேளம்
4. சத்ரு பயங்கர தெரிந்த வேளம்
5. மேலை வேளம்
6. பெரிய வேளம்
7. இலங்கேஸ்வர குலகாலத் தெரிஞ்ச திருமஞ்சனத்தார் வேளம்
8. சிவபாத சேகர தெரிஞ்ச வேளம்

போன்ற வேளங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

### சோழநாட்டின் பல்வகை வேளங்கள்

வேளங்கள் பலவகைப்பட்டன. அவை அங்கு வசித்த மகளிரின் நிலைக்கேற்ப மாறுபட்டன. கீழைச் சாளுக்கிய நாட்டிலிருந்து கொண்டு வரப்பெற்ற பெண்டிர் இருந்த வேளம் கீழை வேளம் என்றும். மேலைச் சாளுக்கிய நாட்டிலிருந்து கொண்டு வரப்பெற்ற பெண்கள் இருந்த வேளம் சத்ரு பயங்கர வேளம் என்றும், இலங்கையிலிருந்து கொண்டு வரப்பெற்ற பெண்கள் இருந்த வேளம் இலங்கேஷ்வர குலக்கால வேளம் என்றும், பாண்டிய நாட்டிலிருந்து கொண்டு வரப்பெற்ற பெண்கள் இருந்த வேளம் பாண்டி திருமஞ்சனத்து வேளம் என்றும் பெயர்கள் சூட்டப்பட்டிருந்தன. இவ்வாறு கொண்டு வரப்பெற்ற பெண்கள் சிலரை பணிப் பெண்களாகவும், சிலரை ஏவல் மகளிராக்கியும் சோழமன்னர்கள் அவர்களை கேவலப்படுத்தி சிறுமையிழைத்தனர். பணிப்பெண்களாக வாழ்ந்த அரசு மகளிர் வாழ்ந்த பகுதிகளுக்கு திருவந்திக்காப்பு வேளம், திருமஞ்சனத்து வேளம் போன்ற பெயர்கள் சூட்டப்பட்டன.

எவ்வளவு பெண்கள் இவ்வாறு வேளங்களில் வாழ்ந்தனர் என்று துல்லியமாகத் தெரியவில்லை. ஆனால் இராசேந்திர சோழன் காலத்தில் சோழர்களின் அரண்மனை உணவுக் கூடத்தில் மட்டும் சுமார் 3000 பெண்கள் முறைபோட்டுப் பணியாற்றினர் என்பதிலிருந்து அவ்வாறு கொண்டு வரப்பட்டவர்கள் பல்லாயிரக் கணக்கானோர் என்பதை ஊகித்தறியலாம். இவ்வேளங்கள் சோழமன்னர்களின் நேரடிக் கண்காணிப்பிலிருந்ததோடு இதற்கு மிகுந்த கட்டுக்காவலும் போடப்பட்டிருந்தது. இவற்றால் அன்னிய ஆடவர் எவரும் இப்பகுதியில் நுழைய அனுமதிக்கப்படவில்லை. இவ்வாறு பண்டைய தமிழ் மன்னர்கள் எதிரி நாட்டுப் பெண்களைப் பிடித்து வருவதை பெருமையாகக் கொண்டதோடு மட்டுமல்லாமல் அவர்களுக்குப் பல்வகை அநீதிகளை இழைத்தனர், எதிரி நாட்டினர் மீது தாங்கள் கொண்ட கோபத்தையும், பழி உணர்ச்சியையும் தீர்க்கும் வடிகாலாகவே இவ்வேளங்களை அவர்கள் கருதினர் என்று கொள்ள வேண்டியுள்ளது.

### முடிவுரை

ஒரு சமுதாயம் சிறப்பானதாகக் கருதப்பட வேண்டுமென்றால் அதில் பெண்களுக்கு உயர்வான இடம் வழங்கப்படவேண்டும் சங்க காலத்தில் ஔவையார், காக்கைப் பாடினியார், நச்செள்ளையார் போன்றோரும், சோழர் காலத்தில் செம்பியன்மாதேவி, குந்தவை பிராட்டியார், வானவன்மாதேவி போன்ற பெண்டிரும், பாண்டியர் காலத்தில் மங்கையர்க்கரசி போன்றோரும் சிறப்புடன் போற்றப் பட்டனர். இவற்றால் தமிழ்ச் சமுதாயம் சீரிய சமுதாயம் என்று பலர் கொண்டாடி மகிழ்ந்தனர். ஆனால் அதே சமுதாயத்தில்தான் பெண்ணடிமைத்தனம், ஜாதி முறை, குழந்தைகள் மணம், கைம்பெண் கொடுமை, பலதார மணம், தீண்டாமைக் கொடுமை போன்ற சிறுமைகளும் அரங்கேறியுள்ளன என்பதை அவர்கள் மறந்தனர். இவ்வநீதிகளும், தீமைகளும் இலைமறைவு காய்மறைவாக நடக்காமல் அரசின் அனுமதியுடன் வெளிப்படையாகவே நடந்தன. தமிழ் மன்னர்களும் இதற்குப் பூரண அனுமதியளித்தனர். எனவே இவை தமிழ்ச் சமுதாயத்தின் பெருமைகளைக் குலைக்கும் புண்மையாகத்தான் கருத வேண்டும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பழந்தமிழ்ச் சமுதாயம் ஆணாதிக்கச் சமுதாயமாகும். சோழ மன்னர்கள் இதைச் செயலில் காட்ட எதிரிநாட்டுப் பெண்களை அடிமைகளாகப் பிடித்து வந்து தம் பாலியல் இச்சைகளுக்குப் பயன்படுத்தினர். மெல்லியல்பினரான பெண்கள் மீது இழைக்கப்பட்ட இவ்வநீதிகள் மன்னிக்கவியலாத மாபெரும் குற்றமாகும். அக்காலத் தமிழ்ச் சமுதாயம் பெண்களைப் போகப்பொருளாகப் பயன் படுத்தியது. போர்க் காலத்தில் பிடிக்கப்படும் அடிமைகளுக்கு எந்த நாட்டிலும் உரிமைகள் வழங்கப்படுவதில்லை. அவர்கள் எல்லாக் காலங்களிலும் மிருகங்களை விடக் கேவலமாக நடத்தப்பட்டனர். இதற்குத் தமிழ்ச் சமுதாயமும் விலக்கன்று. பெண்களைப் போற்றிய தமிழ்ச் சமுதாயம், அதே பெண்களுக்கு அநீதியையும் இழைத்ததைக் காணமுடிகின்றது. தமிழ் மன்னர்கள் அயல்நாட்டுப் பெண்களுக்கு இழைத்த அநீதிகள் முழுமையாகப் பதிவு செய்யப்படவில்லை. வேளங்களில் நடந்த அடக்குமுறைகள், அநீதிகள், பாலியல் துன்புறுத்தல்கள், பலாத்காரங்கள் போன்றவை உலகின் வெளிச்சத்துக்கு வரவில்லை. வேளங்களைப் பற்றி வெளி வந்த பதிவுகளெல்லாம் அவ்வரசர்கள் வேளங்களை உரிமையாகக் கொண்டதினால் வெளிப்பட்ட அகமகிழ்வின் வெளிப்பாடான பதிவுகளேயாகும். எதிர்காலத்தில் வேளங்களைப் பற்றி முழுமையான சான்றாதாரங்கள் நமக்குக் கிடைக்குமாயின் அவை தமிழ்ச் சமுதாய வரலாற்றை தரம் தாழ்த்துவதுடன், கருப்புப் பக்கங்களாகவும் பதிவு செய்யப்படும் என்பதில் ஐயமில்லை.

### பார்வை நூற்பட்டியல்

1. Neelakanta Sastri.K.A, (1975), Chennai ,The Cholas, University of Madras.
2. Swaminathan. A, (1991). Chennai, Social and Cultural History of Tamil Nadu, Deepa Publications.
3. Pillai.K.K, (1969), Chennai, A Social History of the Tamils, University of Madras.
4. பிள்ளை.கே.கே, (2013), சென்னை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராச்சி நிறுவனம்.
5. சதாசிவப் பண்டாரத்தார்.தி.வை, (2008), சிதம்பரம், பிற்காலச் சோழர் சரிதம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.
6. பிள்ளை.கே.கே. (1997), சென்னை, சோழர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்.
7. பாலசுப்பிரமணியம்.மா (1979), சென்னை, சோழர்களின் அரசியல் கலாச்சார வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்.
8. புலியூர்க் கேசிகன் (2018), சென்னை, கலிங்கத்துப் பரணி,சாரதா பதிப்பகம்.
9. கதிர் முருகு (2009), சென்னை, இராசராச சோழன் உலா, சாரதா பதிப்பகம்.
10. கதிர் முருகு (2013), சென்னை, மதுரைக் காஞ்சி, சாரதா பதிப்பகம்.
11. கதிர் முருகு (2011), சென்னை, பட்டினப்பாலை, சாரதா பதிப்பகம்.
12. புலியூர்க் கேசிகன் (2017), சென்னை, மணிமேகலை, சாரதா பதிப்பகம்.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**கயல்விழி, மு.** “கொண்டி மகளிர்/உரிமை மகளிர்/வேளங்கள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 1-6. டிஓஐ: 10.5281/zenodo.3628589.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal 
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# சமூகப் பிரச்சனைகளில் இலக்கியங்களைச் சாடிய பாவேந்தர்
# Pavendhar's Satire on Literature over Social Issues

**முனைவர் அ. கோவிந்தராஜன்,** இயக்குநர் (ம) உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.
**Dr. A. Govindarajan,** Director & Assistant Professor of Tamil, Bharathidasan Research Centre, Bharathidasan University. Trichy.
ORCiD: https://orcid.org/0000-0002-1237-8962
**DOI: 10.5281/zenodo.3628591**

## Abstract

*Pavendhar Bharathidasan is a known Tamil Patriot in the Tamil Era of Dravidian Politics. He is one of the firebrand of the Dravidian idea who had shown strong opposition on the theistic views that hinder the uniqueness of the Tamil society. He is one of the stalwarts of Tamil Literature and have shown his strong command on Tamil Literature by evincing the Tamil culture and tradition through his works. He got admired by many tamil poets and rever them for their aesthetic sense. In the same manner, when he finds the same writer has evinced something weakening the spirit of the society; he had condemned them with his same fire brand poetry, prose and speech. He was objective and unbiased in all of his literary pursuits. All of that he did only for the emanicipation and rationale of the Tamil society. Hence, this paper scrolls down the satire shot against the human chauvinism done in the name of Aryanization.*

**Key Words :** Pavendhar, Satire, Tamil Literature, Social Issues

பாவேந்தர் பாரதிதாசன் தமிழில் பயின்றுவரும் தனிப்பாடல்களை அடித்தளமாகக் கொண்டு பல்வேறு படைப்புகளைத் தம் தனித்தன்மை விளங்கப் படைத்துள்ளார். மேலும், சங்கப்பாடல்கள் பலவற்றைக் 'கருத்துறைப்பாட்டு' என்ற தலைப்பில் எளிமைப்படுத்திப் பழகுதமிழில் கவிதையாக மறுஆக்கம் செய்துள்ளார். இவற்றில் 'எளிமை'யும், இசைக்கூட்டிப்பாடுவதற்கேற்ற 'இசைப்பா' வடிவத்தன்மையும் முக்கியமாகத் திகழ்கின்றன.

பலபட்டைச் சொக்கநாதர், ஔவையார், கம்பன், கவியாண்டான், அருணாசலக் கவிராயர், காள மேகப்புலவர், கச்சியப்பர் போன்ற புலவர்களின் பாடல்கள் அவரின் கவனத்தை ஈர்த்துள்ளன. அவர் தெரிந்தெடுத்த தனிப்பாடல்களை,

1. விமர்சிப்பன
2. விளக்கந் தருவன
3. தமிழ்ப்பண்பாட்டை உயர்த்திப்பிடிப்பன
4. பார்ப்பனர்தம் இழிவைச் சுட்டுவன
5. கடவுளை எதிர்ப்பன
6. தனித்தமிழ்ப் படுத்தின

என ஆறுவகையான நிலைகளில் காணமுடியும்.

### அரவணைப்பும் விமர்சனமும்

'கம்பன் தொண்டு', 'ஓரணாவுக்கு மூன்று தமிழ்தேவை' என்ற தலைப்புகளில் கம்பரையும், அவ்வையாரையும் கடுமையாக அவர் விமரிசனம் செய்கின்றார். அவ்வையார்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

எனும் தமிழ் மூதாட்டியைப் போற்றிப் பேசும் பாவேந்தர், தம்கொள்கைக்கு மாறான நிலையினை அவரிடம் கண்டபோது அவரையே விமரிசித்துப் பேசி அவர் கருத்தை வன்மையாக மறுக்கின்றார். 'கடவுள் மறுப்பும்', 'பார்ப்பன எதிர்ப்பும்' பாரதிதாசனின் உயிர்நாடியான கொள்கைகள். 'கடவுளும் பார்ப்பனரும் தமிழர் நலத்துக்குப்பகை' என்று அவர் கருதியமையால் இவ்விரண்டினையும் வாய்ப்புக்கிடைக்கும் போதெல்லாம் எதிர்த்துப்பாடும் இயல்பு அவரிடம் உண்டு. "காக்கை வருத்தப்படும் என்பதற்காகக் கிளி தன் வண்ணத்தை மாற்றிக்கொள்ள முடியாது. அதுபோலத் தமிழ்ப் பகைவர்கள் வருத்தப்படுவார்கள் என்பதற்காகப் பாரதிதாசன் தன் கருத்துக்களை மாற்றிக் கொள்ளவில்லை"[1] என்பார்.

**காப்பியங்களைச் சாடிய பாவேந்தர்**

***கம்பராமாயணம்***

கம்பரும், அவ்வையாரும் இவரின் கடும் விமரிசனத்துக்கு உள்ளாகின்றனர். அவர்தம் விமர்சனத்துக்கு உள்ளாகும் கம்பன் எழுதிய பாடல்:

**பொன்னும் மாமணியும் புனைசாந்தமும்**
**கன்னி மாரோடு காசினி ஈட்டமும்**
**இன்ன யாவையும் ஈந்தனள் அந்தணர்க்கு**
**அன்னமும் தளிர்ஆடையும் நல்கினாள் (அயோத்தியா – மந்திரப்:96)**

என்பதாகும். இராமன் முடிச்சூடப் போகின்றான் எனக் கேட்டதும் சீதை மகிழ்ச்சியுற்று அந்தணர்க்கு வழங்கிய தானங்கள் பற்றிய பாடல். அதனை பாவேந்தரும் கூறுகிறார்.

"இராமாயணத்தைத் தமிழாக்கிய கம்பன், தமிழ்ப்பண்பாடு கெடாமல் தக்கவாறு மாற்றியமைத்துள்ளான் என்கின்றனர். எங்கே மாற்றியமைத்தான்? பார்ப்பானுக்கு இளம் பெண்களையும் கொடுப்பதென்பது தமிழ்ப்பண்பாடா? அந்த இழிசெயல் ஆரியருக்கு ஏற்கும். அதை அப்படியே தமிழர் முன்வைக்கும் கம்பனின்செயல் எத்தகையது? எண்ணுக"[2] (குயில்.28.10.58) என்று விமர்சனம் செய்கின்றார்.

**அவ்வையார் விமர்சனம் செய்கின்ற பாவேந்தர்**

அவ்வையார்தம் பாடலாகிய "பாலும் தெளிதேனும்…" எனத் தொடங்கும் வெண்பா அவர்தம் விமரிசனத்துக்கு உள்ளாகிறது

'ஒரணாவுக்கு மூன்று தமிழ்தேவை' எனும் தலைப்பில் அவர் கூறுவது,

"காலணாவுக்குப் பாலும், காலணாவுக்குத் தேனும், காலணாவுக்கு வெல்லப்பாகும், காலணாவுக்கு முந்திரிப் பருப்பும் ஆகிய நான்கும் கலந்து, பிள்ளையாரப்பா உனக்கு நான் தருவேன். அப்படி நான் தருவதற்குமுன், நீ எனக்குச் சங்கத்தின் இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழ்களையும் இப்படிப்போடு என்று கேட்கின்றான்.

**யாரை? அழுக்குருட்டிப் பிள்ளையாரை**
**இவன் உருப்புடுவானா?**
**இப்படிப்பட்ட கல்வியைக் கட்டாயம் ஆக்கித்தான் என்ன பயன்?[3] (குயில், 20.09.60)**

பாவேந்தர் உள்ளம்குமைந்து உரைக்கின்றார். ஆனால், கம்பனை நேரடியாகத் தாக்கியதுபோல் அவ்வைப் பெருமாட்டியை நேரடியாகத் தாக்கவில்லை. மாறாகத் தமிழர் வீட்டுப் பையன் பிள்ளையார் எதிரில் நின்று பாடுவதாக அமைத்து, "இப்படிப்போடு என்று கேட்கின்றான்" என்கின்றார். நேரடியாக அவ்வைப் பெருமாட்டியைத் தாக்காத காரணம் அவர்மேல் பாவேந்தர் கொண்ட பக்தி. ஆனாலும், இப்படிப் பாடிவிட்டாரே அவர் என்ற ஆதங்கம்! எனவே, அது தவறு என்பதனைத் தன் கருத்துக்கு மாறானது, தமிழர் நலத்திற்குக் கேடு தருவது என்பதனை மிக நாகரிகமாக, ஆனால் அதே நேரத்தில் மிகக்கடுமையாக வெளிப்படையாக விமர்சிக்கின்றார்.

**அவ்வைப் பெருமாட்டியின் உண்மைக் கருத்து**

உண்மையில் இப்பாடலில் அவ்வை மூதாட்டி குறிப்பதுதான் என்ன? சற்று ஆழ்ந்து நோக்கினால் அப்பெருமாட்டி உள்ளுறை பொதுளப் பாடியுள்ளமை புலனாகும்.அந்தப்பாடல்:

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்இவை**
**நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலஞ்செய்**
**துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்**
**சங்கத் தமிழ்மூன்றும் தா (நல்வழி – கடவுள் வாழ்த்துகள்)**

என்பதாகும் இங்கு "நான்கு தருவேன் நான், தூமணியே! எனக்கு நீ மூன்று தந்தால் போதும்" எனச் சதுரம்பட மொழிகின்றார் சமற்காரமாக வேண்டுகிறார்!

உலகியல் நிலையில் பால், தேன், பாகு, பருப்பு ஆகிய இந்த நான்கும் இறைவனுக்கு, உகந்து படைக்கின்ற பொருள்கள் ஆனால், அவை உண்மையில் குறிப்பது என்ன? வெறும் பால், தேன் என்ற உலகப்பொருள்களா இங்குக் குறிக்கப்படுவன? இல்லவே இல்லை..! உலகியற் பொருள்கள் என்றால் இதனை எடுத்துச் சொல்ல அருந்தமிழ்க் கடல் அவ்வையா வேண்டும்? அறியாச் சிறு பையன் போதுமே! உண்மையில் பொருள் ஆழத்துடன் பாடுகின்றார் அவ்வை மூதாட்டி!

**பாலும் குழந்தைக்கு போடும் சாபம்**

பலபட்டைச் சொக்கநாதரின் 'தாயின் மனோபாவத்தை'யும் 'தாயின் அன்பையும்' விளக்கும் இரண்டு பாடல்களை எடுத்துக்காட்டிப் பொருட் செறிவோடு விளக்குகின்றார். அப்பாடல்களில் ஒன்று,

**அரும்பா லகாமுனம் பூமணம் சொற்பொருள் ஆகம்உயிர்**
**கரும்பாஞ் சுவைஎள்ளும் எண்ணெயும்போல ஒத்த காதலரைப்**
**பெரும்பாலில் நல்லன்னம் கங்காசலத்தைப் பிரிப்பது போல**
**சுரும்பாப்புலவா் எமன்ஆலை செக்கெனத் தோன்றினையே (தமிழரசு: 15.2.1939)**

என்பதாக பாவேந்தா் கூறுகின்றார்.

> **...ஒரு மங்கை தனது காதலனோடு இன்பத்தை இடையறாது அனுபவித்து வந்தாள். ஆனால் கா்ப்பவதியாகி, ஒரு குழந்தையைப் பெற்றெடுத்துவிட்டாள். அந்தக் குழந்தை அவளுக்கு இழைத்த தீமையை என்னவென்று சொல்வது! அவள் சொல்லுகிறாள் அந்தக் குழந்தையைப் பார்த்து : 'அருமைப் பாலகனே! நானும் உன் தந்தையுமாகிய காதலா் இருவரும் பாலும், நீருமாய் இருந்தோம். பூவும் மணமாயிருந்தோம். சொல்லும் பொருளுமாயிருந்தோம். கரும்பும் சுவையுடைய சாறுமாய் இருந்தோம். எள்ளும் எண்ணெயுமாயிருந்தோம். இவ்வாறு ஒருமனப்பட்டு இருந்து வந்த எமக்கு நீ அன்னமும், கரும்பும் (வண்டும்), புலவரும் யமனும், ஆலையும் செக்குமாய்த் தோன்றிவிட்டாய்**

என்று கூறுகின்றாள்.

**சமூக எதிா்ப்பு**

'சோற்றுக்கடை மொட்டைச்சி மீது கவியாண்டான் பாடியது' என்பதும், 'முருகனுக்கு திருநாமமா?' என்பதும், 'பார்ப்பான் பார்ப்பானைத் திட்டினான்' என்பதும், பார்ப்பன எதிர்ப்பைக் கொண்டன. 'கவியாண்டான்' என்ற கவிஞர் பார்ப்பனத்தியின்மேல் எரிச்சல் கொண்டு பாடிய பாடலை, 'அபிதான சிந்தாமணி'யிலிருந்து தேடி எடுத்து, 'வயிறெரிந்து பாடியபாட்டு' என்று கூறுகின்றார்.

**வாயெரியக் கையெரிய வயிறெரியச் சட்டிவைத்து வறுத்துக்கொட்டிக்**
**காயெரியக் கடினமுடன் அரைவயிற்றுக்கு அன்னமிட்ட கடினக்காரி**
**தாயெரிய மகனெரியச் சேடியெனும் மொட்டைமுண்டை தலைமேற்பற்றித்**
**தீயெரியக் கண்டக்கால் எனதுடைய வயிற்றெரிச்சல் தீருந்தானே (குயில்:29.7.58)**

கொடுத்த காசுக்கு வயிறு நிறைய உணவளிக்காது, அரைவயிற்றுக்குக்கூட அன்னமிடாத அந்தச் சோற்றுக்கடைப் பார்ப்பன நங்கையைத் திட்டிப் பாடியதாக அமைந்தபாடல் இது. வடவேங்கடத்தில் - திருப்பதியில் - எழுந்தருளியுள்ள இறைவன் 'முருகப்பெருமானே' என்ற ஒரு கருத்து தொன்றுதொட்டு உலகவழக்கில் இருந்து வருவது. இக்கருத்துக்கு அரண் செய்வதுபோன்று உள்ள ஒரு தனிப்பாடலை "முருகனுக்குத் திருநாமமா? எனுந்தலைப்பில் குறிக்கின்றார். இப்பாடல் அருணாசலக் கவிராயா் திருவேங்கடத்துக்கு (திருப்பதி) சென்ற போது பாடியபாடல் ஆகும். அப்பாடல்,

**வடவேங் கடமலையில் வாழ்முருகா நிற்கும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**திடமோங்கும் நின்சீர் தெரிந்து - மடமோங்க**
**நாமத்தைச் சாற்றினார் நம்மையும் செய்வாரோ**
**மாமுற்றிங் கார்இருப்பார் காண் (அருணாசலக்கவிராயர் - தனிப்பாடல்)**

வடவேங்கடமலையில் வாழ்கின்ற முருகனே, நீ திடமாக மலைமேல் நிற்பதை அறிந்து, நின்னுடைய இந்த மலையைவிட்டு என்றும் நீ நீங்காய் எனும் சீர்தெரிந்து உனக்கு நாமத்தைச் சாற்றினார்: சாற்றி உன்னை (மதம்) மாற்றினார். இதுபோல் நம்மையும் செய்வாரோ இங்குள்ள மேட்டுக்குடியார்' எனவே இங்கே யார் இருப்பார்? என்ற கருத்தமைந்த இப்பாடலில் இறைவனையே மாற்றிவிடும் (சைவ முருகனை நாமம் இட்டு வைணவத் திருமாலாக மாற்றியமை) செயலையும் செய்வர் என்று அவரின் இழிவினை விளக்குகின்றார் பாவேந்தர்.

**கடவுள் மறுப்பு**

'இராமன் தெய்வம் அல்லன்' எனும் காளமேகப்புலவர் கவியும் 'தசரத ராகவன்' 'வீரராகவன்' எனும் இருவரையும் ஒப்பிட்டுக் கச்சியப்பர் பாடிய பிறிதொரு பாடலும் இராமனின் (கடவுளின்) குறையைக் கூறுவன. அப்பாடல்:

**சத்தாகி ஐந்தையும் தாங்காத தெய்வம் தனிமறையும்**
**கர்த்தா எனும் தெய்வம் அம்பலத்தே கண்டும் கண்கள் இரு**
**பத்தானவன் மைந்தன் பொய்த்தேவியைக் கொல்லப் பார்த்தழுத**
**பித்தானவன் தனையோதெய்வ மாகப் பிதற்றுவதே (குயில்,15.8.58)**

தில்லைக்குச் சென்ற காளமேகப்புலவரைக் கண்ட கோவிந்தராசப் பெருமாள் கோயிலில் இருந்த அர்ச்சக நம்பியார், இராமனை (பெருமாளை) தெய்வமென்று பாடவேண்டி விண்ணப்பம் செய்கின்றார். காளமேகமோ சைவர்; தில்லைக்கூத்தனையே தெய்வமாகத் தொழுபவர் எனவே, கண்கள் இருபது உடைய இராவணன் மகனாகிய இந்திரசித்து, போர்க்களத்தில் 'மாயா சீதை' யை வாளால் வெட்டி எறியக்கண்டு அழுத பித்துடைய இராமனைத் தெய்வமென்று பிதற்றலாமா? என்ற கருத்தமையப் பாடுகின்றார். இப்பாடலை எடுத்து விளக்கி "பொய்ச்சீதை என்பதையும் அறியாத ஒருவனைக் கடவுள் என்று சொல்லமுடியாது என்பது கருத்து"[4] என்கின்றார் பாவேந்தர். அப்பாடல்:

**பொங்குதமிழ் அயோத்திவாழ் தசரதன்என் போனிடத்தும் பூதூர்வேந்தன்**
**துங்கவடு கனிடத்தும் வீரராகவர் இருவர் தோன்றின ரால்**
**அங்கொருவன் ஒருகலைமான் எய்திடப்போய் வசைபெற்றான் அவனிபாலன்**
**இங்கொருவன் பல்கலைமான் எய்திடப்போய்க் கல்வியினால் இசைபெற்றானே**
**(குயில்.9.9.58)**

பாவேந்தர் இராமாயணமும், இராமனும் தமிழ்ப்பண்பாட்டைச் சிதைத்து, ஆரியப் பண்பாட்டை உயர்த்திப்பிடிப்பன என்ற கருத்து உடையவராதலால் தன் கருத்துக்கு அரண்சேர்க்கும் இத்தனிப்பாடல்களை எடுத்துப்பேசுகின்றார். மேலும் அவர் 'கடவுள் மறுப்புக் கொள்கையர் ஆதலினால் 'இராமன் தெய்வம் அல்லன்' என்ற கொள்கை உடைய பாடல்கள் அவர் கருத்தைக் கவர்ந்தன எனலாம்.

**நாரையை வியந்த பாவேந்தர்**

புலவர் வறுமை காரணமாகத் துன்புற்றுப் பாண்டியனைக் கண்டு பொருள் பெறவேண்டி மதுரை செல்கின்றார். இரவு நேரத்தில் அங்குள்ள தேரடியில் தங்கி இருக்கின்றார். குளிரும் பசியும் அவரை வாட்டின. தூக்கம் வராது வானில் பறந்து செல்லும் நாரைகளைப் பார்த்து,

**எங்கோன் மாறன் வழுதி கூடலின்**
**ஆடை யன்றி வாடையில் மெலிந்து**
**கையது கொண்டு மெய்யது பொத்திக்**
**காலது கொண்டு மேலது தழீஇச்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**(சத்திமுத்தப்புலவர் தனிப்பாடல், *நாரை விடு தூது*)**

கிடக்கும் தன் நிலையினைச் சோழநாட்டுச் சத்திமுற்றத்தில் இருக்கும் தன் மனைவியிடம் கூறும்படி பாடுகின்றார். இப்பாடலின் தொடக்கம்,

**நாராய் நாராய் செங்கால் நாராய்**
**பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன**
**பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்**

**(சத்திமுத்தப்புலவர் தனிப்பாடல், *நாரை விடு தூது*)**

என்ற ஓர் அற்புதமான உவமை கொண்டது. அமைச்சருடன் நகர்வலம் வந்த பாண்டியன் இதனைக் கேட்டு வியந்து தேரடி வீதியில் உறங்கிய புலவரின் மீது தன் பொற்பட்டாடையினைக் குளிருக்காகப் போர்த்திவிட்டுச் செல்கின்றான்: மறுநாள் அவரை அழைத்துப் பெருமை செய்வதாகப் போகிறது கதை. அனைவரும் நன்கறிந்த இக்கதையினை நாடகமாக ஆக்குகின்றார் பாவேந்தர்.

இதனை 'உரையிடையிட்ட செய்யும் நாடகம்' என நாம் வழங்கலாம். ஏனெனில், புலவரின் பாடலைக் கேட்ட மன்னனும் அமைச்சனும் உரையாடுவதனை, உரைநடையில் அமைந்துள்ளார். பாடலிடையே உரைநடை வருதனால், இதனை 'உரையிடையிட்ட செய்யுள் நாடகம்' எனலாம்.

இவ்வாறாகப் பாவேந்தர், சமூகப்பின்னணியை அடிப்படையாகக் கொண்ட பலவித ஆக்கப்படைப்புக்களை உருவாக்கித் தமிழுக்கு வளம் சேர்க்கின்றார். சமூகத்தில் ஏற்பாடும் பலவிதப் பிரச்சினைக்களுக்கும் கவிதை வாயிலாகவும், இதழ்கள் வாயிலாகவும் தன் கருத்துக்களை எவ்விதத் தயக்கமின்றி வெளிப்படுத்தி மக்களுக்கு வெளிப்படையாகக் கூறியுள்ளார் பாவேந்தர்.

**அடிக்குறிப்புகள்**

1. ச.சு. இளங்கோ, இலக்கியக் கோலங்கள் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 1996) பக்.3 -20.
2. சி. மெய்கண்டான், ஒப்பாய்வு நோக்கில் கம்பன் (அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைப் பவள விழா வெளியீடு, 2004)
3. ச.சு. இளங்கோ, இலக்கியக் கோலங்கள் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 1996) ப.10.
4. ச.சு. இளங்கோ, இலக்கியக் கோலங்கள் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 1996) பக்.16.
5. ச.சு. இளங்கோ, இலக்கியக் கோலங்கள் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 1996) பக்.14.

**நூற்பட்டியல்**

1. நல்வழி, ந.மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள், கழக வெளியீடு, சென்னை.
2. பாரதிதாசன் கவிதைகள், பூம்புகார் பதிப்பகம், 63, பிராட்வே, சென்னை – 108.
3. ச.சு. இளங்கோ, இலக்கியக் கோலங்கள் நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை.
4. சி. மெய்கண்டான், ஒப்பாய்வு நோக்கில் கம்பன். அண்ணாமலைப் பல்கலைப் பவள விழா வெளியீடு, அண்ணாமலை நகர், சிதம்பரம். 2004
5. சுரதா கல்லாடன் (தொ.ஆ), கவிஞர்பாரதிதாசன் கவிதைகள, முழுத்தொகுப்புகள், மணிவாசகர் பதிப்பகம், சிங்காரத் தெரு, சென்னை.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**
**கோவிந்தராஜன், அ.** "சமூகப் பிரச்சனைகளில் இலக்கியங்களைச் சாடிய பாவேந்தர்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 7-12. டிஓஐ: 10.5281/zenodo.3628591.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Govindarajan, A.** "Pavendhar's Satire on Literature over Social Issues." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 7-12. DOI: 10.5281/zenodo.3628591.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# கட்டிடக்கலை நுட்பங்களில் ஆவுடையார்கோயில்
# Avudayarkovil and its Architecture

**முனைவர் செ. சாந்தி**, கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3.
**Dr.S.Santhi,** Guest Faculty, Department of History, Alagappa University, Karaikudi-3.
**ORCiD:** https://orcid.org/0000-0001-6965-2478
**DOI: 10.5281/zenodo.3628597**

## Abstract

*This study focuses on Temple art and Architecture of Avudayarkovil. The temple of Tamil Nadu has a long history and Archaeology among the temples in South India. The temple in South India context has always drawn the attention of students, when we trace the origin of the temple; there is clear mention of the Kottam and Kovil that mentioned in the Sangam literature. There is an appealing theory about the history of the temple in Tamil Nadu. The study has taken a challenge to understand the art and Architecture of Avudayar Kovil temple. It also attempts to collate all the existing research that has been under taken in the field of architecture, and potential contribution to the existing body of knowledge through a structural and sculpture analysis of Avudayar Kovil temple Architecture. The study comprises the details of Architecture plans of the temple, Iconography, and Iconometry of sculpture in the Avudayar Kovil temple. It includes the structure of pillars, ceiling, and painting of the Avudayar Kovil temple. Hence, the paper focuses on the art and architectural evidences in the Avudayarkovil Temple.*

**Keywords:** Temple Art, Architecture, Avudayarkovil, Tamil Culture.

**ஆய்வுச்சாரம்**

ஆவுடையார்கோயிலின் கட்டடக்கலையமைப்புகளைப் பற்றி ஆய்வு மேற்கொள்வதற்கு சில நூல்களின் தரவுகளும் பின்பற்றப்பட்டுள்ளன. பெர்ஸி பிரௌன் என்பவர் எழுதிய Indian Architecture என்னும் நூலினையும், ழுவேதுப்ராய் என்பவர் எழுதிய Dravidian Architecture என்ற நூலினையும், ஜே.சி.கார்லே என்பவர் எழுதிய The Art and Architecture of Indian subcontinent என்ற நூலினையும், கே.ஆர்.சீனிவாசன் என்பவர் எழுதிய Temples of South India போன்ற கலை வரலாற்று நூல்களையும், பி.கே.ஆச்சார்யா என்பவர் எழுதிய Indian Architecture According to Manasara A Dictionary of Hindu Architecture என்னும் ஆகம நூல்களின் தரவுகளையும் பின்பற்றப்பட்டுள்ளன. இக்கோயிளின் அதிட்டானங்கள் முப்பட்டைக்குமுதம், விருத்தக்குமுதம், கடகவிருத்தக் குமுதமான கலையமைப்புகளுடனும், தூண்கள் சிம்மத்தூண், குதிரைத்தூண், அணிவெட்டுக்கால்தூண், தரங்கப்போதிகைத்தூண், இசைத்தூண், யாளித்தூண் போன்றத் தூண்களின் கலையமைப்பினையும் விளக்கப்பட்டள்ளன. விமானங்கள் திராவிடக் கலைப்பாணியைக் கொண்டு இரண்டுதளம் முதல் ஐந்துதள விமானங்களாகவும் அமைந்துள்ளன. பிற்காலப் பாண்டியர்களின் கலைப்பாணியைக் கொண்ட கட்டுமானக் கோயில்களும் அதிகமாகக் காணப்படுகின்றன. மேலும் தஞ்சை நாயக்கரின் மண்டபக் கொடுங்கைச் சிறப்பினையும், நாயக்கரின் கலைப்பாணியைப் பின்பற்றிய அறந்தாங்கி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தொண்டைமான் மன்னர்களின் கோயில்களின் கட்டடக்கலையினைப் பற்றியும் கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளன.

கட்டடக்கலையானது நாகரிகத்தின் சிறப்பம்சங்களில் ஒன்றாகக் கருதப்படுவதைப் போல தமிழகக் கோயில்களின் கட்டடக்கலையும் முக்கியப்பங்கு வகிக்கின்றன. சங்ககாலத்தில் செங்கற்களாலும், சுண்ணாம்புகளாலும் கோயில்களை எடுப்பித்து பின்பு கி.பி.6ம் நூற்றாண்டில் பல்லவர் மற்றும் முற்காலப்பாண்டியர்களின் காலத்தில் குடைவரைகள் மலைத்தளிகளாகவும் சோழர்களின் காலத்தில் அதிட்டானவர்க்கங்களாக, பித்தி, பிரஸ்தரம், விமானம் போன்றக் கலைக் கூறுகளுடன் அமைந்தக் கற்றளிகளாகவும், உயர்ந்த மண்டபங்கள், உயர்ந்தக் கோபுரங்களைக் கொண்டக் கற்றளிகளாகவும் வளர்ச்சிப் பெற்றுள்ளன. மேலும் இலக்கியங்கள், கல்வெட்டுகள்[1], செப்பேடுகளின் அடிப்படையில் கோயில்களின் வரலாற்றை தொகுப்பதைப் போல் இச்சான்றுகள் கிடைக்கவில்லையெனினும் கோயில்களில் கட்டடக்கலைப்பாணியைக் கொண்டும் இதன் காலத்தை நிர்ணயம் செய்யமுடியும் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.[2] தமிழகத்தின் புதுக்கோட்டை மாவட்டத்தின் 11 வட்டங்களுள் ஒன்றான ஆவுடையார் கோயில் புதுக்கோட்டையிலிருந்து 54 கி.மீ தொலைவிலும், அறந்தாங்கியிலிருந்து 20 கி.மீ தொலைவிலும், கிழக்கில் வங்கக்கடல் எல்லையையும் மேற்கில் திருமயம் வட்டத்தையும், தெற்கில் திருவாடனை வட்டத்தையும் வடக்கில் அறந்தாங்கி வட்டத்தையும், வெள்ளாற்றின் தென்கரையில் கடல்மட்டத்தின் மேற்பரப்பில் 20 கி.மீ தொலைவில் அமையப்பெற்றுள்ளது. இதனடிப்படையில் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ள ஆவுடையார்கோயிலின் கட்டடக்கலைப்பாணியை ஒவ்வொருக் காலக்கட்டத்தையும் மையப்படுத்தி ஆய்வு மேற்கொண்டு பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளன.

**கருவறை அதிட்டானம்**

தமிழகக் கல்வெட்டுகளில் கோயில்கள் ஆகம விதிமுறைப்படி அமைந்திருந்தன என்பதைப் பற்றி உத்திரமேரூர் கல்வெட்டுகளில்[3] குறிப்பிடப்பெற்றுள்ளதைத் தொடர்ந்து அதிட்டானம் குறித்தச் சான்றுகளை புதுக்கோட்டை மாவட்டம் சித்தன்னவாசல் குடைவரைக் கோயிலின் பிராமிக் கல்வெட்டுக்களும் சான்றுபகர்கின்றன.[4] பொதுவாகக் கோயிற் கட்டடக்கலையின் மரபானது கருவறை, விமானம், கோபுரம், மண்டபம், திருநடைமாளிகை, பிரகாரம் போன்றக் கட்டடக்கலை உறுப்புகளின் தாங்குதளம் அதிட்டானத்தைக் கொண்டே அமைந்துள்ளன. ஆகம நூல்களுல் மானசாரம், காரணாகமம், சுப்ரபேதாகமம், விசுவகர்ம வாஸ்து சாஸ்திரம், தீப்தாகமம், அம்சுமத் பேதாகமம் போன்ற ஆகமங்கள் அதிட்டானங்களின் வகைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.[5] இவ்வதிட்டான வகைகளில் பாதபந்தம், பிரதிபந்தம் தமிழகக் கற்றளிகளில் அதிகமாகக் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.[6] இதனடிப்படையில் ஆய்விற்கு உட்பட்டுள்ள ஆவுடையார்கோயிலின் கருவறை அதிட்டானங்களை ஆகமவிதிகளின்படி விளக்கப்படுகின்றன. பொதுவாக அதிட்டானம் என்பது உபானம், பத்மம், ஜகதி, குமுதம், கண்டம், பட்டிகை, பித்தி, பிரஸ்தரம், விமானம் என்னும் கலை உறுப்புகளுடன் அமையப்பெறுவதை பின்வருமாறு விளக்கப்படுகின்றது. இக்கோயிலின் கருவறையானது உபபீடம் மறைக்கப்பட்டவாறு கபோதபந்த அதிட்டானமாகக் காட்டப்பட்டுள்ளது. பிற்காலப் பாண்டிய மன்னர்களால் இக்கோயில் செப்பனிடப்பட்டிருக்கலாம் எனக் கருதமுடிகின்றது.

**உபபீடம்**

உபபீடம் என்பது கருவறையின் அதிட்டான அடிதளத்தின் முதல் அங்கமாக அடிப்பகுதியில் மறைக்கப்பட்டவாறு அல்லது உயரமானதாகக் காட்டப்படும்.[7] இப்பீட அமைப்பில் அதிட்டானத்தை கம்பீரமாகக் காட்டப்படும் கலையமைப்பானது இக்கோயிலின் மண்டபங்களில் காணப்படுகின்றன.

**ஜகதி**

உப்பீடத்திற்கு மேலுள்ள உறுப்பானது ஜகதி அல்லது பத்மஜகதி எனக் குறிப்பிடப்பெறுகின்றது.[8] இக்கோயிலின் கருவறை அதிட்டானத்தின் ஜகதி அமைப்பானது பத்ம

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

ஜகதியாகவே காட்டப்பட்டுள்ளன. பத்மம் விரிந்த நிலையில் தலைகீழாக கவிழ்த்து வைத்தது போல் மிகவும் நேர்த்தியாக காட்டப்பட்டிருக்கிறது.

**பட்டிகை**

அதிட்டானத்தில் ஜகதிக்கு அடுத்த உறுப்பு பட்டிகையாகவும். இப்பட்டிகைக்கும் ஜகதிக்குமிடையே ஒரு சிறிய சட்டத்தைப் போன்று கம்பு அமைப்பு காட்டப்படுகின்றது. பட்டிகையமைப்பானது மகாப்பட்டிகையாகவும், பத்மப்பட்டிகையாகவும் காணப்படுவதோடு அதிட்டானத்தை எடுப்பானத்தோற்றத்துடன் காட்டுவதற்கு இப்பட்டிகையமைப்பு முக்கியத்துவம் பெறுகின்றது.[9] இக்கோயிலின் அதிட்டானத்தில் மகாப்பட்டிகையாக காணப்படுகின்றன.

**குமுதம்**

பட்டிகைக்கு அடுத்த உறுப்பு குமுதமாகும். பட்டிகைக்கும் குமுதத்திற்குமிடையே சிறியளவில் உள்பதுங்கியவாறு அதிட்டானத்தை எடுப்பானத்தோற்றத்துடன் காட்டப்படுவதற்கு கண்டம் என்னும் பகுதி அமையப்பெற்றுள்ளது. இக்கண்டத்திற்கு மேல் குமுதமானது மூன்று பட்டைகளுடன் கூடிய முப்பட்டைக் குமுதமாகவும், வட்டவடிவில் விருத்தக் குமுதமாகவும், விருத்தக் குமுதத்தில் வரிமானங்களுடன் அலங்கரிக்கப்பட்டக் கடகவிருத்தக் குமுதமாகவும் காணப்படுகின்றன.[10] இவற்றுள் இக்கோயிலில் கருவறையானது முப்பட்டைக் குமுதமாக காணப்படுகின்றன.

**கண்டம்**

குமுதத்திற்கு மேலுள்ளக் கண்டத்தில் பாதவர்க்கங்கள் காட்டப்பட்டுள்ளன. பொதுவாக கண்டத்தினுள் குள்ளப்பூதம், யாளி போன்றச் சிற்பங்கள் காணப்படுவதுண்டு. இதுபோன்ற அலங்காரங்கள் இக்கோயிலில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**பட்டிகை**

கண்டத்தின் மேல் பட்டிகைப் போன்ற அமைப்பு காணப்படுகின்றது. சிறிய அளவிலான பட்டிகையமைப்பானது கபோத அலங்காரங்களுடன் பட்டிகையின் முனைப்பகுதி நீள்சதுரமாக இல்லாமல் பத்மம் போன்று சற்று வளைந்தவாறு இலை அலங்காரத்துடன் பத்ரலதாவும், கர்ண அலங்காரங்களுடனும் காணப்படுவதுண்டு. இக்கபோதப் பட்டிகையமைப்பைக் கொண்ட அதிட்டானமானது இக்கோயிலில் காட்டப்பட்டுள்ளன.

**கம்பு**

பட்டிகைக்கும், கண்டத்திற்கும் இடையே கம்பு போன்ற சிறிய அளவிலான சட்டம் காணப்படுகின்றது.[11] இச்சட்ட அமைப்பில் கபோதப் பட்டிகையை ஒட்டினாற் போல் இக்கோயில் கருவறையின் அதிட்டானத்தில் வியானவரி என்னும் யாளிச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

**கண்டம்**

பட்டிகைக்கும், வேதிகைக்குமிடையே பாதவர்ககங்களுடன் கூடிய கண்டமைப்பானது காணப்படுகின்றது.

**வேதிகை**

கண்டத்தின் மேல் பத்மவரிகளும், பத்மம் கவிழ்த்து வைக்கப்பட்டதைப் போலும், விரிந்த நிலையிலும் அதன்மேல் சிறியப்பட்டிகையும், கம்பும் இடம்பெற்றவாறு வேதிகையமைப்பானதுக் இக்கோயிலில் காணப்படுகின்றன. மேலும் பித்தி, எழுதகம், கபோதம், பிரஸ்தரம், விமானம் போன்றக் கலையமைப்புகளை பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

**பித்தி**

பித்தி என்பது அதிட்டானத்திற்கு மேலுள்ளக் கருவறையின் சுவர் பகுதியாகும். இச்சுவர் பகுதியை அலங்கரிக்கும் விதமாக அரைத்தூண்கள், தேவகோட்டங்கள், பஞ்சரங்கள் போன்றவை இக்கோயிலில் இடம்பெற்றுள்ளதைக் கீழ்கண்டவாறு விளக்கப்படுகின்றன.

**அரைத்தூண்கள்**

அரைத்தூண் என்பது சுவர் பகுதியில் அலங்கரிக்கப்படும் கலையமைப்புகளுல் ஒன்றாகும். சதுரம், அரைவட்டம், பதினாறுபட்டை என்னும் வரிமானங்களுடன் அரைத்தூண்கள் காட்டப்படுகின்றன.[12] அரைத்தூண்களின் சதுரப்பகுதியில் சிற்றுருவச் சிற்பங்கள் இடம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பெறுவதை தென்திருப்பேரை மகரநெடுங் குழைக்காதன் கோயிலில் காணலாம் என்பது குறிப்பிடத்தக்கது.[13] அரைத்தூண்களுள் போதிகையமைப்பானது வெட்டுப்போதிகை, தரங்கப்போதிகை, பூமுனைப்போதிகை என்னும் கலை அலங்காரங்களுடன் காணப்படுகின்றன. இப்போதிகை அமைப்பைக் கொண்டுக் கோயில்களின் காலத்தையும் கணக்கிடமுடியும். இக்கோயிலில் பூமுனைப்போதிகை அரைத்தூண்களின் கலைக் கூறுகளாக சதுரப்பகுதி, நாகபந்தம், கம்புப்பகுதி, மாலசுதானம், பத்மபந்தம், கலசம், தாடி, குடம், பத்மஇதழ், பலகை, வீரகண்டம், போதிகை என அமையப்பெற்றுள்ளது.

**தேவகோட்டம்**

தேவகோட்டம் கருவறையின் பத்ராப்பகுதி என்னும் மையப்பகுதியில் தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் மூன்று திசைகளிலும் அமையப்பெறும் கட்டடக்கலைக்கூறாகும். தேவகோட்டங்கள் சாலையமைப்புடையத் தேவகோட்டம், தோரணமாலைத் தேவகோட்டம் என இருவகைப்படுகின்றன. இவற்றுள் சாலையமைப்புடைய தேவகோட்டமானது கபோதத்தில் கர்ண அலங்காரங்களும் அதன்மேல் சாலையமைப்பைக் கொண்டும் தோரணமாலை தேவகோட்டமானது பலகை அல்லது கபோதத்தின் மேல்பகுதியில் பத்ர, சித்ர, மகர என்னும் மூன்று தோரணங்களில் ஏதேனும் ஓர் அமைப்புடன் காணப்படும்.[14] மேலும், இதைப்போல் கோட்டப்பஞ்சர அமைப்பானது கருவறையின் சுவர்ப்பகுதியில் தேவகோட்டத்தின் இருமருங்கிலும் அகாரை மற்றும் கர்ணப்பகுதியில் ஓர் அலங்கார வேலைப்பாடாக அமைக்கப்படுகின்றன. இக்கோட்டப் பஞ்சரங்கள் விஜயநகர நாயக்கர் காலம்வரை வளர்ச்சியடைந்து வந்துள்ளன.[15] இவற்றுடன் கும்பப்பஞ்சரம் என்பது கீழிருந்து மேலாகக் கலசம், கால்பகுதி, பஞ்சரம் என அமைந்து சுவர்பகுதியை அலங்கரிக்கின்றன. கும்பப்பஞ்சாரத்தைப் போல் அல்லாமல் சற்று வேறுபாட்டுடன் கம்பப்பஞ்சார அமைப்பானதுக் காணப்படுகின்றது. கும்பப் பஞ்சாரத்தின் கீழேக் காணப்படும் கலசம் போன்ற அமைப்பானது கம்பப்பஞ்சாரத்தில் காட்டப்படாமல் கம்பு போன்ற அமைப்புடன் நீண்டுக் காணப்படுவது கம்ப பஞ்சாரமாகும்.[16] இக்கோயிலில் சாலையமைப்புடையத் தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. தோரணமாலையமைப்பு பெரும்பாலும் அம்மன் கருவறையில் இடம்பெற்றுள்ளன. இத்தேவக்கோட்டங்களில் ஆகம இலக்கணக் கட்டடக்கலைக் கூறுகளாக அதிட்டானம், கால், மாலசுதானம், பத்மபந்தம், கலசம், தாடி, குடம், பத்ம இதழ், பலகை, வீரகண்டம், அமுதகம், கபோதம், சாலை, கபோதம், கலசம் என இடம்பெற்றிருக்கின்றன.

**சாளரம்**

கோயில்களின் கட்டடக்கலைக் கூறுகளில் சாளரங்கள் அலங்கார வேலைப்பாட்டுடன் பயன்பாட்டுத் தேவைக்காக கருவறையின் வெளிச்சுவரிலும், அர்த்தமண்டபச் சுவரிலும், இடம்பெறுகின்றது. பெரும்பாலும் திருச்சுற்று இல்லாதக் கருவறைச் சுவரில் சாளரங்கள் இடம்பெறுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சாளரங்கள் தமிழகத்துக் கோயில்களில் பல்லவர் காலந்தொட்டே இடம்பெற்றுவந்துள்ளன. பிற்காலத்தில் சாளரங்கள் பல்வேறு அமைப்புகளில் செதுக்கப்பட்ட தோடல்லாமல் அவற்றினிடையே சிறு அளவிலான சிற்பங்களையும் இடம்பெறச் செய்துள்ளனர்.[17] இச்சாளர அமைப்புகள் இக்கோயிலின் அர்த்த மண்டபங்களில் அதிகமாக இடம்பெறுகின்றன. அம்மன் கருவறையின் முன்பு பெரிய அளவிலானச் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இச்சாளரம் அம்மனைத் தரிசிப்பதற்காக அமைக்கப்பெற்றுள்ளது. இவ்வாறு வழிபாட்டு முறைக்கும் சாளரங்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை இக்கோயில் சாளரத்தின் மூலம் அறியமுடிகின்றன.

**எழுதகம்**

கருவறையின் பித்தி மற்றும் கபோதத்தின் இடையேயுள்ள புடைப்புப் பகுதியே எழுதகஎனக் குறிப்பிடப்பெறுகின்றன. பல்லவர்களின் காலத்திலிருந்து சோழர், பிற்காலப் பாண்டியர்களின் காலம் வரை எழுதகப் பகுதியில் குள்ளப்பூதங்களின் சிற்பமும், பத்மம், அன்னவரிசை என்னும் அலங்கார வேலைப்பாகள் காணப்படும். விஜயநகர, நாயக்கர்களின் காலத்தில் இவை மாற்றப்பட்டு பெருமளவில் வளைந்தக் கட்டையமைப்பு இடம்பெறுகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

சிலக் கோயில்களில் எவ்வித வேலப்பாடுமின்றி புடைப்பாகவே அமைந்திருக்கும்.[18] இதைப் போன்ற எழுதகப்பகுதியே இக்கோயிளிலும் காணப்படுகின்றன.

**கபோதம்**

எழுதகத்தின் மேலும் பிரஸ்தரத்தின் கீழும் காணப்படுவது கபோதப் பகுதியாகும். கபோதத்தில் கர்ணக்கூடுகள், சிம்மமுகக் கர்ணக்கூடுகள், மகாநாசிக் கர்ணக்கூடுகள், பத்ரலதா போன்ற அலங்கார வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. இக்கபோதப் பகுதியானது மழைநீர் உள்ளே வருவதை தடுப்பதற்காக அமைக்கப்பெறும் கட்டடக்கலைக் கூறுகளில் ஒன்றாகும்.[19] இக்கபோத அமைப்புகள் இக்கோயிலின் அனைத்து மண்டபங்களின் கபோதத்தில் கர்ணக்கூடுகளும் கூடுகளில் சிற்பங்களும் மிக நேர்த்தியாக அமையப்பெற்றுள்ளன.

**பிரஸ்தரம்**

பிரஸ்தரம் என்பது எழுதகம் கபோதம் போன்ற கூறுகளைக் கொண்ட அமைப்பாகும். இப்பிரஸ்தரம் பகுதியில் யாளிசிற்பங்கள் இடம்பெறுகின்றன. இப்பிரஸ்தரத்திற்கு மேல் கருவறையின் விமானங்கள் அமைக்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.[20] யாளி வரிசையுடன் கூடிய பிரஸ்தர அமைப்பு இக்கோயில்களிலும் காணப்படுகின்றன.

**விமானம்**

விமானம் என்பது அதிட்டானம் பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி போன்றக் கலைக்கூறுகளைக் கொண்டதாகும். விமானமானது நாகரம், திராவிடம், வேசரா போன்றக் கலையமைப்புகளைக் கொண்டு அமையப் பெற்றுள்ளன. இக்கலையமைப்புகளில் ஸ்தூபி வரையில் சதுரமாக காணப்படுவது நாகரமாகவும், கிரீவத்திலிருந்து எட்டுப்படையாக காணப்படுவது திராவிடமாகவும், கீரிவத்திலிருந்து வட்டவடிவமாகக் காணப்படுவது வேசரம் என ஆகமக் கலைப்பாணிகளாக குறிப்பிடப்பெறுகின்றன.[21] இக்கோயிளின் ஆத்மநாதச்சுவாமி யோகாம்பிகை மாணிக்கவாசகரின் கருவறை களிலுள்ள விமானங்கள் சிதம்பரம் நடராஜர் கோயில் கருவறையில் விமானத்தை ஒப்பிட்டவாறு அமையப்பெற்றுள்ளது. மேலும் கோயில்களின் கருவறை விமானமானது திராவிடக் கலைப்பாணியில் ஏகதள் அமைப்புடன் காணப்படுகின்றன. இவ்விமானங்கள் கிரீவம், மகாநாசிக்கூடுகள், பதினாறு பட்டைகள் தீட்டப்பட்ட ஸ்தூபியுடன் பத்மம் கவிழ்த்து விரிந்த நிலையில் வைக்கப்பட்டதை போல் அதன்மேல் கலசமானது அமையப்பெற்றுள்ளது.

**மண்டபங்கள்**

பல்லவர் காலத்திலிருந்து விஜயநகர நாயக்கர் காலம்வரை கோயில்களின் கருவறை அர்த்த மண்டபத்தில் தொடங்கி முகமண்டபம் வசந்த மண்டபம், நடன மண்டபம், கல்யாண மண்டபம் என வளர்ச்சி நிலையில் பல்வேறு கட்டடக்கலைக் கூறுகளுடன் அமையப் பெற்றுள்ளன. மதுரை, தென்காசி போன்ற இடங்களிலுள்ள கோயில்களில் மண்டபங்களின் வளர்ச்சி நிலையைக் காணமுடிகின்றது. இதைப்போல ஆத்மநாதசுவாமிக் கோயில் கருவறை அந்தராளம் அமுத மண்டபம், அர்த்த மண்டபம், சுந்தரபாண்டிய மண்டபம், தில்லை மண்டபம், பஞ்சாட்சர மண்டபம், அச்சுதபூபால மண்டபம், வசந்த மண்டபம், உற்சவ மண்டபம், நெல்லியடி மண்டபம், ரகுநாதபூபால மண்டபங்களுடன் மூன்று பிரகாரங்களைக் கொண்டு அமையப்பெற்றுள்ளது. இம்மண்டபங்களின் கலைப் பாணியைக் கொண்டு ஒவ்வொரு காலகட்டத்திலும் வளர்ச்சியடைந்து வந்துள்ள இக்கோயிலின் கலை அமைப்பை பற்றிக் குறிப்பிடமுடிகிறது.

கருவறையிலிருந்து தில்லைமண்டபம் வரை பிற்கால பாண்டியர்களின் கலையமைப்பையும், பஞ்சாட்சர மண்டபத்திலிருந்து ரகுநாதபூபால மண்டபம் வரை தஞ்சை நாயக்கர்களின் கலைப் பாணியைக் கொண்டு இம்மண்டபங்கள் கம்பீரமான தோற்றத்துடனும், மிகப்பெரிய நீண்ட கொடுங்கை கலையமைப்பினையும் பின்வருமாறு விளக்கப்படுகிறது.

**அர்த்த மண்டபம்**

ஆத்மநாதச்சுவாமிக் கோயிலின் அர்த்த மண்டபமானது உருளை வடிவ

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

வெட்டுப்போதிகை அமைப்புடன் கூடிய எட்டு தூண்களைப் கொண்டுக் காணப்படுகின்றன. இம்மண்டபத்தின் கிறுக்கு மற்றும் மேற்குப் புறத்தில் வாயிற்பகுதிகள் அமையப்பெற்றுள்ளன.

**சுந்தரபாண்டிய மண்டபம்**

ஆத்மநாதச் சுவாமிக் கோயிலின் அர்த்த மண்டபத்திற்கு அடுத்தாற்போல் சுந்தரபாண்டிய மண்டபம் முதல் பிரகாரத்தில் பூமுனைப் போதிகை மற்றும் வெட்டுப்போதிகை கலையமைப்புடன் கூடிய தூண்களையும் தூண்களில் சிற்றரசர்களின் சிற்பங்களும், பிட்சாடணர், காளி, வில்லேந்தியவேலன், வீரபத்திரர், திருவாவடுதுறை ஆதீனக் கர்த்தர்களின் சிற்பங்களுடன் காணப்படுகின்றன. கருவறையின் தென்மேற்கு மாணிக்கவாசகரின் சன்னதியும், மேற்கில் சொக்கவி நாயகரின் சன்னதியும், மேற்கு நோக்கியவாறு வீரபத்திரரின் சன்னதியும், வடமேற்கு மூலையில் யோகாம்பிகையின் சன்னதியும், கருவறையின் பின்புறம் மேற்கு நோக்கியவாறு இலிங்கவடிவில் குருந்தமூலச் சன்னதியும், வடக்கில் திருவாசகச் சன்னதியும், ஆடல்வல்லானின் சன்னதியும், தீர்த்தக் கிணறும், தென்கிழக்கு மூலையில் சுப்பிரமணியரின் சன்னதியும், அமையப் பெற்றுள்ளன. திருப்புனவாசல், மீமிசல் போன்ற இடங்களில் உள்ள கோயில்களின் அர்த்தமண்டபத்திற்கு அடுத்தாற்போல் முக மண்டப அமைப்பு பூமுனைப் போதிகை, சிம்மப் போதிகை, வெட்டுப்போதிகை கலையமைப்புகளைக் கொண்டத் தூண்களுடன் இம்முகமண்டபங்கள் அமையப்பெற்றுள்ளன.

**தில்லை மண்டபம்**

ஆத்மநாதச்சுவாமிக் கோயிலின் முதல்பிரகாரத்திற்கு அடுத்தாற் போல் இரண்டாம் பிரகாரத்தில் தில்லை மண்டபம் துவார வலம்புரி, இடம்புரி விநாயகரின் சிற்பத்துடன் திருமாளிகை பத்திகை என்னும் திருநடைமாளிகையில் வெட்டுப்போதிகை அமைப்புடன் கூடிய தூண்களும், நான்கு மூலைகளிலும் விநாயகரின் சிற்பங்களும், நடனமாதர்களின் சிற்பங்களும், இம்மண்டப நுழைவாயிலில் ஐந்து நிலைகளைக் கொண்ட கோபுரம் காணப்படுகின்றன.

**பஞ்சாட்சர மண்டபம்**

இம்மண்டபம் நவரங்க மண்டபம், யாழிமண்டபம், கோயில் முன்மண்டபம், நமச்சிவாய மண்டபம், குதிரைச்சாமி மண்டபம், கனகசபை என்னும் பெயர்களில் இக்கோயிலின் மூன்றாம் பிரகாரத்தில் அமையப்பெற்றுள்ளன. இம்மண்டபத்தை மொத்தம் 44 தூண்கள் மேல்விதானத்தை தாங்கியது போல் அமைந்துள்ளன. இத்தூண்களில் அடிமுதல் நுணிவரை பல வகையானச் சிற்பங்கள் மிக எழிலாக மாணிக்கவாசகரின் அமைச்சர் கோலம், குதிரை வீரனாக வந்த சிவபெருமான், அமர்ந்த நிலையில் அரிமர்த்தன பாண்டியன், குறுநிலத் தலைவன், குதிரைகளின் கீழ் ஊளையிடும் நரிகள், நடனமாதர்கள், குள்ளப் பூதங்கள், இறை உருவங்கள் கொடிப் பெண்கள் போன்றப் புடைப்புச் சிற்பங்கள் நேர்த்தியாக அமைந்துள்ளன. மண்டபத்தின் மேல்விதானத்தில் பலவகைப் புராணக் காட்சிகள், பாண்டிய நாட்டில் திருஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றுதல், பாண்டிமாதேவி திருஞானசம்பந்தப் பெருமானை வணங்கி வரவேற்கும் காட்சி ஓவியங்களாக தீட்டப்பட்டுள்ளது. மேலும் இவ்விதானத்தில் 5 கலைகளின் உருவம் 11 மந்திரங்களின் உருவம், 36 தத்துவங்கள், 5 அட்சரங்கள், 8 பதங்கள், 224 புவனங்கள் என இந்த 6 வகையான அமைப்புகள் புடைப்புச் சிற்பங்களாக கல்வெட்டுக்களுடன் காட்சி தருகின்றன.

**மண்டப அதிட்டானம்**

இம்மண்டபத்தின் உபபீடம் மறைக்கப்பட்டவாறு அதிட்டானம் கபோதபந்த வகையைச் சார்ந்ததாகவுள்ளது. குமுதம் முப்பட்டைக் குமுதமாகவும் பத்மம், கம்பு, காலபாதம், கம்பு, கபோதகம், கம்பு போன்ற அமைப்புகள் கொண்டதாக இவ்வதிட்டானமானது காணப்படுகின்றது. இம்மண்டபத்தின் தூண்களாக கூட்டுத் தூண், இந்திரக்காந்த தூண்கள், யாளித்தூண், குதிரைத்தூண், சதுரப்பட்டைத்தூண், மனித உருவம் நிற்கும் தூண், தூவாரபாலகர் நிற்கும் தூண் என பலவகையானத் தூண்கள் காணப்படுகின்றன. இம்மண்டபங்கள் நாயக்கரின் கலையமைப்பைக் கொண்டும் இம்மண்டபத்தின் விதானத்தின் கபோதக் கொடுங்கை அமைப்பானது நேர்த்தியாக சித்தரிக்கப்பட்டுள்ளது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**அச்சுதபூபால மண்டபம்**

இம்மண்டபம் மூன்றாம் பிரகாரத்தில் உற்சவ மண்டபத்தோடு இணைந்தவாறு காணப்படுகிறது. இம்மண்டபத்தில் சிம்ம முகத்தூண்கள் போதிகைத் தூண்கள், இசைத்தூண்கள், யாளித்தூண்கள் மண்டபத்தின் மேல்தளம் மூடப்பட்டவாறு விதானங்களில் கற்சங்கிலிகளும் இடம் பெற்றுள்ளன. இம்மண்டபத்தின் கொடுங்கையில் காணப்படும் சிறுதுளைகள் கொடுங்கையில் கணத்தை மையமிட்டவாறு அமையப்பெற்றுள்ளது சிறப்புக்குரிய ஒன்றாகும். மேலும் இம்மண்டபத்தில் முத்து விநாயகரின் சிற்பம், மகாலிங்கமூர்த்தி சன்னதி தூண்களில் இரதி மன்மதனின் சிற்பங்களும் இடம் பெற்றள்ளன.

**வசந்த மற்றும் நெல்லியடி மண்டபம்**

இம்மண்டபங்கள் மூன்றாம் பிரகாரத்தில் வடகிழக்கு மூலையில் வசந்த விநாயகரின் சிற்பத்தோடு வசந்த மண்டபமாகவும் அதனருகில் நெல்லியடி மண்டபமும் அமைந்துள்ளது. இம்மண்டபத்தில் பதினாறு பட்டைகளை கெண்ட வெட்டுப்போதிகை தூண்கள் காணப்படுகின்றன.

**இரகுநாத பூபால் மண்டபம்**

இக்கோயில் உற்சவ சடங்குகளுக்காக மூன்று மண்டபங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று மாணிக்கவாசகர் தெற்கு நோக்கி அமைந்துள்ள இக்கோயிலின் மூன்றாவது மண்டபம் இரகுநாத பூபால மண்டபம் ஆகும் மூன்றாம் பிரகாரத்தில் அமைந்துள்ள இராஜகோபுரத்தின் முன்பு இம்மண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தின் நுழைவாயிலிருந்தே சுவாமி சன்னதியையும் இம்மண்டப . அதிட்டானத்தின் மேலே உள்ள சன்னல் வழியாக இராஜகோபுரத்தையும் காணலாம். மண்டப அதிட்டானம் தூண்களைத் தாங்கியவாறும் இம்மண்டபக் கொடுங்கை மிகவும் சிறப்பாகவும் அமைந்துள்ளது. இம்மண்டபத்தை விட பெரிய மண்டபங்கள் மதுரை நாயக்கர்களால், திருநெல்வேலி, மதுரை, மாவட்டங்களில் காணப்படினும் இக்கோயில் மண்டப் கொடுங்கை அமைப்பு மற்றக் கோயில்களை விட சிறப்பாக அமையப்பெற்றுள்ளன.

தென்காசிப் பகுதியில் தோன்றி வளர்ந்த நாயக்கர்கால கலைஞர்களால் இம்மண்டபம் கட்டப்பட்டுள்ளதாகவும் தென்காசிப் பாணியை இம்மண்டப தூணின் சிற்பங்களிலும் காணலாம் என்றும் இம்மண்டபம் தஞ்சை நாயக்கரான இரகுநாதன் காலத்தில் கட்டப்பட்டது என்பதற்கு சான்றாக மாணிக்கவாசகர் மண்டபத்தில் தஞ்சை நாயக்க மன்னரான இரகுநாத நாயக்க மன்னரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. ஆகவே இம்மண்டபத்தின் பெயர் இரகுநாத பூபால மண்டபம் என்றும், மாணிக்கவாசக மண்டபம் என்றும் குடவாயில் பாலசுப்பிரமணியன் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.[22] மேலும் இம்மண்டப தூண்களில் இரகுநாத மன்னரின் சிற்பமும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். சிற்ப சாஸ்திர இலக்கண விதிகளின்படி இம்மண்டபம் உபபீடம், அதிட்டானம், தூண்கள், பிரஸ்தரம் கொடுங்கை என அமைக்கப்பெற்றுள்ளது.

**நந்திகேஷ மாணிக்கவாசகர் சன்னதி**

இம்மண்டபத்தைத் தாங்கும் அதிட்டானம் கபோதபந்த அதிட்டான வகையைச் சார்ந்ததாகும். இவ்வதிட்டானத்தின் அமைப்பானது உபானம், மகாபத்மம், கம்பு, கண்டம், கம்பு, பத்மம், எட்டுப் பட்டை குமுதம், சிறுபத்மம், கம்பு, கண்டம், பட்டிகை, பத்மம், கம்பு, கண்டம், கம்பு, கபோதம், வியாழவரி போன்றவை இடம்பெற்றுள்ளன. இவ்வதிட்டானத்தில் பத்மம் பெரிதாகவும் கடக விருத்தக் குமுதமும், எட்டுப்பட்டைக் குமுதமும் மாறிமாறி அமைந்துள்ளன. அதிட்டானம் பெரியதாகவும், உறுதியாகவும் அமைக்கப் பட்டுள்ளது. கபோதபந்த அதிட்டானத்தின் வளர்ச்சி நிலைகளை இவ்வதிட்டானம் எடுத்துக்காட்டுகின்றது. இம்மண்டபத்தின் அதிட்டானம் உயரமாக அமைக்கப்பட்டிருப்பதாலும், தூண்களின் கீழே காணப்படும். அதிட்டானம் சற்று முன்னோக்கியதாகவும் அதில் எண்பட்டை குமுதத்துடனும், தூண்கள் அதில் உயரமானதாக அமைக்கப் பட்டிருப்பதாலும் மண்டபம் பார்ப்பதற்கு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

கம்பீரமான தோற்றத்துடன் காணப்படுகிறது. இம்மண்டப அதிட்டானத்தில் மாணிக்கவாசகரின் சன்னதிக்கு செல்லும் வாயிற் படிகளில் யாளி அலங்காரங்கள் சித்தரிக்கப் பெற்றுள்ளன.

மாணிக்கவாசகரின் மண்டபத்தின் நடுவே சன்னதி கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம் 4 தூண்களுடன் மேடையும் அமைக்கப்பட்டுள்ளது. இம்மேடையின் மீது மாணிக்கவாசகருக்கு உற்சவ விழாக்கள் நடத்தப்படுகின்றன. முகமண்டபத்தில் யாளித் தூண்களும் பூமுனை போதிகைத் தூண்களும் அமைந்துள்ளன. மாணிக்கவாசகரின் விமானம் துவிதளமாகவும் இம்மண்டபக் கிழக்கில் ரகுநாதனின் பெயர் தூணில் பொறிக்கப்பட்டுள்ளன. இப்பகுதி முழுவதும் அஞ்சலி முத்திரையுடன் சிவனடியார்களின் சிற்பமும் விஷ்ணுவின் சிற்பமும் இடம்பெற்றுள்ளன. இம்மண்டபத்தில் பாலைவன ஜமீன்தார்களான வேதவன பண்டாரம், ஆறுமுக பாண்டாரம் ஆகியோர்களின் சிற்பமும் இடம்பெற்றுள்ளது. இம் மண்டப விதானத்தில் தலபுராணத்தை விளக்கும் ஓவியங்களும் இம்மண்டப அதிட்டானத்தில் இறைவன் பிட்டுக்காக மண்சுமந்த காட்சியும் அதனை அரசன் பார்வையிடும் காட்சியும் சிற்ப வடிவில் சித்தரிக்கப்பெற்றுள்ளன.

நந்திகேஷ மாணிக்கவாசகரின் கருவறை உபபீடம் பத்மபந்தமாகவும் அதிட்டானம், கபோதபந்தயாகவும் இடம் பெற்றுள்ளது. பத்மபந்த உபபீடம் உபானம், ஜகதி, கம்பு, மகாபத்மம், சிறுபத்மம், கம்பு, கண்டம், கம்பு, சிறுபத்மம், பட்டிகை, சிறுபத்மம், வாஜனம் போன்ற அலங்கார வர்க்கங்களுடனும் கபோதபந்த அதிட்டானமும் உபானம், பத்மம், கம்பு, ஜகதி, சிறுபத்மம், கண்டம், சிறுபத்மம், எட்டுப்பாட்டைக் குமுதம், சிறுபத்மம், கம்பு, கண்டம், கம்பு, வேதிகை, பித்தி வேதிகை என்னும் கலைக்கூறுகளுடன் இடம் பெற்றுள்ளது.அதிட்டானத்திற்கு மேல் பாதச்சுவர் இடம்பெற்றுள்ளது. இதில் 20 அரைத்தூண்கள், அகாரைப்பகுதியில் எட்டு கும்பலதா, 5 கோஷ்ட பஞ்சாரம் போன்றவை இடம்பெற்றுள்ளன. நீண்டசாலை சிகரத்துடன் அரைத்தூண்கள் தாங்கிய நிலையில் அமைந்துள்ளது. கும்பபஞ்சாரத்தில் சிகரப்பகுதி விமானம் போன்றும், கர்ணக்கூடு அதில் முகபத்ரமாக, நாசிக்கூடும். கூட்டின் மையப்பகுதியில் விநாயகரின் புடைப்புச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளது.

பாதச் சுவற்றுக்கு மேல் உத்திரம், கம்பு, வலபி, கபோதகம், வியாழவரி மற்றும் வேதிகை போன்ற கட்டுமான அமைப்புடன் பிரஸ்தரம் அமைந்துள்ளது. கபோதத்தில் நாசிக் கூடுகள் இடம்பெற்றுள்ளன. பிரஸ்தரத்திற்கு மேல் அகல வரிசையில் கர்ணகூடு, அகாரை மையசாலை, அகாரை, கர்ணக்கூடு போன்ற அலங்காரங்களில் முருகன், அர்த்தநாரீஸ்வரர், ஹஜசம்ஹாரமூர்த்தி, லிங்கோத்பவர் சிற்பங்கள் காணப்படுகின்றன. பிரஸ்தரத்திற்கு மேல் பாதச்சுவர், உத்திரம், கம்பு, வலபி, கபோதகம், வியாழவரி, வேதிகை, கண்டம், சிகரம், ஸ்தூபியுடன் இக்கருவறை விமானத்தின் கண்டப் பகுதியில் பூதகணம், ரிஷபவாகனம் போன்றச் சுதைச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளது. கண்டத்திற்கு மேல் சிகர அமைப்பு சதுரமாகவும், நான்கு நாசிகளுடன் முகபத்ரமாக கண்டகோஷ்டங்களில் மாணிக்கவாசகர் சிற்பம் இடம் பெற்றுள்ளது. இவ்விமான அமைப்பு ஸ்வஸ்திகா அமைப்பினைச் சார்ந்ததாகும்.

மாணிக்கவாசகர் சன்னதியின் அர்த்த மண்டபத்தைத் தொடர்ந்து யாளித்தூண் மற்றும் எட்டுப்பட்டை பூமுனை போதிகைத் தூண்களுடன் முகமண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தின் விதானத்தில் தாமரை மலர் பல அடுக்குகளாக தலைகீழாக தொங்குவது போன்று அமைந்துள்ளது. தூண்களுக்கு மேலுள்ள உத்திரத்தில் கொடிக்கருக்குகள் இடம்பெற்றுள்ளன. மாணிக்கவாசகர் சன்னதியைச் சுற்றி அமைந்துள்ளத் திருசுற்றுத் தூண்கள் பூமுனை போதிகைத் தூண்கள் மற்றும் பிள்ளைக்கால் தூண்கள் சித்திர கண்டக்கால் தூண்கள் மற்றும் குதிரைத் தூண்களுடன் அமைந்துள்ளன. மண்டப அதிட்டானத்தின் மேலுள்ள தூண்கள் சதுரப்பட்டத் தூண், பிரம்மகாந்த தூண், அணியொட்டிக்கால் தூண், ருத்ரகாந்தத் தூண், உபயதாரர் நிற்கும் தூண், குதிரை தூண், கோபுரத் தூண், 16 பட்டை யாளித் தூண், பூமுனைச் போதிகைத் தூண் காணப்படுகின்றன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**மண்டபங்களின் கொடுங்கை**

கருவறைகளின் கால்பகுதிக்கு மேலாக உச்சியில் திகழும் பூதவரிமானத்தினை அடுத்துக் காணப்பெறும் வளைந்தத் தளத்தின் விளிம்பிற்குக் கபோதகம் எனப் பெயர். மண்டபங்களுடன் ஒப்பிட்டுக் கூறும் போது கொடுங்கை என அழைக்கப்படும். கட்டடக்கலை வளர்ச்சியில் விஜயநகர நாயக்கர்களின் கலைப்படைப்புகளுள் மிகச் சிறந்த இடத்தைப் பெறுவது கொடுங்கை அமைப்புகளே எனலாம். சோழர் காலத்திய மண்டபங்களில் தஞ்சைப் பெரிய கோயில் கருவறை முதல்தள் கபோதகத்தின் உட்பகுதி மரவேலைப்பாடுகள் போன்ற குறுக்கு நெறுக்குச் சட்டம் ஆணி போன்ற கருங்கள் வேலைப்பாடுகளைக் காணலாம். இதே அமைப்பு மூன்றாம் குலோத்துங்கன் கோயிலான மாத்தூர், கீழப்பழையாறை போன்ற இடங்களில் வளர்ச்சிப்பெற்ற நிலையில் காணப்படுகின்றது.[23] இவையனைத்தையும் மிஞ்சும் வண்ணம் மிகச்சிறந்த நேர்த்தியான ஒரு கலை மரபை விஜயநகர நாயக்கர்களின் மண்டபக் கொடுங்கைகளிலும் விதானங்களிலும் மரவேலைப்பாடுகள் போன்று செதுக்கப்பெறும் கலைப்பாணியை காணமுடிகின்றது.

மேலும் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலின் மண்டபக் குறுக்கு கம்பி வேலைப்பாடுகள் போன்று பலகையானது கம்பியால் அறையப்பட்டது போன்றும் மரவேலைப்பாடுகளை ஒத்ததுப் போன்று கல்லினால் செதுக்கப்பட்டுள்ளது. இக்கோயில் கொடுங்கை அமைப்பு மற்ற கோயில்களுக்கு எடுத்துக்காட்டாகத திகழ்கின்றன. பிரஸ்தரத்தில் கொடுங்கையின் மேல் முனைகளில் திமிழ் அமைப்பும் கீழ் மூளையில் பாம்புகள் சங்கிலி போல் வளைக்கப்பட்டவாறு மழை நீர் விழுவதற்கு வளைவாக அமைக்கப்பட்டுள்ளது. இக்கொடுங்கை அமைப்பின் கலையமைப்பு அக்கால சிற்பிகளின் திறனை எடுத்தியம்புவதாக அமையப்பெற்றுள்ளது. இம்மண்டபத்தின் பிரஸ்தரம் சமதள அமைப்புடன் பூதகணங்கள் வரிசையாக சித்தரிக்கப்பட்டவாறுக் காட்டப்பட்டுள்ளது.

**தூண்கள்**

தூண் என்னும் சொல் ஸ்தூன் என்ற வடமொழிச் சொல்லிலிருந்து வந்ததாக மானசாரம் என்னும் ஆகம நூல்களில் குறிப்பிடப்படுகின்றன. தமிழகத்தில் சங்க காலத்திலிருந்தே தூண் பற்றியச் செய்திகள் இடம்பெற்றுள்ளதை இலக்கியங்களின் மூலம் அறியமுடிகின்றன.

வேள்வி முற்றி பூபநட்ட வியன்களம்[24] என்னும் புறநானூற்றுவரிகள் யாகங்களில் தூண் நடப்பட்டதையும் அகன்ற வேள்விச் சாலைகளையும் இச்சாலைகள் முழுவதும் நெடியத் தூண்கள் அமைந்திருந்ததையும் குறிப்பிடுகின்றது.

கல்வெட்டுக்களில் தூண் பற்றியச் செய்திகள் கால், தூண், ஸ்தம்பம் என்னும் சொற்களில் குறிக்கப்படுகின்றன.[25] நம் பல்லவர் குடைவரைகளில் திருக்கழுக்குன்றம் ஒருகல்மண்டபம் என அழைக்கப்பட்டச் செய்தியும், குரங்குநிலைமுட்டம், சித்தன்னவாசல் குடைவரைக் கல்வெட்டுக்களில் கால்மண்டபம் எனவும் பதினோராம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் திருநிலைக்கால்,[26] தோரணக்கால்,[27] எனவும் கி.பி.12ம் நூற்றாண்டுகளில் நூற்றுக்கால் மண்டபம் பற்றியச் செய்திகளும் கல்வெட்டுக்களில் இடம்பெறுகின்றன. சோழர்காலக் கல்வெட்டுக்களில் போதிகைப்படை[28] என தூணின் மேல்பகுதியைப் பற்றி குறிப்பிடப்படும் சொற்களும். விஜயநகர நாயக்கர்களின் காலத்தில் ஜெயஸ்தம்பம்,[29] கருடஸ்தம்பம்,[30] மானஸ்தம்பம்[31] என பல்வேறுவகையானத் தூண்களைப் பற்றியும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுள்ளன.

பல்லவர்களின் காலத்தூண்களுள் எண்கோணச் சதுரத தூண்களும், சிம்மத்தூண்களும் சுருள் இதழ் வட்டம், அன்னக்கொடி வட்டம், மதங்கமகர வட்டம், கின்னாரிவட்டம் போன்ற அலங்காரங்களுடன் கூடிய தூண்களை திருச்சி லலிதாங்குரன் குடைவரைகளில் காணமுடிகின்றன. முத்தரையர் மற்றும் இருக்குவேளிரின் தூண்கள் பதினாறு கோணத் தூண்களாகவும் இடம் பெறுகின்றன. முற்காலப் பாண்டியரின் குடைவரைகளில் எண்கோணதூண், பதினாறுக்கோணத் தூண், சதுரத்தூண், கூட்டுத் தூண்களும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பழுவேட்டரையரின் தூண்களும் காணப்டுகின்றன. சோழர்காலக் கலைப்பாணியில் வட்டத்தூண்களை திருவெறும்பூர், திருவிடைமருதூரிலும் பிற்காலச் சோழரின் கலைப்பாணியில் சிம்மத் தூண், கட்டுமஞ்சத்தூண், கூட்டுத்தூண், யாளிப்பாதமுடைய பதினாறு கோணச்சித்திரத் தூண்களும் அமையப்பெற்றுள்ளன. இதைப்போல விஜயநகர நாயக்கர்களின் காலத்தூண்களாக அணிவெட்டுக்கால்தூண், கூட்டுத்தூண், யாளித்தூண், குதிரைத்தூண், சுழல்தூண் போன்ற கலையமைப்புகளில் தூண்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன.இக்கோயில்களிலும் சோழர்காலம் தொடங்கி பிற்காலப்பாண்டியர், விஜயநகரர், நாயக்கர்களின் காலம் வரையுள்ள தூண்களைப் பற்றியும் தூண்களின் கட்டடக்கலைக் கூறுகளைப் பற்றியும், வெட்டுப்போதிகைத் தூண்களும், பூமுனைப் போதிகைத் தூண்களும் எட்டுப்பட்டை மற்றும் பதினாறுப்பட்டையுடன் காணப்படுவதைப் பற்றியும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

**எட்டுப்பட்டைத் தூண்**

தூணின் அதிட்டானம் நீள்சதுரம், நாகபந்தம், நான்குப் பட்டைச் சதுரம், எட்டுப்பட்டை சதுர அமைப்பில் இவ்வட்டாரக் கோயில்களில் வெட்டுப்போதிகையைக் கொண்டதூண்கள் அனைத்துக் கோயில்களிலும் காணப்படுகின்றன. பூமுனைப் போதிகைத் தூண் நீள்சதுரம், சதுரத்தில் கொடுக்கருக்கு அலங்காரங்களும், நாகபந்தம் பதினாறுப்பட்டை, பிரம்மக்கட்டு, சதுரம், பதினாறுப்பட்டை சதுரம், பூமுனைப் போதிகை அமைப்புடையத் தூண்கள் இக்கோயில்களில் காணப்படுகின்றன.

**கூட்டுத்தூண்**

இத்தூண்கள் பீடம், கண்டம், கபோதகம், சாலை, சிகரம் போன்ற அமைப்புடனும் இதன்மேல் நான்கு தூண்களும் இவற்றுள் இரண்டுத்தூண்கள் இசகாந்தத் தூணாகவும், இந்திரக்காந்தத் தூணாகவும் அமைந்துள்ளன. இத்தூண்களைத் தட்டும் போது ஓசை எழும்புவதால் இவை இசைத்தூண்கள் என்றும், நான்குத் தூண்கள் இணைந்துக் காணப்படுவதால் கூட்டுத் தூண்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. இத்தூண்கள் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலின் அச்சுதப்பூபால் மண்டபம், பஞ்சாட்சர மண்டபங்களில் மட்டுமே காணப்படுகின்றன.

**இசகாந்தத் தூண்கள்**

சதுரம், நாகபந்தம், தூணின் நடுப்பகுதி சதுரப் பட்டிகையுடன், கலசம், பத்மம், பலகை, சிம்மம் போன்றக் கலையமைப்புகளுடன் ஆத்மநாதச்சுவாமிக் கோயிலிலும் பெரிய பத்மத்தையும், பலகையும், கலசம், குடம், பூமுனைப்போதிகை எனக் கம்பீரமானத் தோற்றத்தோடு அமையப்பெற்றுள்ளன.

**இந்திராகாந்தத் தூண்**

இத்தூண் சதுரம், நாகபந்தம், பதினாறுப்பட்டை, சதுரம், பதினாறுப்பட்டை, சதுரப்பட்டிகை, சதுரம், பூமுனைப் போதிகையுடனும் இந்திரக்காந்தத் தூணானது சதுரம், நாகபந்தம், பதினாறுப்பட்டை, பிரம்மக்கட்டு, சதுரம் பதினாறுப்பட்டைக் கலசம் பத்மம், பலகை, போதிகையில் சிம்மமும் காட்டப்பட்டுள்ளது. இத்தூண்கள் ஆத்மநாதச் சுவாமிக்கோயிளில் காணப்படுகின்றன.

**சித்திரத் தூண்**

இத்தூண் கருக்கணி அலங்காரத்துடனும் சதுரம், எண்கோணம், சதுரம் வடிவுடையதாகவும் பூமுனைப் போதிகை அல்லது வெட்டுபோதிகை அமைப்புடன் காணப்படுகின்றன. இவ்வகைத் தூண்களில் சதுரத்தின் நான்கு பகுதிகளிலும் நாகபந்தம் இடம்பெறுகின்றது. இந்நாகப்பந்தம் என்னும் கலையமைப்பு விஜயநகர மன்னனான இரண்டாம் புக்கரின் காலத்திலிருந்து தான் இடம்பெற்றுள்ளன என சாலிடரி தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.[32] நாகத்தின் தலைபோல் அமையும் இவ்வமைப்பு நாயக்கர்களின் காலத்திலும் சிறப்பிடம் பெற்றுள்ளன. இத்தூண்களின் சதுரப்பகுதிகளில் மலர்க்கட்டு அல்லது பத்மபந்தம் சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. இதே கலையமைப்புடன் கூடியத் தூண்கள் ஆத்மநாதச்சுவாமிக்கு கோயில்களில் காணப்படுகின்றன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**வட்டத்தூண்**

இவ்வகைத்தூண் வட்டமாக உயர்ந்தவாறும் பூவேலைப் பாட்டுடன் கூடிய வெட்டுப்போதிகையமைப்பைக் கொண்டு சதுரம், எண்கோணம் பதினாறுகோணம், வட்டம் போன்றக் கலையமைப்புடன் காணப்படுவதை பிரம்மத்தூண், விஷ்ணுத்தூண், இந்திரத்தூண், உருத்திரத்தூண் அல்லது ஈசாத்தூண் எனவும் குறிப்பிடப்படுகின்றன. இவ்வகையான வட்டத் தூண்கள் ஆவுடையார்கோயிலில் காணப்படுகின்றன.

**அணிவெட்டிக்கால் தூண்**

அணிவெட்டிக்கால் அல்லது அணியொட்டிக்கால் எனக் குறிப்பிடப்படும் தூண்கள் ஆளுயரச் சிற்பங்களைக் கொண்ட ஒற்றைக்கால் தூண்கள் எனக் குறிப்பிடப்படுகின்றன. இவ்வகைத் தூண்கள் விசயநகரர் மற்றும் தஞ்சை, மதுரை, நாயக்கரின் கலைப்பாணிகளில் இடம்பெற்றுள்ளன. இத்தூண்களில் அரச, அரசியர் மற்றும் இறைவனின் சிற்பங்களும் இத்தூண்களின் கீழ்பகுதி அஸ்வபாதமாகவும் பின்புறமுள்ள தூணின் பகுதி சதுரம், எண்கோணம் அல்லது பதினாறுகோணம், போதிகைப் போன்ற கலைக்கூறுகளைக் கொண்டுக் காணப்படுகின்றன. இவ்வகையான தூண்கள் இவ்வட்ட ஆத்மநாதச்சுவாமிக் கோயில் நாயக்கர்கால மண்டபங்களில் அமையப்பெற்றுள்ளன.

**யாளித்தூண்கள்**

இத்தூணில் யாளியின் வடிவம் பாதமாகவும் அதன்மேல் பகுதி எண்கோணமாகவும், கூர்மையான நகங்கள், தெளிவான வடிவமைப்புடன் வால்பகுதியும், சுருள்சுருளாக முடிகள், அணி அலங்காரத்துடன் இடம்பெறும் மலரிடைக் கலசம், இதழ், கும்பம், பலகை ஆகியப் பகுதிகளில் கருக்கணி அலங்காரங்களும் காணப்படுகின்றன. யாளியானது பாய்வதைப் போலவும் அமையப்பெற்றுள்ளன. இத்தூணின் அஸ்வபாதம் அலங்காரத்துடன் காணப்படுகின்றது. இதுபோன்றத் தூண்கள் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலின் மண்டபங்களில் அமையப்பெற்றுள்ளன. **துதியாளித்தூண்**

இவ்வகைத்தூண்கள் யாளியுடனும், யாளியானது, பாய்வதைப் போலவும் இதன்துதியானது நீண்டுத் தொங்குவதைப் போன்றும், இவ்வடிவத்தின் மேல் தூணில் சரப்பட்டிகை, மாலை, மணி, கொடி, அணி அலங்காரங்களும் இதனுடன் மலரிடை, கலசம், தாடி, இதழ், பலகை வீரகண்டம், போதிகையெனும் அமைப்புடன் அமையப் பெற்றுள்ளன. இவ்வகையானத் தூண்கள் ஆத்மநாதச்சுவாமிக்' கோயிலின் மண்டபங்களில் காணப்படுகின்றன.

**குதிரைத்தூண்**

தூண்களோடு குதிரையானது இணைந்தவாறுக் காட்டப்பட்டுள்ளதால் குதிரைத்தூண் என்றும் அழைக்கப்படுகின்றன. இக்குதிரைதூணில் குதிரையின் மீது குதிரை வீரனோ, குதிரைச் சேவகனோ அமர்ந்தவாறும் குதிரையின் பிடரிகளை இழுத்துப் பிடித்தவாறு குதிரையின் முன்னங்கால்கள் தூக்கியவாறு பாய்வதைப் போன்று வேகத்தைக் காட்டியவாறும், குதிரையின் மீது வீரன் வாளுடன் காட்டப்பட்டவாறு இத்தூண்கள் அமையப்பெற்றுள்ளன. இத்தூண்கள் இவ்வட்ட நாயக்கரின் கலையமைப்பின் ஆத்மாநாதச் சுவாமிக்கோயிலின் மண்டபங்களில் காணப்படுகின்றன. மேலும் இத்தூண்களில் குதிரையின்மீது அமர்ந்துள்ள வீரன் வேட்டையாடுதல் போன்றும் காட்டப்படுவதால் வேட்டைக்காட்சியைத் - சித்தரிக்கும் தூண்களாகவும் அமையப்பெற்றுள்ளன.

**பறவைத்தூண்**

குதிரைச் சிற்பத்தைக் கொண்டுக் காணப்படும் தூண்கள் குதிரைத்தூண் எனவும், இதைப்போல பறவை வடிவம் செதுக்கப் பெற்றத் தூண்கள் பறவைத் தூண் என பவுன்துரை[33] தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். இத்தூணின் கால்பகுதியில் ஒருகிளியின் வடிவம் பெரிதாக வடிவமைக்கப்பட்டவாறும் கிளியின் மீது இரதி அமர்ந்தவாறும் இதனருகில் மன்மதன் நிற்கும் தூணும் காட்டப் படுகின்றன. இத்தூண்களின் அஸ்வபாதமும், தூணின் மீது கருக்கணி வேலைப்பாடுகளும், இருப்பக்கப் பூமுனைப் போதிகையையும் இவற்றுள் சதுரம், எண்கோணம், பதினாறு கோணம், வட்டம் போன்றவற்றுடன் இத்தூண்கள் காணப்படுகின்றன. இவ்வகையானத

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தூண்கள் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலில் நயக்கர்கால் மண்டபமான அச்சுதப்பூபால் மண்டபத்தில் இடம் பெற்றுள்ளன.

**கோபுரம்**

தமிழகக் கலைவரலாற்றில் கோபுரங்கள் குட்டைக் கோபுரங்களிலிருந்து உயர்ந்தக் கோபுரங்களாக வளர்ச்சிப் பெற்றுள்ளன. கோயில்களில் பொதுவாக கிழக்குத் திசையை நோக்கியவாறு - இராஜகோபுரங்கள் அமைக்கப்படுகின்றன. பலதிருச்சுற்றுகளை கொண்டக் கோயில்களில் நான்கு திசைகளிலுமே கோபுரங்கள் கட்டப்பட்டுள்ளன. கோயிலின் நடுவேயுள்ளக் கோபுரம் மத்தியக் கோபுரம் எனவும் கிழக்கில் உள்ளக் கோபுரம் பூர்வக் கோபுரம் என்றும், தெற்கில் உள்ளக் கோபுரம் தட்சிணக்கோபுரம் என்றும், மேற்கில் உள்ளக் கோபுரம் உத்திரக் கோபுரம் என்றும் வடக்கில் உள்ளக் கோபுரம் உத்திரக் கோபுரம் என்றும் இக்கோபுரங்களை சிற்பநூல்கள் பஞ்சக் கோபுரங்கள் எனக் குறிப்பிடுகின்றன. ஐந்துப் பிரகாரங்களைக் கொண்டக் கோயில்களில் இப்பஞ்சக் கோபுரங்களும் அமைக்கப் படுகின்றன. இக்கோபுரங்களில் மூன்று முதல் பதினொன்று வரை கலசங்களும் கோபுரத்தின் முன்பக்கமும், பின்பக்கமும் அகன்றவாறுக் காட்டப்பட்டு திறந்தநிலையில் சாளரங்களும் அமைக்கப்படுகின்றன.

மானசாரம் என்னும் சிற்பநூலானது அர்த்தமண்டபத்துக்கு அருகில் உள்ள கோபுரம் துவாரசோபை என்றும், இரண்டாம் பிரகாரத்தில் உள்ளக் கோபுரம் துவாரசாலை என்றும் மூன்றாம் பிரகாரத்தில் உள்ளக் கோபுரம் துவாரப்பிரகாரம் என்றும், நான்காம் பிரகாரத்தில் உள்ளக் கோபுரம் துவாரக் ஹர்மியம் என்றும், ஐந்தாம் பிரகாரத்தில் உள்ளக் கோபுரம் மாகமர்யதை என்றும் இவ்வைந்துக் கோபுரங்களும் மகாகோபுரம் மற்றும் இராஜகோபுரம் என குறிப்பிடப் படுகின்றன.

இதைப்போல் இக்கோயிளில் மூன்று நிலை முதல் ஏழு நிலைகளைக் கொண்டக் கோபுரங்கள் காணப்படுகின்றன. கோபுரங்கள் அமைந்துள்ள கோபுர நுழைவாயிலின் அதிட்டானம் மற்றும் பித்தி போன்றவை கலை வரலாற்றோடு தொடர்புடையதாக இருந்தாலும் இதன் மேலுள்ளக் கோபுரங்கள் தற்காலக் கலைப்பாணியைக் கொண்டுக் காணப்படுகின்றன. துவாரசோபை எனக் கூறப்படும் கோபுரம், ஒரு நிலையினையும், துவாரச்சாலை என்னும் கோபுரம் மூன்று நிலைகளையும், துவாரபிரசாதம் என்னும் விமானம் ஏழு நிலைகளுடன் இராஜகோபுரமானது தெற்கு நோக்கியத் திசையில் தட்சிணக் கோபுரமாக அமையப்பெற்றுள்ளது.

**கோபுர அதிட்டானங்கள்**

இக்கோயில்களில் கபோதபந்த உபபீடத்தை கொண்ட உபானம், பத்மஜகதி, மகாப்பட்டிகை, கம்பு, கண்டம், முப்பட்டைக் குமுதம், கண்டம் கண்டத்தினுள் பாதவர்க்கம், கபோத்ப்பட்டிகை, கம்பு, பத்மவரி, வேதிகை, கம்பு, பித்தி என கபோதபந்த அதிட்டானமாகக் காணப்படுகின்றது. இவ்வதிட்டானச் சுவர் பகுதிகளில் வெட்டுப் போதிகை அரைத்தூண், கும்பப் பஞ்சரம், கோட்டப்பஞ்சரம் மற்றும் எழுதகம், கபோதம், கபோதத்தின் மேல் யாளிவரிசை, பிரஸ்தரம், பிரஸ்தரத்தின் மீது கோபுரங்கள் எழுப்பப்பட்டுள்ளன.

**பிரகாரங்கள்**

கோயிலின் கருவறையிலிருந்து அதிகமான மண்டபங்களைக் கொண்டும் சன்னதிகளைக் கொண்டு விரிவுப்படுத்தப்பட்ட மதில்சுவருடன் கூடிய பிரகாரங்கள் கோயிலுக்கு அழகு சேர்ப்பவையாக அமைந்துள்ளது. இப்பிரகாரங்களை காரண ஆகமம் அர்த்த மண்டபத்தையடுத்து முதல் பிரகாரமும், அந்தர்துவாரத்தையடுத்து இரண்டாம் பிரகாரமும், மத்யபிராகரம் மூன்றாம் பிரகாரமாகவும், மர்யம் நான்காம் பிரகாரமாகவும், மகாமர்யம் ஐந்தாம் பிரகாரமாகவும் குறிப்பிடப்படுகின்றன.

இக்கோயிளில் மூன்று பிரகாரங்களைக் கொண்டு அமையப்பெற்றுள்ளன. அர்த்தமண்டபத்தை அடுத்துள்ள முதல் பிரகாரமானது மேல்தளம் மூடப்பட்டவாறும் பல வகைத் தூண்களுடனும், இரண்டாம் பிரகாரம் திருமாளிகைப்பத்திகை என்னும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

நடைமாளிகையுடன் தூண்கள் தாங்கியவாறு மேல்தளம் மூடபட்டவாறும், மூன்றாம் பிரகாரம் கனகசபை மண்டபம் சிவானந்த மாணிக்கவாசகர் சன்னதி, வெயிலு வந்தக் கணபதி, தீர்த்தக்குளம், அச்சுதபூபாலமண்டபம், வசந்த மற்றும் நெய்லியடி மண்டபம், தேவஸ்தானத்தைக் கொண்டுக் காணப்படுகின்றன. இப்பிரகாரங்களின் முன்பு இரகுநாதபூபால் மண்டபம் அமையப் பெற்றுள்ளது.

**பரிவாரச் சன்னதிகள்**

கோயில்களில் கருவையைச்சுற்றி பரிவாரசன்னதிகள் அமைக்கப்படுவது ஆகம முறைகளாகவும் கலைவரலாற்றோடு தொடர்புடையதாகவும் உள்ளன. இவை மட்டுமல்லாமல் நளபாகசாலை, யாகசாலை, கோசாலை, கஜசாலை, வாத்யசாலை, வாகனச்சாலை போன்றவையும் தனலாபம், தான்யாலய், சுரங்கப்பாதைகளும் அமையப் பெறுகின்றன. இதனைத் தொடர்ந்து கோயிலின் பரிவார சன்னதிகளைப் பற்றி விவரிக்கப்படுகின்றன.

**ஆத்மநாதச்சுவாமிக் கோயில்**

இக்கோயில் தெற்குத் திசையை நோக்கி அமைந்துள்ளதால் இக்கோயலிலுள்ள சன்னதிகளுக்கும் மற்ற கோயில்களின் சன்னதிகளுக்கும் வேறுபாடுகள் உள்ளன. இதனைப் பின்வருமாறு விளக்கப்படுகின்றன. இக்கோயிலின் தெற்கு நோக்கிய கருவறையிலிருந்து அந்தராளம், அமுத மண்டபம், அர்த்த மண்டபத்தைத் தொடர்ந்து முதல் பிரகாரமான சுந்தரபாண்டிய மண்டபத்தில் இடதுபுறம் வடக்கு நோக்கியவாறு உற்சவ மாணிக்கவாசகரின் சன்னதியும், தென்மேற்கு மூலையில் சொக்கவிநாயகரும், மேற்கு நோக்கியவாறு அமுத மண்டபசுவரை ஒட்டினாற்போல் வீரபத்திரரும் வடமேற்கு மூலையில் தெற்கு நோக்கியவாறு யோகாம்பிகையின் சன்னதியும், மேற்கு நோக்கியவாறு கருவறையின் பின்புறம் குருந்தமூலச் சன்னதியும், தெற்கு நோக்கியவாறு வடகிழக்கு மூலையில் திருவாசகம் மற்றும் ஆடல்வல்லானின் சன்னதியும் அர்த்த மண்டபத்தின் வலதுபுறம் தென்கிழக்கு மூலையில் மேற்கு நோக்கியவாறு முருகனின் சன்னதியும் முதல் பிரகாரத்தின் நுழைவாயிலின் இருமருங்கிலும் வலம்புரி மற்றும் இடம்புரி விநாயகரும் இரண்டாம் பிரகாரத்தின் நான்கு மூலைகளிலும் விநாயகரின் சிற்பமும் தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளியும் மூன்றாம் பிரகாரத்தில் இடதுபுறம் கிழக்கு நோக்கியவாறு சிவானந்த மாணிக்கவாசகரின் சன்னதியும் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கியவாறு வெயிலுவந்த விநாயகரின் சன்னதியும் இப்பிரகார தியாகராஜ மண்டபத்தில் கி நோக்கியவாறு மகாலிங்க மூர்த்தியும், தெற்கு நோக்கியவாறு வடமேற்கு மூலையில் குருந்தடி விநாயகரும் மாணிக்கவாசகரின் உபதேசக் காட்சியும், வடகிழக்கு மூலையில் மேற்கு நோக்கியவாறு வசந்த விநாயகரின் சன்னதியும் இராஜகோபுரத்தின் வெளியே இரகுநாதபூபால மண்டபத்தில் கிழக்கு நோக்கியவாறு நந்திகேஷ மாணிக்கவாசகரின் சிற்பமும் இடம்பெற்றுள்ளன.

**தீர்த்தக் குளம்**

இக்கோயிலின் தீர்த்தக் குளங்கள் கோயிலுக்குள்ளேயும், கோயிலுக்கு வெளியேயும் அமையப்பெற்றுள்ளன. ஆத்மநாதச் சுவாமிக் கோயிலில் மூன்றாம் பிரகாரத்திலும் கோயிலின் எதிர்புறமாகவும் படிகட்டுகளுடன் கூடிய கட்டடக்கலையுடன் அக்னி தீர்த்தமாகவும் நெல்லியடிக் குளமாகவும் அமைந்துள்ளன. இக்கோயிலின் கிழக்கே வங்கக் கடலில் பாயும் வெள்ளாறும் இக்கோயிலின் தீர்த்தமாகக் கருதப்படுகின்றது.

**தலவிருட்சம்**

சங்ககாலத்திலிருந்தே தொன்றுதொட்டு வந்த மர வழிபாட்டின் தொன்மையானது தற்போது வரை கோயில்களின் தலவிருட்சங்களாக காணப்படுகின்றன. இவ்வட்டாரத்தில் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலில் மாணிக்கவாசகருக்கு சிவன் உபதேசமளித்ததாகப் புராணங்களில் கூறப்படும் குருந்த மரம் தலவிருட்சமாக காணப்படுகின்றன.

**முடிவுரை**

ஆவுடையார்கோயில் மண்டபங்களின் கலைப் பாணியைக் கொண்டு ஒவ்வொரு காலகட்டத்திலும் வளர்ச்சியடைந்து வந்துள்ள கோயிலின் கலைநயத்தைக் காணமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

கருவறையிலிருந்து தில்லைமண்டபம் வரை பிற்கால பாண்டியர்களின் கலையமைப்பையும், பஞ்சாட்சர மண்டபத்திலிருந்து ரகுநாதபூபால மண்டபம் வரை தஞ்சை நாயக்கர்களின் கலைப் பாணியைக் கொண்டு இம்மண்டபங்கள் கம்பீரமான தோற்றத்துடனும், தென்காசிக் கோயில்களைப் போன்ற மிகப்பெரிய நீண்ட கொடுங்கை கலையமைப்புடன் அமையப்பெற்றிருப்பது சிறப்புக்குறிய ஒன்றாகும்.

**அடிக்குறிப்பு**

1. முனைவர் செ.சாந்தி., முனைவர் கா.பரந்தாமன்., ஞா.புர்ணிமா திலகம்., ரா.ராதா., முனைவர் ஆறுசரவண்குமார்., "ஆவுடையார்கோயில் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் - ஒரு வரலாற்றுப் பார்வை." *Journal of Modern Thamizh Research* Volume- 7, Issue-1, Page762-776, Raja Publication, Trichy-2019.
2. முனைவர் செ.சாந்தி. "ஆவுடையார்கோயில் வட்டாரக் கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* E-ISSN: 2581-7140 Vol. 2: Issue - 1, July 2019, P 83-91, Publication, www.ijtlls.com
3. இராசுபவுன்துரை, *தமிழகக் கோயிற்கட்டக்கலைத் தொழில்நுட்ப அதிட்டானம்*, ப.76.
4. IPS.NP.,110
5. PK.Acharya, *An Encyclopaedia of Manasara Hindu Architecture*, voi.VII, P.15.
6. **T.V** Mahalingam, *Studies in the South India temple complex*,p.16.
7. P.K.Acharya., *Architecture of Manasara*, p.16.
8. Ibid., p.25.
9. Ibid., p.26.
10. Ibid., p.26.
11. Ibid., p.27.
12. M.W.Meister and other (Ed.) Encyclopaedias of India Temple Architecture, South India, Dravidndesa, p.145.
13. எல்.மணிவண்ணன், *பாண்டியநாட்டு வைணவக் கோயில்களில் கலையும் கட்டிடக்கலையும்,* ப..59.
14. J.Burgess J. *Indian Architecture*, p.52.
15. Burton Stein**.,** *South Indian Temple*, p.49.
16. Havell., EB., *Indian Architecture*, p.43.
17. G.Sethuraman, *Origin and Evolution of the Jalas "Facets of Indian Art and culture,* pp**.**70-78.
18. Kramrisch Stella., *The Hindu Temples I Volumes*, pp.20-23.
19. Ibid., p.25
20. Ibid., p.28
21. Joveau-Dubreuil, *Dravidian Architecture***,**p.63
22. குடவாயில் பாலசுப்பிரமணியன், *தஞ்சை நாயக்கர் வரலாறு* (கிபி.1535-1675), ப.158.
23. ஜி.சேதுராமன், *தமிழகச் சமுதாயப் பாண்பாட்டுக் கலை வரலாறு*, ப.52
24. புறநானூறு, 15, 21, 224.
25. Kr.Srinivasan, *Cave Temple of the Pallavas, Archaeological survey of India*.P.30.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

26. Annual Report of Epigraphy: 1930 no. 202. South Indian Inscription- Vol. II, P.143.Srinivasan, Kr. Cave Temple of the Pallavas, Archaeological Survey of India, The Oxford University Press. London, 1999.
27. Annual Report of Epigraphy: 1947 no 143
28. Annual Report of Epigraphy: 1935 no 316
29. Annual Report of Epigraphy: 1930 no 316
30. Annual Report of Epigraphy: 1938 no 517
31. Saletore, R.N. *Vijayanagara Art*, Sundeep Prakashan, Delhi.1982, p.13.
32. OPcit, இராசுபவுன்துரை, ப.62.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சாந்தி, செ.** "கட்டிடக்கலை நுட்பங்களில் ஆவுடையார்கோயில்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 13-27. டிஓஐ: 10.5281/zenodo.3628597.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Santhi, S**. "Avudayarkovil and its Architecture." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 13-27. DOI: 10.5281/zenodo.3628597.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# இலங்கை வவுனியா மாவட்டத்திலுள்ள தாவர மூலிகை இடப்பெயர்கள்
# Names of Places with the Names of Herbs in Vaviniya District of Ilangai

**மருத்துவர்.சே.சிவசண்முகராஜா** M.D (S) (India), சிரேஷ்டவிரிவுரையாளர், சித்தமருத்துவப்பிரிவு, யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம், ஸ்ரீலங்கா.
**Dr.S. Sivashanmugarajah** M.D (S) (India), Senior Lecturer, Department of Siddha, University of Jaffna, Sri Lanka.
ORCiD: https://orcid.org/0000-0001-8194-6225
**DOI: 10.5281/zenodo.3628602**

## Abstract

*Due to the speciality or diversity of the herbs and plants majority of the villages are named relevant to medicinal plants in the Northern Province of Sri Lanka. Even such plants were destroyed, they are still called in the names of particular plants.The objective of this study was to identify and documentation of plant based place names of Vavuniya District in the Northern Province of Sri Lanka. The information were collected from field study, authentic journals, books and other research publications. Among the 512 villages, 315 were identified relevant to herbs and plants names. The paper details the sources with ample proof to know about the names of the places on the names of the herbs or plants which are still in use.*

**Keywords:** Diversity, Villages, Names, Places Names, Herbs, Vavuniya District, Ilangai

### அறிமுகம்

தாவரமூலிகைகளின் சிறப்புத்தன்மை அல்லது பரம்பல் காரணமாக இலங்கையின் வடமாகாணத்தில் உள்ள பெரும்பாலான கிராமங்கள் மருத்துவமூலிகைத்தாவரங்களின் பெயருடன் தொடர்பாக அமைந்துள்ளன. ஓரிடப்பெயருக்குக் காரணமான தாவரம் அழிந்து போய்விட்டாலும் அவ்விடம் தொடர்ந்தும் அத்தாவரப்பெயரால் அழைக்கப்படுவதைக் தற்போதும் காணக்கூடியதாவுள்ளது. இந்த ஆய்வானது, இலங்கை வடமாகாணத்திலுள்ள வவுனியா மாவட்டத்திலுள்ள தாவரமூலிகைப்பெயர்களை அறிந்து, ஆவணப்படுத்தும் நோக்குடன் மேற்கொள்ளப்பட்டது. ஆய்வுக்கான தகவல்கள் களஆய்வு, மற்றும் சஞ்சிகைகள், நூல்கள், வெளியீடுகள் மூலம் பெறப்பட்டன. வவுனியா மாவட்டத்திலுள்ள 512 கிராமங்களில் 315 கிராமங்கள் தாவரமூலிகைப் பெயர்களுடன் சம்பந்தப்பட்டவையாகக் காணப்பட்டன. அவை பற்றி இக்கட்டுரையில் விரிவாக எடுத்துரைக்கப்படுகிறது. இக்கட்டுரையில் திறவு சொற்களாக பரம்பல், கிராமம், தாவரமூலிகை, வவுனியா மாவட்டம், இடப்பெயர் ஆகியவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஒரு பிரதேசத்திலுள்ள இடப்பெயர்களில் தாவரமூலிகைப் பெயர்களுடன் சம்பந்தப்பட்ட இடப்பெயர்களும் கணிசமான அளவில் இடம் பெற்றுள்ளன. தாவரங்கள் ஓரிடத்தில் நிலையாக நிற்பதன் காரணமாக அவ்விடத்தை அடையாளப்படுத்திக் காட்டுவதற்கு அவ்விடத்திலுள்ள தாவரமூலிகையுடன் சம்பந்தப்படுத்தி பெயரிட்டு அழைக்கும் வழக்கம் பண்டு தொட்டு இன்றுவரை காணப்படுகிறது. குமரி எனப்படும் கற்றாளை காரணமாகக் குமரிக்கண்டம் (இராமநாதன். பொ. 2008: பக்.15), காஞ்சி என்னும் மரங்காரணமாகக் காஞ்சிபுரம் (பகவதி கு. 2005: பக்.11) போன்ற பண்டைய பெயர்களும் புளியடி, மருதடி, வேம்படி, ஆலங்குளம் போன்ற தற்கால இடப்பெயர்களும் அவ்விதம் ஏற்பட்டவையாகும். காலகதியில் அத்தாவரங்கள்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அழிந்து போய்விட்டாலுங்கூட அவ்விடப்பெயர்கள் அத்தாவரங்களின் பெயரைத்தாங்கி இன்றும் நிலைத்து நிற்பதையும் பல இடங்களில் காண்கிறோம் (கதிர்தணிகாசலம், 1992: பக்.180). சில இடப்பெயர்களுடன் சம்பந்தப்பட்ட தாவரப்பெயர்கள் காலப்போக்கில் சிதைவடைந்தும், திரிபடைந்தும் அழைக்கப்படுவதும் உண்டு (திலகநாயகம்போல், ப. 2000: பக்.220). அதேவேளை பண்டைக்காலத்தில் வழக்கிலிருந்த அல்லது மூலிகை மருத்துவர்களால் மறைமொழிகளில் அழைக்கப்பட்ட தாவர இடப்பெயர்களும் தமிழ்ப்பிரதேசங்களில் கணிசமான அளவில் காணப்படுகின்றன. பரம்பரை வைத்தியர்களிற் சிலர் குறிப்பிட்ட இடங்களிலுள்ள மூலிகைகளைப் பிறர் இலகுவில் அறிந்து கொள்ளாதிருப்பதற்காக அவ்விதம் பெயரிட்டு அழைத்திருக்கலாம். எனவே, வைத்தியநூல்கள், மூலிகை அகராதிகள் என்பவற்றின் உதவியும் தாவரமூலிகை இடப்பெயர்களைக்கண்டறிவதில் அவசியமாகின்றன.

எனவே, மூலிகை மருத்துவத்துக்கும் தாவரமூலிகைப் பெயர்களில் அமைந்துள்ள இடப்பெயர்களுக்கும் இடையில் நெருங்கிய தொடர்புகள் இருப்பதைக்காணலாம். மூலிகை இடப்பெயர்கள் பல செய்திகளை எமக்குத் தருவனவாக உள்ளன. ஓரிடத்தில் இருந்த அல்லது இருக்கின்ற மூலிகைத்தாவரம் பற்றிய விபரம், ஓரிடத்தில் வளரக்கூடிய மூலிகைத்தாவரங்கள் பற்றிய விபரம், ஓரிடத்தில் பரம்பியிருக்கக்கூடிய அல்லது செறிந்து காணப்படும் மூலிகைத்தாவரங்கள், ஓரிடத்திலுள்ள மூலிகைத்தாவரத்துக்கும் அவ்விடத்தில் வாழும் மக்களுக்கும் உள்ள தொடர்பு அல்லது அம்மூலிகைத்தாவரத்தின் பயன்பாடு போன்ற விபரங்களை மூலிகை இடப்பெயர்கள் எடுத்துக்கூறுவனவாக உள்ளன. ஆயினும், இலங்கையைப் பொறுத்தவரையில் இத்துறை சார்ந்த ஆய்வுகள் மிகக் குறைவாகவே இடம்பெற்றுள்ளன. யாழ்ப்பாண வைபவ விமர்சனம் (ஞானப்பிரகாசர்.சுவாமி, 2003: பக் 221), வடமாகாணத்துச் சில இடப்பெயர்கள் (குமாரசுவாமி.எஸ்.டபிள்யூ.1998), ஈழத்து இடப்பெயராய்வு (பாலசுந்தரம்.இ, 2002), தமிழர்வரலாறும் இலங்கை இடப்பெயராய்வும் (கதிர் தணிகாசலம், 1992) போன்ற நூல்களில் தாவர இடப்பெயர்கள் பற்றிய தகவல்களை ஓரளவுக்குப் பெற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தாலும் அவற்றை முழுமையானவை என்று கூறமுடியாதுள்ளது.

இலங்கையில் தமிழர்பிரதேசங்களில் தனித்துத் தாவரமூலிகை இடப்பெயர்கள் குறித்த ஆய்வுகள் மிகக்குறைவாகவே இடம்பெற்றுள்ளன. அவற்றுள் இலங்கையில் மன்னார் மாவட்ட இடப்பெயர்களில் மூலிகைத் தாவரங்களின் செல்வாக்கு ஓர் ஆய்வு (சிவசண்முகராஜா. சே, 2019: பக்.140-152), கிளிநொச்சி மாவட்டத்தில் மூலிகைப் பெயர்களில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்கள் (சிவசண்முகராஜா. சே, 2014: பக்.140- 152), யாழ்ப்பாண மாவட்டத்தில் மூலிகைப் பெயர்களில் அமைந்துள்ள ஊர்ப் பெயர்கள் (சிவசண்முகராஜா. சே, 2018) என்பன இக்கட்டுரையாசிரியரால் மேற்கொள்ளப் பட்டவையாகும். அந்தவகையில் இலங்கையின் வடமாகாணத்திலுள்ள வவுனியா மாவட்டத்திலுள்ள மூலிகைத்தாவர இடப்பெயர்கள் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஆய்வின் நோக்கம்** - இலங்கை, வவுனியா மாவட்டத்திலுள்ள இடப்பெயர்களில் மூலிகைத்தாவர இடப்பெயர்களை இனங்கண்டு ஆவணப்படுத்துதல்

**ஆய்வுமுறையியல்** - ஆய்வுக்குரிய தகவல்கள் களஆய்வு மற்றும் வவுனியாமாவட்டச் செயலகப்புள்ளிவிபரங்கள், நூல்கள், வெளியீடுகள், என்பவற்றிலிருந்து பெறப்பட்டவையாகும்.

**ஆய்வுப்பிரதேசம்** - இலங்கையில் தமிழர்கள் பெரும்பான்மையாக வாழும் மாகாணம் வடமாகாணமாகும். இம்மாகாணமானது யாழ்ப்பாணம், கிளிநொச்சி, மன்னார், வவுனியா, முல்லைத்தீவு என்னும் ஐந்து மாவட்டங்களை உள்ளடக்கியுள்ளது. இவற்றுள் வவுனியா மாவட்டமானது வடமாகாணத்தின் தெற்கு எல்லையாகவும் அமந்துள்ளது. வவுனியா மாவட்டத்தின் வடக்கு எல்லையாக முல்லைத்தீவு மாவட்டமும், மேற்கு எல்லையாக முல்லைத்தீவு, மன்னார் மாவட்டங்களும், கிழக்கு எல்லையாக அனுராதபுரம், திருகோணமலை மாவட்டங்களும், தெற்கு எல்லையாக அனுராதபுர மாவட்டமும் அமைந்துள்ளன. இதன் தலைநகரம் வவுனியாவாகும். இதன் மொத்த நிலப்பரப்பு 1967 சதுரகிலோமீற்றராகும். அதில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

ஏறத்தாள 1104 சதுரகிலோமீற்றர் பரப்பளவு காடுகளாகும். அதாவது, வவுனியா மாவட்டத்தின் 56 சதவீத நிலப்பரப்பு காடுகளாகவுள்ளது(வரதராஜன்.சி,1992: பக்.01).

வவுனியா மாவட்டமானது நிர்வாகரீதியாக நான்கு பிரதேச செயலர் பிரிவுகளாகவும், 102 கிராமசேவகர்பிரிவுகளாகவும், பிரிக்கப்பட்டுள்ளதுடன் 512 கிராமங்களையும் கொண்டுள்ளது (Annual Performance Reports and Accounts, 2018: 151). (அட்டவணை-1பார்க்க). வவுனியா மாவட்டத்திலுள்ள பல கிராமங்களின் பெயர்கள் மிகவும் பழமையானவை. 1817-1839 காலப் பகுதியில் முல்லைத்தீவு மற்றும் வவுனியா பிரதேசங்களில் காணப்பட்ட கிராமப்பெயர்கள் பற்றி ஜே.பி.லூயிஸ் அவர்கள் 1895 இல் வெளியிட்ட இலங்கையின் வன்னி மாவட்டங்கள் என்ற ஆங்கில நூலில் எடுத்துக்காட்டியுள்ளார் (லூயிஸ். ஜே.பி. 2012: பக்.62- 116)

**அட்டவணை - 1**

| பிரதேசசெயலர் பிரிவு | கிராமசேவகர் பிரிவுகளின் எண்ணிக்கை | கிராமங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| **வவுனியா வடக்கு** | 20 | 110 |
| **வவுனியா** | 42 | 218 |
| **வவுனியா தெற்கு** | 20 | 91 |
| **வெங்கலச் செட்டிக்குளம் (செட்டிக்குளம்)** | 20 | 93 |
| **மொத்தம்** | 102 | 512 |

**பெறுபேறுகளும் கலந்துரையாடலும்**

வவுனியா மாவட்டத்திலுள்ள 512 கிராமங்களில் 315 கிராமங்கள் வரை (62%) தாவரமூலிகைப்பெயர்களில் அமைந்துள்ளதை இந்த ஆய்வு மூலம் அறிந்து கொள்ளக்கூடியதாகவுள்ளது. அவற்றுள் 227 (72%) இடப்பெயர்கள் மரப்பெயர்களுடனும், 33 (10%) இடப்பெயர்கள் செடிகளின் பெயர்களுடனும், 31 (10%) இடப்பெயர்கள் கொடிகளின் பெயர்களுடனும், 12 (4%) இடப்பெயர்கள் புற்பெயர்களுடனும், 12 (4%) இடப்பெயர்கள் நீர்த்தாவரப் பெயர்களுடனும் தொடர்புடையனவாகக் காணப்படுகின்றன. (அட்டவணை – 2 பார்க்க). இடப்பெயர்களில் தாவரங்களின் வகையும் எண்ணிக்கையும்:

**அட்டவணை – 2**

| இலக்கம் | தாவரவகை | பொது எண்ணிக்கை | வீதம் | மொத்த எண்ணிக்கை | வீதம் |
|---|---|---|---|---|---|
| **01** | **மரம்** | 42 | 54 | 227 | 72 |
| **02** | **செடி** | 19 | 24 | 33 | 10 |
| **03** | **கொடி** | 09 | 11 | 31 | 10 |
| **04** | **புல்** | 06 | 07 | 12 | 04 |
| **05** | **நீர்த்தாவரம்** | 03 | 04 | 12 | 04 |
| | **மொத்தம்** | 82 | 100 | 315 | 100 |

மேலும், வவுனியா மாவட்ட இடப்பெயர்கள் பெரும்பாலும் குளம், ஓடை, மடு, வில், மோட்டை, நீராவி போன்ற நீர்நிலைகளுடன் இணைந்து காணப்படுவது சிறப்பம்சமாகவுள்ளது. முற்காலத்தில் மக்கள் நீர்நிலைகளையண்டித் தமது வதிவிடங்களை அமைத்துக் கொண்டதை இது எடுத்துக்காட்டுகிறது. அதுமட்டுமல்லாமல் நீர்நிலைகளை அடுத்துத் தாவரங்கள் செழித்து வளர்ந்து காணப்படுவது இயல்பு. அந்தவகையில் தமது இருப்பிடங்களை அடையாளப்படுத்திக்காட்டுவதற்கு குளங்களையும் அவற்றின் அருகில் உள்ள மரங்களையும் சேர்த்து மக்கள் பயன்படுத்தியுள்ளமை ஏற்புடையதே. வவுனியா மாவட்டத்தின் தலைநகரான வவுனியா என்பதன் புராதன பெயர்கூட வவுனியன் விளாங்குளம் என்பதும் இங்கு கவனத்திற் கொள்ளத்தக்கது. 1890 இல் உள்நாட்டு மாவட்டமான “வவுனியன் விளாங்குளம்” என்னும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

பெயர் "வவுனியா" என்று சுருக்கப்பட்டது (லூயிஸ் ஜே.பி. 1895 :பக்.48). வவுனியன் என்பது குளத்தைவெட்டியவருடைய பெயராக இருத்தல் கூடும். குளக்கரையில் விளாமரம் இருந்த காரணத்தால் அக்குளம் வவுனியன் விளாங்குளம் எனவழைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இதுபோன்று குளத்துடன்(அல்லது மடு போன்ற பிற நீர்நிலைகளுடன்) தொடர்புடைய தாவரம் மட்டுமன்றி அதை உருவாக்கக் காரணமானவர் போன்றவர்களின் பெயர்களும் வவுனியா மாவட்ட இடப்பெயர்களில் இணைந்து காணப்படுவதை அவதானிக்கக் கூடியதாகவுள்ளது. ஆயினும் இவ்வாய்வில் முக்கியமாக இடப்பெயர்களுடன் தொடர்புடையதாகக் காணப்படும் தாவரப்பெயர்களுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது என்பதைக் கவனத்திற் கொள்ளவும்.

**வவுனியா மாவட்டத்தில் மரப்பெயர்களில் அமைந்துள்ள இடப்பெயர்கள்**

**அட்டவணை- 3 மரப்பெயர்கள்**

| இலக்கம் | மரப்பெயர் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|
| 01 | புளியமரம் | 36 |
| 02 | மருதமரம் (மருது) | 15 |
| 03 | பூவரசமரம் (பூவரசு) | 07 |
| 04 | நொச்சிமரம் | 10 |
| 05 | இலுப்பை மரம் | 11 |
| 06 | மகிழமரம் | 05 |
| 07 | ஆலமரம் | 10 |
| 08 | நாவல் மரம் | 05 |
| 09 | வேம்பு | 08 |
| 10 | கருங்காலி மரம் | 05 |
| 11 | வேலமரம் | 08 |
| 12 | தம்பனைமரம் | 08 |
| 13 | கூழாமரம் | 06 |
| 14 | காஞ்சுரை | 02 |
| 15 | ஆயில் மரம் | 01 |
| 16 | முதிரை மரம் | 01 |
| 17 | விளாமரம் | 04 |
| 18 | தான்றி மரம் | 01 |
| 19 | தேக்கமரம் | 01 |
| 20 | பாலை மரம் | 04 |
| 21 | அரசமரம் | 04 |
| 22 | நறுவிலி மரம் | 02 |
| 23 | சாளம்பை மரம் | 03 |
| 24 | இலந்தை மரம் | 02 |
| 25 | மருக்காரை | 02 |
| 26 | கருவேம்பு | 01 |
| 27 | மாமரம் | 04 |
| 28 | நாவி மரம் | 02 |
| 29 | பனிச்சை | 03 |
| 30 | திருவாத்தி | 02 |
| 31 | காயா மரம் | 02 |
| 32 | இத்தி மரம் | 01 |

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

| 33 | குருந்த மரம் | 02 |
|---|---|---|
| 34 | புங்கு | 01 |
| 35 | வாகை மரம் | 02 |
| 36 | இலவ மரம் | 01 |
| 37 | கூமா மரம் | 01 |
| 38 | வன்னிமரம் | 01 |
| 39 | காட்டிலந்தை | 02 |
| 40 | உசில மரம் | 01 |
| 41 | காஞ்சிமரம் | 01 |
| 42 | காட்டிலுப்பை மரம் | 01 |
| 43 | ஓடையா மரம் | 01 |
| 44 | சடவக்கை | 01 |
| **மொத்தம்** | **44** | **227** |

மரப்பெயர்களில் புளியமரம் முதல் சடவக்கைமரம் ஈறாக 44 வகை மரங்கள் இடப்பெயர்களுடன் தொடர்புடையனவாகக் காணப்படுகின்றன. (அட்டவணை-3). அவற்றுட்பல மரப்பெயர்கள் ஒன்றுக்குமேற்பட்ட ஊர்ப்பெயர்களுடன் சம்பந்தப்பட்டுக்காணப்படுகின்றன. அது வவுனியாமாவட்டத்தில் அம்மரங்களின் பரம்பலை எடுத்துக்காட்டுவதாகவும் உள்ளது. எனவே 44 வகையான மரங்கள் அடையாளப்படுத்தப்பட்டபோதிலும் மொத்தமாக மரப்பெயர்களைக் கொண்ட 227 இடப்பெயர்கள் வவுனியா மாவட்டத்தில் காணப்படுகின்றன. அவை பற்றிய விபரங்களை நோக்குவாம்.

வவுனியா மாவட்டத்தில் காணப்படும் தாவரஇடப்பெயர்களில் புளியமரத்துடன் தொடர்புடைய மர இடப்பெயர்களே மிக அதிகமாகக் (36) காணப்படுகின்றன. அவற்றுள் வவுனியா வடக்குப்பிரதேச செயலர் பிரிவில் உள்ள கோவில்புளியங்குளம், ஆனந்தர்புளியங்குளம், புளியங்குளம் தெற்கு, இராமர்புளியங்குளம், புளியங்குளம்வடக்கு, கொல்லபுளியங்குளம் ஆகிய ஆறு இடங்களும், வவுனியா பிரதேசசெயலர்பிரிவிலுள்ள பட்டாணிச்சிபுளியங்குளம், வைரவப்புளியங்குளம், கறுவாப்(ல்) புளியங்குளம், பெரியபுளியங்குளம், பணிக்கர்புளியங்குளம், புளிதறித்தபுளியங்குளம், கோபாலபுளியங்குளம், வேலப்பர்புளியங்குளம், கோவில்புளியங்குளம், சுப்புடையார்புளியங்குளம், புளிமோட்டை, காக்கையர்புளியங்குளம், உமையாள்புளியங்குளம், தர்மர்புளியங்குளம், சின்னப்புளியங்குளம், பெரியபுளியங்குளம், வடகாடுபுளியங்குளம் ஆகிய பதினேழு இடங்களும், வவுனியா தெற்கு பிரதேசசெயலர்பிரிவிலுள்ள சியம்பலா கஸ்வேவா (சியம்பலா-புளி சிவசண்முகராஜா சே. 2012: பக்.322) (பூமடுவ கிராமசேவகர் பிரிவு), கொலசியம்பலாவ (மருதமடு கிராமசேவகர்பிரிவு), சியம்பலா கஸ்வேவா(எல்.பி.கொலனி), புளியங்குளம் (அலகல்ல கிராமசேவகர்பிரிவு), புளியங்குளம் (எல், பி.கொலனி), சியம்பலா கஸ்கமுவ(ஈரற்பெரியகுளம் கிராமசேவகர்பிரிவு), பெரியபுளியங்குளம், ஆகிய ஏழு இடங்களும், செட்டிக்குளம்(வெங்கலசெட்டிக்குளம்) பிரதேசசெயலர் பிரிவிலுள்ள ஆண்டியாபுளியங்குளம், புளியடிமுறிப்பு, புளியங்குளம், வாடிவலைபுளியங்குளம், பெரியபுளியாலங்குளம், புளிமாங்குளம் ஆகிய ஆறு இடங்களும் அடங்குகின்றன. (குறிப்பு-ஒரே பெயரில் ஒன்றுக்கு மேற்பட்ட ஊர்கள் காணப்படுமிடத்து அவற்றை வேறுபடுத்த அடைப்புக்குறிக்குள் அவை அடங்கியுள்ள கிராமசேவகர் பிரிவுகள் கொடுக்கப்பட்டுள்ளன.)

மருதமரத்துடன் தொடர்பாகப் பதினைந்து இடப்பெயர்கள் அமைந்துள்ளன. வவுனியா வடக்கு பிரதசசெயலர் பிரிவிலுள்ள மருதோடை(மருதோடை கிராமசேவகர்பிரிவு), மருதங்குளம் ஆகிய இருகிராமங்களும், வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலுள்ள அலியமருதமடு, கொல்லன்மருதமடு, மருதமடு, இளமருதங்குளம் (மருதமடு கிராமசேவகர் பிரிவு), சின்னாச்சி இளமருதங்குளம், எல்லப்பர்மருதங்குளம், இளமருதங்குளம் (இளமருதங்குளம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

கிராமசேவகர்பிரிவு), மருதங்குளம், மருதோடை(மருதங்குளம் கிராமசேவகர் பிரிவு) ஆகிய ஒன்பது கிராமங்களும், வவுனிய தெற்கு பிரதேச செயலர் பிரிவில் உள்ள மருதன்மடுவ, இளமருதங்குளம் (றன்கெத்கம கிராமசேவகர் பிரிவு), இளமருதங்குளம் (கழுகுண்ணாமடுவ கிராமசேவகர் பிரிவு) ஆகிய மூன்று கிராமங்களும், செட்டிக்குளம் பிரதேசசெயலர் பிரிவிலுள்ள மருதோடை என்னும் கிராமமும் இதில் அடங்குகின்றன. பொதுவாக நன்னீர்நிலைகளையண்டி மருதமரங்கள் காணப்படுவது இயல்பாகும்.

இலங்கையில் நொச்சிமரங்களின்பரம்பல் பலவிடங்களிலும் காணப்படுகிறது. இந்தவகையில் வவுனியா மாவட்டத்தில் வவுனியா வடக்கு பிரதேசசெயலர் பிரிவில் உள்ள ஊஞ்சல்கட்டி கிராமசேவகர் பிரிவிலும், ஆனந்தர்புளியங்குளம் கிராமசேவகர் பிரிவிலும் நொச்சிக்குளம் என்ற பெயரில் ஒவ்வொரு கிராமங்களும், வவுனியா பிரதேச செயலர் பிரிவில் பூவரசன்குளம் கிராமசேவகர் பிரிவு, பாலமோட்டை கிராமசேவகர் பிரிவு, மாளிகை கிராமசேவகர் பிரிவு என்பவற்றில் நொச்சிக்குளம் என்ற பெயரில் ஒவ்வொரு கிராமங்களும், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள அவுசதப்பிட்டிய கிராமசேவகர் பிரிவிலும். கழுகுண்ணா மடுவ கிராமசேவகர் பிரிவிலும் நொச்சிக்குளம் என்ற பெயரில் ஒவ்வொரு கிராமங்களுமாக மொத்தம் ஏழு நொச்சிகுளம் என்னும் இடப்பெயர்கள் காணப்படுகின்றன. மேலும் வவுனியா பிரதேச செயலர் பிரிவில் கோதண்ட நொச்சிக்குளம், நொச்சிமோட்டை என்னும் இடங்களும், செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவில் பெரிய நொச்சிக்குளம் என்னும் இடமும் நொச்சிமரப்பெயருடன் தொடர்பான இடப்பெயர்களாகும். இவ்விடங்களில் காணப்பட்ட கருநொச்சியே இவ்விடப்பெயர்களுக்குக் காரணமாக அமைந்துள்ளது.

முற்காலத்தில் இலுப்பைமரம் மக்கள் வாழ்வுடன் நெருங்கிய ஒரு மரமாக விளங்கியுள்ளது. இலுப்பைப்பூ உணவாகவும், இலுப்பெண்ணெய் உணவாகவும், விளக்கெரிக்கவும், மருந்தாகவும், இலுப்பை அரப்பு உடல் அழுக்குநீக்கியாகவும் இலைகள் கால்நடைகளின் உணவாகவும் பயன்பட்டு வந்திருக்கிறது. அந்தவகையில் இலுப்பை மரத்தால் சுட்டப்படும் இடப்பெயர்களாக மாறா இலுப்பை என்னும் இடம் வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவிலும், இலுப்பைக்குளம் என்ற பெயரில் (நொச்சிமோட்டை ககிராமசேவகர் பிரிவு, சாளம்பைக்குளம் கிராமசேவகர் பிரிவு, ஆசிக்குளம் கிராமசேவகர் பிரிவு, நேரியகுளம் கிராசேவகர் பிரிவு என்பவற்றில்) நான்கு இடங்களும், நாகர் இலுப்பைக்குளம், வாரியுடையார் இலுப்பைக்குளம், மரையிலுப்பை, பெரியமாறாயிலுப்பை, சின்னமாறாயிலுப்பை, தெற்கிலுப்பை ஆகிய இடங்கள் வவுனியா பிரதேச செயலர் பிரிவிலும் காணப்படுகின்றன.

ஆலமரத்தின் பெயர் கொண்டதாகப் பத்து இடங்களுள. அவற்றுள் ஆலங்குளம் என்ற பெயரில் ஆறு இடங்களுள்ளன. வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள கனகராயன் குளம் தெற்கு கிராமசேவகர் பிரிவில் ஓர் ஆலங்குளமும், வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள நொச்சிமோட்டை கிராமசேவகர் பிரிவு, கள்ளிக்குளம் கிராமசேவகர் பிரிவு, புதுக்குளம் கிராமசேவகர் பிரிவு என்பவற்றில் தலா ஓர் ஆலங்குளமும், மருமடு கிராமசேவகர் பிரிவில் இரண்டு ஆலங்குளங்களும் அமைந்துள்ளன. அவற்றை விட வவுனியா கிராமசேவகர் பிரிவில் உள்ள ஆலடிக்குளம் (மருதமடு கிராமசேவகர் பிரிவு), அலடிக்குளம்(ஆலடிக்குளத்தின் சிதைவு-சாஸ்திரி கூளாங்குளம் கிராமசேவகர் பிரிவு), என்பனவும், செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள பறையனாலங்குளம், பிராமணாலங்குளம் என்பனவும் ஆலமரங்காரணமாக ஏற்பட்டவையே. செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள பெரியபுளியாலங்குளம் என்னுமிடம் புளியமரம், ஆலமரம் ஆகிய இரண்டு மரங்களுடன் தொடர்புடையதாகவும் அமைந்துள்ளமையும் இங்கு குறிப்பிடத்தக்கது.

வேப்பமரத்தின் பெயருடன் தொடர்பாக அமைந்துள்ள எட்டு இடங்களில் ஏழு இடங்கள் வேப்பங்குளம் என்ற பெயரில் அமைந்துள்ளன. அவற்றுள் ஐந்து இடங்கள் வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள (பட்டாணிச்சி புளியங்குளம், மருதமடு, பன்றிக்கெய்த குளம், ஓமந்தை, ஆசிக்குளம்) கிராமசேவகர் பிரிவுகளிலும், இரண்டு இடங்கள் செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள (ஆண்டியாபுளியங்குளம், நேரியகுளம்) கிராமசேவகர் பிரிவுகளிலும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அமைந்துள்ளன. கொகம்பவேவா(கொகம்ப-வேம்பு (சிவசண்முகராஜா சே. 2012: பக்.143) என்னும் இடம் வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவில் காணப்படுகிறது.

வேலமரத்துடன் தொடர்பாகவும் எட்டு இடங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் வேலங்குளம் என்ற பெயரில் நான்கு இடங்கள் காணப்படுகின்றன. வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் குளவிசுட்டான் கிராமசேவகர் பிரிவில் ஒரு வேலங்குளமும், வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள (கள்ளிக்குளம், புதுக்குளம், வேலங்குளம்) கிராம சேவகர் பிரிவுகளில் ஏனைய வையும் காணப்படுகின்றன. மேலும் வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவில் உள்ள வேலர் சின்னக்குளம், ஆரியர் வெலங்குளம், வேலாயகுளம், வேலாயன்குளம் என்பனவம் வேலமரத்துடன் தொடர்புபட்டவையேயாகும். சிலர் வேலன், வேலர் என்பவை மக்கட்பெயராகக் கருதுவர். ஆனால் குளங்களுடன் சம்பந்தப்பட்ட இவ்விடப்பெயர்களில் வேல என்பது வேலமரத்தையே குறிக்கும்.

பூவரசமரம் இலங்கையில் பலபாகங்களிலும் காணப்படும் ஒரு மரமாகும். குறிப்பாக வடக்கிலங்கையில் இம்மரங்களைக் கொண்டு எல்லைவேலியமைப்பது வழக்கம். வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் காட்டுப்பூவரசன்குளம், சின்னப்பூவரசன்குளம், பெரியபூவரசன்குளம் ஆகிய முன்று இடங்களும், வவுனியா பிரதேச செயலர் பிரிவில் உள்ள பூவரசன்குளம் (பூவரசன்குளம் கிராமசேவகர் பிரிவு), கதிர்வேலர்பூவரசன்குளம், பல்லபூவரசன்குளம், (பூவரசன்குளம் (மகிழன்குளம் கிராமசேவகர் பிரிவு) ஆகிய நான்கு இடங்களும் பூவரசமரம் காரணமாக ஏற்பட்ட இடப்பெயர்களாகும்.

கூழாமரம் என்ற பெயருடன் தொடர்பாக வவுனியா வடக்கு பிரதேச செயலர்பிரிவில் உள்ள வெடிவைத்த கல்லு கிராமசேவகர் பிரிவில் கூழாங்குளம் என்னும் இடமும், வெங்கலச் வெட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள பிராமணாலங்குளம் கிராமசேவகர் பிரிவிலும் கூழாங்குளம் என்னும் இடமும் உள்ளன. இவை தவிர வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் பேயாடி கூழாங்குளம், வைகாளி கூழாங்குளம், சாஸ்திரி கூழாங்குளம், பிராமணத்தி கூழாங்குளம் என்னும் இடங்களும் கூழாமரங்காரணமாக ஏற்பட்டவையாகும்.
தம்பனை என்பது ஒருமரமாகும் (சாம்பசிம்பிள்ளை ரீ.வி., பாகம் - பக்.858) ஜே.பி.லூயிஸ் அவர்களும் இதனை அடையாளப்படுத்தியுள்ளார் (பக்.184, 383). இம்மரத்தின் தாவரவியற்பெயர் Michodon zeylanicus என்பதாகும். இம்மரத்தின் பெயருடன் தொடர்பான எட்டுக்கிராமங்கள் வவுனியா மாவட்டத்தில் காணப்படுகின்றன. வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள தம்பனைச்சோலை, தம்பனைக்குளம் (பூவரசன்குளம் கிராமசேவகர் பிரிவு), சின்னத்தம்பனை (வேலங்குளம் கிராமசேவகர் பிரிவு), தம்பனைக்குளம் (கூமன்குளம் கிராமசேவகர் பிரிவு), தம்பனைக்குளம் (ஓமந்தை கிராமசேவகர் பிரிவு) என்பனவும், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள தம்பாகமுவ கிராமமும், செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள சின்னத்தம்பனை (பெரியபுளியாலங்குளம் கிராமசேவகர் பிரிவு), பெரிய தம்பனை என்பனவே அவ்விடங்களாகும்.

மகிழ மரத்தின் பெயருடன் தொடர்பான ஐந்து இடங்களில் மகிழரோடைக் கிராமம் வவுனியா வடக்கிலும், பத்தினியார் மகிழங்குளம், மகிழன்குளம், மாதர் பணிக்கர் மகிழன்குளம், வேடமகிழன்குளம் என்பன வவுனியா பிரதேச செயலர் பிரிவிலும் அமைந்துள்ளன. அவ்விதமே கருங்காலி மரத்துடன் தொடர்பான ஐந்து இடங்களும் காணப்படுகின்றன. அவையாவும் வவுனியா பிரதேச செயலர் பிரிவிலேயே அமைந்துள்ளன. கருங்காலிக்குளம் என்ற பெயரில் கள்ளிக்குளம் கிராசேவகர் பிரிவிலும், வேலன்குளம் கிராமசேவகர் பிரிவிலும் தலா ஒவ்வொரு இடங்களுள. அவ்விதமே கதிரன்குளம் என்ற பெயரிலும் கள்ளிக்குளம் கிராமசேவகர் பிரிவிலும், மகிழன்குளம் கிராமசேவகர் பிரிவிலும் தலா ஒவ்வொரு இடங்களுள. கதிரா என்பதும் கருங்காலியைக்குறிக்கும். "கதிரங்கருங்காலி" என்கிறது சேந்தன்றிவாகரம் (பக்.59). இவற்றைவிடக் கருங்காலி சின்னக்குளம் என்னும் கிராமமும் இப்பிரதேச செயலர் பிரிவில் உள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

நாவல்மரமும் இலங்கையில் பரவலாகக் காணப்படும் ஒரு மரமாகும். வவுனியா பிரதேச செயலர் பிரிவில் உள்ள திருநாவற்குளம், நாவற்குளம் (மருதங்குளம் கிராமசேவகர் பிரிவு), நாவற்குளம் (ஆசிக்குளம் கிராமசேவகர் பிரிவு) என்பனவும், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள நாவற்குளம் (மகாமைலங்குளம் கிராமசேவகர் பிரிவு), கந்த நாவக்குளம் என்பனவும் நாவல் மரம் காரணமாக ஏற்பட்ட ஏர்ப்பெயர்களாகும்.

இலங்கையின் வடபகுதிக்காட்டுப்பிரதேசங்களில் காணப்படும் மரங்களில் பாலைமரமும் ஒன்றாகும். இம்மரத்துடன் தொடர்பான நான்கு கிராமங்கள் காணப்படுகின்றன. வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள பாலைக்கல்லு, பாலைப்பனிக்குளம் என்பனவும் வவுனியா வடக்கு, மற்றும் வவுனியா பிரதேச செயலர் பிரிவுகளில் காணப்படும் பாலமோட்டை என்னும் பெயருடைய கிராமங்களும் இதில் அடங்கும். பாலைமோட்டை என்பதே பாலமோட்டையாகத் திரிபடைந்துள்ளது. ஜே.பி.லூாயிஸ் அவர்கள் தமது நூலில் பாலைமோட்டை என்றே குறிப்பிட்டுள்ளார் (பக். 94).

நீர்க்கடம்பு என்று அழைக்கப்படும் சாளம்பைமரமானது(சாலம்பை) குளங்கள் மற்றும் நீர்நிலைகளுக்கு அண்மையிலும் நீரிலும் காணப்படும். பொதுவாக உலர்வலயத்தில் காணப்படும் மரம் (குகதாசன் கே.எஸ. 2004: பக்.256). இம்மரத்துடன் தொடர்புடையதாக சாளம்பைக்குளம், சாலம்பன், கரியசாலம்பன் என்னும் இடங்கள் வவுனியா பிரதேச செயலர் பிரிவில் உள்ளன. அவ்விதமே விளாமரத்துடன் தொடர்புடையதன புதுவிளாங்குளம் என்னும் ஊர் வவுனியா வடக்குப் பிரதேச செயலர் பிரிவிலும், விளாத்திக்குளம், சின்ன விளாத்திக்குளம், பெரிய விளாத்திக்குளம் என்னும் ஊர்கள் வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலும் காணப்படுகின்றன. மா என்றால் பெரியது என்று ஆத்தம். அதேவேளை மாமரம் என்ற கருத்தும் உள்ளது. வெங்கலச்செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலுள்ள மாங்குளம் , புளிமாங்குளம் என்பனவும், வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள மாமடு என்னும் கிராமமும், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள மாமடு என்னும் கிராமமும் மாரத்துடன் தொடர்பாக ஏற்பட்டவையாகக் கருதுவதே பொருத்தமுடையது. காரணம் ஏனைய இடப்பெயர்கள் போல இங்கும் மா என்பது குளத்துடன் தொடர்புடையதாகக்காணப்படும் தாவரமாகக் கொள்ளல் ஏற்புடையதாகிறது. ஜே.பி.லூாயிஸ் அவர்கள் ஒட்டுசுட்டானுக்கும் அன்னதேவன்மடுவிற்கும் இடையில் பாரிய மாமரம் ஒன்று காணப்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளமையும் இங்கு நோக்கத்தக்கது (பக்.382).

வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள அரசன்குளம் (கள்ளிக்குளம் கிராமசேவகர் பிரிவு), அரசன்குளம் (ஓமந்தை கிராமசேவகர் பிரிவு), அரசடிக்குளம், அரசமுறாப்பு என்பன அரசமரம் காரணமாக ஏற்பட்ட இடப்பெயர்களாகும். சிலர் அரசன்குளம் என்பதை அரசனுடன் தொடர்புடையதாகக் கருதுவர். ஆனால் குளத்துடன் தொடர்பான மரங்களை வைத்தே பெரும்பாலன இடப்பெயர்கள் அமைந்துள்ளதைக்காணுமிடத்து அவை அரசமரத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமுடையதாகவுள்ளது.

காஞ்சுரை என்பது எட்டிமரத்தைக்குறிக்கும் (தேவேந்திரநாத பண்டிதர், 1958, பக். 42). அந்தவகையில் எட்டிமரத்துடன் தொடர்பாகக் காஞ்சுரமோட்டை (வவுனியா வடக்கு), காஞ்சுரங்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு) ஆகிய ஊர்கள் இமைந்துள்ளன. ஆயில்மரமானது உலர்வலயத்துக்குரிய மரங்களிலொன்று. பூதிகா என்பது அதன் வேறு பெயராகும் (பொன்னையா ஐ, 1928 (பாகம்-1): பக்.90). ஆயில்தைலம் வாதரோகசிகிச்சையிலும், சிரரோகசிகிச்சையிலும் முக்கியமானது (பரராசசேகரம் சிரரோகம் பக். 18, 75. வாதரோகநிதானம் பக். 06, 108). ஆயில் மரத்துடன் தொடர்பான ஆயிலடி என்னும் ஊர் வவுனியா வடக்கிலுள்ளது. அது போலவே உலர்வலயத்துக்குரிய மரங்களான முதிரைமரம் காரணமாக முதிரன்குளம் (வவுனியா வடக்கு), தான்றிமரம் காரணமாக தாண்டிக்குளம் (தான்றி என்பதன் திரிபு) (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), தேக்கமரம் காரணமாக தேக்கந்தோட்டம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), நறுவிலிமரம் காரணமாக கருநறுவிலிக்குளம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), நறுவிலிக்குளம் (வவுனியா பிரதேச

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

செயலர் பிரிவு), மருக்காரை அல்லது மரக்காரைமரம் காரணமாக மருக்காரம்பாளை (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), மறக்காரம்பாளை (செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவு), கருவேம்பு காரணமாக கருவேப்பங்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), நாவிமரம் காரணமாக நாவிக்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), நவ்வி (நாவி என்பதன் திரிபு) (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), இத்திமரம் காரணமாக இத்திக்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), பனிச்சை காரணமாக பனிச்சங்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), பணிச்சன்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), கரும்பனிச்சோலைக்குளம் (கரும்பனிச்சை வன்னிமாவட்டத்தில் பொதுவாகக் காணப்படும் மரங்களில் ஒன்றாகும்) (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), பனிக்கநீராவி (பனிச்சநீராவி என்பதே பனிக்க நீராவியாகத் திரிபடைந்துள்ளது. நீராவி என்பதும் சிறுநீர்நிலையைக்குறிக்கும்.) (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), திருவாத்தி (ஆத்தி) காரணமாக ஆத்திமோட்டை (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), சாரணாத்திக்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), குருந்தமரம் காரணமாக குருந்தன்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), குருந்தன்குளம் (வவுனியா தெற்கு பிர தேச செயலர் பிரிவு), புங்கமரங்காரணமாகப் புங்கன்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), வாகைமரங்காரணமாக துட்டுவகை (செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவு), வாகை கட்டின ஒலுக்குளம் (செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவு) இலவமரங்காரணமாக இலிவன்குளம் (இலவங்குளம்) (வவுனியா பிரதேச செயலர் பிரிவு) என்னும் இடப் பெயர்கள் காணப்படுகின்றன.

மேலும், இலந்தை மரத்துடன் தொடர்பாக இலந்தைக்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), கோடாலி பறிச்சான் (வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவு) என்னும் இடங்களுமுண்டு. கோடாலி என்பதற்கு இலந்தை மரம் என்றும் பொருளுண்டு (சாம்பசிவம்பிள்ளை. ரீ.வீ, 1991: பாகம்-2, பக். 1716). காயாமல் என்றும் பச்சையாக இருக்கும் மரத்துக்குக் காயாமரம் என்று பெயர் இது என்றும் இலையுதிரா மரமாகும். (மணி பி.எஸ். 1989: பக்.178) வவுனியா பிரதேச செயலர் பிரிவில் உள்ள மருதங்குளம் கிராமசேவகர் பிரிவு, வெளிக்குளம் கிராமசேவகர் பிரிவு என்பவற்றில் காயன்குளம் என்ற பெயரில் கிராமங்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது. அவ்விதமே காரைமரங்களில் செங்காரை என்றும் ஒரு வகையுண்டு. அதனைச் சென்னகாரை என்றுங்கூறுவர் (பரராசசேகரம் சிரரோகநிதானம், பக்.99) செங்கரத்திமோட்டை என்னும் இடம் வவுனியா பிரதேச செயலர் பிரிவில் உள்ளது. ஜே.பி.லூயிஸ் அவர்கள் இவ்விடத்தையே செங்காரை என்று குறிப்பிட்டுள்ளார் (பக்.93).

கூமா என்பது உலர்வலயத்துக்குரிய ஒரு மரம் (குகதாசன் கே.எஸ். 2004: பக்.188). இம்மரப்பெயருடன் தொடர்பாக கூமன்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு) அமைந்துள்ளது. பரம்பை என்பது வன்னிமரத்தைக்குறிக்கும் (தேவேந்திரநாத பண்டிதர், 1958: 88) இம்மரம் மடுவிற்கு அருகில் காணப்பட்டதன் நிமித்தம் பரம்பைமடு என்னும் இடப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். தற்காலத்தில் இவ்விடம் பம்பைமடு (வவுனியா பிரதேச செயலர் பிரிவு) என்று அழைக்கப்படுகிறது. அவ்விதமே துட்டவி என்பது காட்டிலந்தையைக குறிக்கும் (மரப்பெயர் அகராதி). வவுனியா பிரதேச செயலர் பிரிவில் காணப்படும் துடவிக்குளம், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவில் காணப்படும் துடாசிக்குளம் என்பன துட்டவியின் திரிபினால் ஏற்பட்ட இடப்பெயர்களாகக் கருதப்படுகிறது. ஊஞ்சில் அல்லது ஊஞ்சல் மரம் என்பது உசிலைமரத்தைக் குறிக்கும் (மாதையன்.பெ., சித்திரபுத்திரன்.எச்., 1986: பக்.402). எனவே, வவுனியா வடக்கு பிரதேசசெயலர் பிரிவில் உள்ள ஊஞ்சல் கட்டி என்னும் ஊர்ப்பெயர் உசிலைமரங்காரணமாக ஏற்பட்டிருக்கலாம். ஊஞ்சல் மரத்துடன் தொடர்புடையதாக ஊஞ்சலூர், உசிலம்பட்டி என்னும் ஊர்கள் தமிழ்நாட்டில் உள்ளன (பகவதி கு., 2005: பக்.11). வெள்ளாயா என்பது காஞ்சிமரத்தைக் குறிக்கும். (மாதையன்.பெ., சித்திரபுத்திரன்.எச்., 1986: பக். 517) ஆற்றங்கரைகளிலும், வெள்ளப்பெருக்குக்குரிய இடங்களிலும் இது அதிகம் காணப்படும். (குகதாசன் கே.எஸ்., 2004: பக். 388) வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள வெள்ளாடிக்குளம் காஞ்சி மரங்காரணமாக ஏற்பட்ட ஒன்றாகும். தமிழ்நாட்டில் காஞ்சிமரங்காரணமாக ஏற்பட்ட பேருர்களில் காஞ்சிபுரம் ஒன்றாகும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

(பகவதிகு., 2005: பக்.11) என்பதும் இங்கு கவனிக்கத்தக்கது. குருமம் என்பது காட்டிலுப்பையைக்குறிக்கும் (சாம்பசிவம்பிள்ளை ரீ.வீ., 1991, பாகம்-2, பக்.1554). அந்தவகையில் வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள குறுமன்காடு என்னும் கிராமம் காட்டிலுப்பைமரங்காரணமாக ஏற்பட்டது என்று கருதலாம். சடவாக்கை அல்லது சடவாக்கு என்பது உலர்வலயத்துக்குரிய ஒரு சிறு மரமாகும் (குகதாசன் கே.எஸ்., 2004: பக்.408). இம்மரப்பெயருடன் தொடர்பாக சடவங்குளம் என்னும் கிராமம் வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் காணப்படுகிறது. ஓடையா என்பதும் உலர்வலயத்துக்குரிய ஒரு மரமாகும்(குகதாசன் கே.எஸ். 2004: பக்.111). ஓடாவி சின்னக்குளம் என்பது இம்மரங்காரணமாக ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

**வவுனியா மாவட்டத்தில் செடிப்பெயர்களுடன் தொடர்பாக அமைந்துள்ள இடப்பெயர்கள்**

**அட்டவணை – 4 செடிப்பெயர்கள்**

| இலக்கம் | செடிப்பெயர் | எண்ணிக்கை |
|---|---|---|
| 01 | பட்டி | 01 |
| 02 | துவரை | 04 |
| 03 | நஞ்சுண்டான் | 01 |
| 04 | கரம்பை | 03 |
| 05 | பீச்சுவிளாத்தி | 01 |
| 06 | கள்ளி | 02 |
| 07 | பொன்னாவரசு | 01 |
| 08 | கற்றாழை | 04 |
| 09 | ஈச்சை | 01 |
| 10 | நத்தைச்சூரி | 01 |
| 11 | பாவட்டை | 01 |
| 12 | எருக்கலை | 01 |
| 13 | பன்னை | 02 |
| 14 | சிறுவழுதுணை | 01 |
| 15 | ஆவாரை | 01 |
| 16 | உமரி | 01 |
| 17 | கொறுக்காய்ப்புளி | 02 |
| 18 | குருக்கத்தி | 01 |
| 19 | தவசிமுருங்கை | 04 |
| | **மொத்தம்** | **33** |

மரங்களுக்கு அடுத்ததாக செடிவகைகள் வவுனியா மாவட்ட இடப்பெயர்களில் ஆதிக்கம் செலுத்துவதைக் காணக்கூடியதாகவுள்ளது. (அட்டவணை- 4) இம்மாவட்டத்தில் பதினெட்டுவகையான செடிப்பெயர்களுடன் தொடர்பாக முப்பத்துமூன்று இடப்பெயர்கள் காணப்படுக்கின்றன. அவை பற்றியவிபரம் வருமாறு:

துவரஞ்செடியானது உலர்வலயக்காடுகளிலும், பற்றைக்காடுகளிலும் காணப்படும் ஒரு செடியாகும் (குகதாசன் கே.எஸ்., 2004: பக்.244). அச்செடியுடன் தொடர்பாகத் துவரன்குளம் (பட்டிக்குடியிருப்பு கிராமசேவகர் பிரிவு, வவுனியா வடக்கு), துவரனேரி (வவுனியா வடக்கு), துவரன்குளம் (நொச்சிமோட்டை கிராமசேவகர் பிரிவு, வவுனியா பிரதேச செயலர் பிரிவு), துவரன்குளம் (ஆசிக்குளம் கிராமசேவகர் பிரிவு, வவுனியா பிரதேச செயலர் பிரிவு) என்னும் இடப்பெயர்கள் காணப்படுகின்றன. கரம்பை என்பது சிறுகிளா என்றும் அழைக்கப்படும் ஒரு உலர்வலயச்செடியாகும் (தேவேந்திரநாதபண்டிதர், 1958: பக்.37, சாம்பசிவம்பிள்ளை பக்.1126,). இச்செடியுடன் தொடர்பாகக் கரம்பைக்காடு, கரம்பைக்குளம் என்னும் இடங்கள் வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலும், கரம்பைமடு என்னும் இடம் செட்டிக்குளம் பிரதேசசெயலர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பிரிவிலும் அமைந்துள்ளன. பீச்சுவிளாத்தி என்னும் செடியும் உலர்வலயத்துக்குரிய ஒரு முட்செடியாகும். இதன் பெயருடன் தொடர்பாக பீச்சுவிளாத்திக்குளம் என்னும் இடம் வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் அமைந்துள்ளது. சிலர் இவ்விடத்தைப் பிஞ்சுவிளாத்திக்குளம் என்றும் அழைக்கின்றனர்.

கள்ளிச்செடியுடன் தொடர்பாகக் கள்ளிக்குளம் என்ற பெயரில் வவுனியா பிரதேச செயலர் பிரிவில் இரண்டு இடங்களுள. அவை கள்ளிக்குளம் கிராமசேவகர்பிரிவிலும், ஈச்சங்குளம் கிராமசேவகர் பிரிவிலும் அமைந்துள்ளன. வன்னி மாவட்டத்தில் நாககள்ளி என்னும் கள்ளிவகை முற்காலத்தில் சாதாரணமாகக் காணப்பட்டதாக ஜே.பி.லூயிஸ் குறிப்பிட்டுள்ளமையும் ஈண்டு கவனத்திற் கொள்ளத்தக்கது (பக்.380). தருணி என்பது சோற்றுக்கற்றாளை (கற்றாளையைக்குறிக்கும் (வைத்தியமலையகராதி பக். 35). வவுனியா பிரதேசசெயலர்பிரிவிலுள்ள காத்தர் சின்னக்குளம் கிராமசேவகர் பிரிவு, சாளம்பைக்குளம் கிராமசேவகர் பிரிவு, சாஸ்திரி கூழாங்குளம் கிராமசேவகர் பிரிவு, ஆசிக்குளம் கிராமசேவகர் பிரிவு என்பவற்றில் உள்ள தரணிக்குளம் என்னும் கிராமங்கள் கற்றாளையுடன் தொடர்பாக ஏற்பட்ட இடப்பெயர்களாகும். நத்தைச்சூரி என்னும் சிறுசெடியும் உலர்வலயங்களில் காணப்படும் மருத்துவமூலிகைகளில் ஒன்றாகும்.

இச்செடிப்பெயருடன் சம்பந்தப்பட்டதாகக் கிடாச்சூரி என்னும் ஊர் வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் காணப்படுகிறது. முற்காலத்தில் சண்டைக்கோழி, கிடாயாடு முதலியவற்றிற்கு அவற்றின் உணவுடன் சேர்த்து நத்தைச்சூரியையும் கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. காரணம் நத்தைச்சூரி குடற்புழுக்களை அழித்து, அவற்றின் உடலுக்கு வன்மையைக் கொடுக்கும் என்பதாலாகும். அதனாற்றான் “எதைச்சொன்னாலும் அதைச்செய்யும் நத்தைச்சூரி” என்று கிராமப்புறத்தில் ஒரு பழமொழியும் உள்ளது. இங்கு கிடாயாட்டையும் நத்தைச்சூரியையும் தொடர்புபடுத்திக் கிடாச்சூரி என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

பன்குளம் என்ற பெயரில் வவுனியா வடக்கில் ஓரிடமும், வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் ஓரிடமும் உள்ளன. பன்னைக்குளம் என்பதே பன்குளமாகச் சுருங்கியிருக்க வேண்டும். பன்குளம் என்பதில் பன் என்பது பன்னைச்செடி என்று கதிர் தணிகாசலமும் குறிப்பிட்டுள்ளார் (பக்.189). பன் என்பது பருத்திச்செடி அல்லது நாணல் என்று தமிழ் லெக்சிக்கனும் (பாகம் - 4 பக். 2564) ஒருவகைப்புல்லினம் என்று சாம்பசிவம்பிள்ளை அகராதியும் (பாகம்-5, பக். 272) குறிப்பிட்டுள்ளமையும் கவனத்திற் கொள்ளத்தக்கன. சிறுவழுதுணை என்னும் கத்தரியினச்செடியின் பெயரில் வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் பட்டிக்குடியிருப்பு கிராமசேவகர் பிரிவிலுள்ள தோணிக்கல்லு என்னும் இடமும், வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் தோணிக்கல்லு கிராமசேவகர் பிரிவிலுள்ள தோணிக்கல்லு என்னும் இடமும் அமைந்துள்ளன. தோணி என்பதற்கு சிறுவழுதுணை என்று தமிழலெக்சிக்கன் (பாகம்- 4 பக். 2109) கூறுகிறது. முல்லைக்கல், பாலைக்கல், வேரக்கல் என்னும் இடப்பெயர்களில் கல் என்பதுடன் சேர்த்து மரப்பெயர்கள் காணப்படுவது போல இங்கும் கல்லுடன் சேர்ந்து காணப்படும் தோணி என்பதும் தாவரப்பெயர் என்று கருதுதல் ஏற்புடையதே.

ஆவாரஞ்செடியில் பேயாவிரை என்னும் ஒரு வகையுமுண்டு. பேயாவிரை என்பது பேயாரியாகத் திரிபடைந்திருக்கலாம் (சாம்பசிவம்பிள்ளை பாகம்- 5 பக்.590) அந்தவகையில் வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலுள்ள பேயாரிக்களம் ஆவாரை காரணமாக ஏற்பட்ட ஒன்றாகக் கருதப்படலாம். பொன்னாவரசங்குளம் என்னும் இடமும் வவுனியா பிரதேசசெயலர் பிரிவில் உள்ளது. உவர்வளரித்தாவரங்களில் உமரிச்செடியும் ஒன்றாகும் (குகதாசன், 2004 பக். 371) இதனைக்கோழியச்செடி என்றும் அழைப்பர். வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலுள்ள கோழியகுளம் என்பது உமரிச்செடி காரணமாக ஏற்பட்டதாகக்கருதலாம். வெடியுப்புக்கட்டி என்பது கொறுக்காய்ப்புளியைக் குறிக்கும் (சாம்பசிவம்பிள்ளை பாகம்- 5 பக். 1189). வெடிவைத்தகல்லு, வெடிவைக்காரன்குளம் என்பவற்றுக்கும் கொறுக்காய்ப்புளிமரத்துக்கும் தொடர்புகளிருக்க வாய்ப்புள்ளது. முன் குறிப்பிட்டது போல கல்லு, குளம் என்பன

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

மரப்பெயாருடன் இணைத்து வழங்கப்படும் பெயர்களாக வவுனியா மாவட்டத்தில் வழங்கப்படுதல் காண்க. தமிழ் லெக்சிக்கனில் வெடியுப்புக்கட்டு என்பதற்கு அம்பளங்காய் (அம்பரலங்காய் அல்லது மரிமாங்காய்) என்று பொருள் கூறப்பட்டுள்ளது (சாம்பசிவம்பிள்ளை அகராதி, பாகம்- 5, பக். 1189). அம்பரலங்காய், கொறுக்காய்ப்புளி இரண்டுமே உலர்வலையத்தில் வளரக்கூடியனவாகும். குருக்கர்குளம் என்னும் ஊர் வவுனியா வடக்குப் பிரதேச செயலர் பிரிவில் உள்ளது. குருக்கத்தி, குருக்கு என்பன பிரதண்டு அல்லது குடியோட்டிப்பூண்டைக் குறிப்பதாகவுள்ளது (தமிழ் லெக்சிக்கன் பாகம்- 2 பக். 1014).

வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலுள்ள தவசிக்குளம், தவசியாகுளம், தவசியூர் என்பனவும் வவுனியா தெற்கு பிரதேசசெயலர் பிரிவிலுள்ள தவசிக்குளம் என்னும் ஊரும் தவசிமுருங்கை என்னும் செடி காரணமாக ஏற்பட்டிருக்க வேண்டும். மேலும் பட்டிப்பூச்செடி காரணமாகப் பட்டிக்குடியிருப்பு (வவுனியா வடக்கு), நஞ்சுண்டான்செடி காரணமாக நஞ்சுதிண்டான் (வவுனியா வடக்கு), ஈஞ்சுச்செடி காரணமாக ஈச்சங்குளம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), பாவட்டஞ்செடி காரணமாக பாவட்டன்குளம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), எருக்கலஞ்செடி காரணமாக எருக்கலங்கல்லு (செட்டிக்குளம் பிரதேசசெயலர் பிரிவு) என்னும் இடப்பெயர்களும் வவுனியா மாவட்டத்தில் காணப்படுகின்றன.

**வவுனியா மாவட்டத்தில் கொடிப்பெயர்களில் அமைந்துள்ள இடப்பெயர்கள்**

**அட்டவணை – 5 கொடிப்பெயர்கள்**

| இலக்கம் | கொடிப்பெயர் | எண்ணிக்கை |
|---|---|---|
| 01 | பாகல் | 11 |
| 02 | குறிஞ்சா | 03 |
| 03 | முல்லை | 03 |
| 04 | அடம்பு | 04 |
| 05 | கச்சல்கொடி | 03 |
| 06 | பிரம்பு | 03 |
| 07 | ஆடுதின்னாப்பாலை | 02 |
| 08 | கொடுவேலி | 01 |
| 09 | அவரை | 01 |
| மொத்தம் | 09 | 31 |

கொடிவகைகளில் பதினொருவகை வவுனியா மாவட்ட இடப்பெயர்களில் காணப்படுகின்றன. (அட்டவணை-5). பாவல்கொடியுடன் தொடர்பாகப் பாவங்குளம் என்னும் பதினொரு இடங்களை வரதராஜன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார் (வரதராஜன் சி, 1992 பக்.46-48). அவை செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவில்-5, வவுனியா பிரதேச செயலர் பிரிவில்-5, வவுனியா வடக்கில்-1 எனக் காணப்படுகின்றன. பாவற்குளம் என்பதில் பாவல் என்பது பாகற்குளத்தைக் குறிப்பதாகக் கதிர் தணிகாசலம் அவர்களும் குறிப்பிட்டுள்ளார் (1992 பக். 189). வவுனியா மாவட்டத்தின் பெரும்பாலான கிராமங்கள் காடுகள் அல்லது பற்றைக்காடுகளுக்கருகில் அமைந்துள்ளன. இப்பற்றைக்காடுகளிலும் புதர்களிலும் சிறுபாகல் அல்லது குருவித்தலைப்பாகல் என்னும் ஒரு கொடிவகை இயற்கையாகவே வளர்வதுண்டு. இதன் காயை மக்கள் உணவுக்காகப் பயன்படுத்துவதுண்டு. நீரிழிவைக் கட்டுப்படுத்துவதில் இப்பாகற்காய்உதவுவதாக மருத்துவநூல்கள் கூறுகின்றன. குறிஞ்சாக்கொடியுடன் சம்பந்தப்பட்டதாக குறிஞ்சாக்குளம் (வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவு), குறவமோட்டை (வவுனியா பிரதேச செயலர் பிரிவு), குறிஞ்சாக்குளம் (செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவு) என்னும் இடங்கள் அமைந்துள்ளன. குரவரம் என்பது குறிஞ்சாவைக்குறிக்கும் (தேவேந்திரநாதபண்டிதர், 1958: 48). குறிஞ்சாயில் சிறுகுறிஞ்சா, பெருங்குறிஞ்சா என்னும் வகைகளுண்டு. பெருங்குறிஞ்சாவைப் பாலைக்கொடி என்றும் சில நூல்களில் கூறப்பட்டுள்ளது. வவுனியாவில் பெருங்குறிஞ்சாக்கொடியைப் பரவலாகத் தற்போதும் காணக்கூடியதாகவுள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

முல்லை என்ற பெயரில் வவுனியா பிரதேச செயலர் பிரிவில் முல்லைக்குளமும், செட்டிக்குளம் பிரதேசசெயலர் பிரிவில் முல்லைக்கல்லு என்னும் இடமும், வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் தேரில்படர்ந்தான் என்னும் இடமும் உள்ளன. இங்கு தேரில் படர்ந்தான் என்பது கடையேழு வள்ளல்களில் ஒருவரான பாரிமன்னன் படர்கொம்பின்றித் தவித்த முல்லைக்கொடிக்குத் தேரீந்ததததைச் சுட்டும் காரணப்பெயராக அமைந்துள்ளமை நோக்கற்குரியது. அடம்பங்கொடியுடன் தொடர்பாகச் சின்னடம்பன், பெரியடம்பன் என்னும் ஊர்கள் வவுனியா வடக்கிலும், அடம்பன்குளம் வவுனியா பிரதேச செயலர் பிரிவிலும், அடம்பன்குளம் (அடப்பன்குளம்) செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவிலும் அமைந்துள்ளன. கொம்மட்டிக்காய் மிகவும் கசப்பானது. உண்டால் குமட்டலை ஏற்படுத்துவதால் கும்மட்டிக்காய் என்றும் கொம்மட்டிக்காய் என்றும் அழைக்கப்படுகிறது. கொம்மட்டி கொடிவகையைச் சேர்ந்தது. இதனைக் கைச்சல்கொடி என்றும் அழைப்பர் (சாம்பசிவம்பிள்ளை பாகம் - 2 பக்.944). கச்சல் கொடி என்னும் பெயரில் வவுனியா வடக்கில் ஓரிடமும், மகாகச்சல்கொடி, சிறுகச்சல் கொடி என்னும் பெயர்களில் வவுனியா தெற்கில் இரு இடங்களும் உள. தற்போது சிங்களமக்கள் அதிகம் வாழ்வதன் காரணமாக மகாகச்சக்கொடியானது மகாகச்சக்கொட்டியா என்றும் சிறுகச்சக்கொடியானது குடாகச்சக்கொட்டியா என்றும் அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

உலர்வலயக்காடுகளில் காணப்படும் கொடிவகைகளில் பிரப்பங்கொடியும் ஒன்றாகும். வவுனியா பிரதேச செயலர் பிரிவில் கள்ளிக்குளம் கிராமசேவகர் பிரிவிலும், ஆசிக்குளம் கிராமசேவகர் பிரிவிலும் பிரப்பங்குளம் என்னும் இரு இடங்களும், பரப்பமடுவ என்னும் ஓரிடமும் பிரப்பங்கொடியுடன் தொடர்பாக அமைந்துள்ளன. ஆடுதின்னாப்பாலைக்கொடியைக் குறிக்கும் சமனம் (வைத்திய மூலிகை அகராதி பக்.24) என்னும் பெயரில் சமனங்குளம் (வவுனியா வடக்கு), அலகல் சமனன்குளம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), சமலன்குளம் (வவுனியா பிரதேச செயலர் பிரிவு) என்னும் இடங்கள் காணப்படுகின்றன. அனல் அல்லது வன்னி என்பது கொடுவேலியைக்குறிக்கும் (பொன்னையா ஐ.,1935: பக்.10, 15 தமிழ் லெக்சிக்கன் பாகம்- 1 பக். 189). அனலக்கரை என்னும் ஊர் வவுனியா தெற்கில் உள்ளது. அவரைக்கொடியுடன் தொடர்பாக அவரன்குளம் என்னும் இடப்பெயர் வவுனியா தெற்கில் உள்ளது.

**வவுனியா மாவட்டத்தில் புற்பெயர்களில் அமைந்துள்ள இடப்பெயர்கள்**

**அட்டவணை – 6 புற்பெயர்கள்**

| இலக்கம் | கொடிப்பெயர் | எண்ணிக்கை |
|---|---|---|
| 01 | பனை | 01 |
| 02 | நெல் | 03 |
| 03 | மூங்கில் | 03 |
| 04 | கோரை | 01 |
| 05 | தினை | 02 |
| 06 | கானாங்கோழை | 02 |
| மொத்தம் | 06 | 12 |

வவுனியா மாவட்டத்தில் புற்பெயர்களுடன் தொடர்பான இடப்பெயர்கள் பன்னிரண்டு காணப்படுகின்றன. (அட்டவணை-6). அவற்றின் விபரம் வருமாறு:

புல்வகைகளில் மிகவும் உயரமானது பனையாகும். அதனுடன் தொடர்பாக பனைநின்றான் என்னும் இடம் வவுனியா வடக்கு பிரதேசசெயலர் பிரிவிலும், நெல்லுடன் தொடர்பான நெற்குளம் (கள்ளிக்குளம் கிராமசேவகர் பிரிவு), நெற்குளம் (பறைநட்ட கல்லு கிராமசேவகர் பிரிவு), நெல்வெளிக்குளம் என்பன வவுனியா பிரதேசசெயலர் பிரிவிலும், கோரைப்புல்லுடன் தொடர்பான கோரைமோட்டை என்னும் இடம் வவுனியா வடக்கிலும் காணப்படுகின்றன. மூங்கிலைக்குறிக்கும் மூங்கில் குளம், வேரக்கல்லு என்பன வவுனியா

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பிரதேச செயலர் பிரிவிலும், வேரகம வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிலவிலும் அமைந்துள்ளன. வேரல் என்பது மூங்கில் (சாம்பசிவம் பிள்ளை அகராதி பாகம்- 5 பக்.1268). தினை முதலிய தானியங்களின் பதருக்கு உலு என்று பெயர் (கழகத்தமிழ் அகராதி பக்.174). எனவே, வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் உள்ள உலுக்குளம், வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவிலுள்ள பெரிய உலுக்குளம் என்பன தினை காரணமாக ஏற்பட்டிருத்தல் வேண்டும். குரக்கன் அல்லது கேழ்வரகின் பதரான ஒட்டு காரணமாக ஒட்டுசுட்டான் என்னும் இடம் முல்லைத்தீவு மாட்டத்தில் இருப்பதையும் இங்கு கவனத்திற் கொள்ளலாம். ஊஞ்சல்கட்டி, வெடிவைத்தகல்லு கிராமங்களுக்கருகில் வரகுத்தறை என்னும் இடம் ஜே.பி. லூயிஸ் அவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளபோதிலும் (லூயிஸ். 2012: பக்.106) தற்போது அவ்விடத்தை அடையாளங்காணமுடியவில்லை. கானாங்கோழை என்னும் புல்லானது கன்னாங்கீரை, கன்றுபுக்கான் என்று அழைக்கப்படுகிறது (மாதையன்.பெ., சித்திரபுத்திரன்.எச்., 1986: பக்.277). இந்தப்புல் நீர்நிலைகளுக்கருகில் வளர்வதுடன் கன்றுக்குட்டி இப்புல்லை விரும்பியுண்பதால் கன்றுக்குட்டிப்புல் என்றும் அழைக்கப்படும் (சாம்பசிவம்பிள்ளை அகராதி பாகம்- 2, பக்.1294). கன்னன்குளம் (வவுனியா பிரதேசசெயலர் பிரிவு), கன்னாட்டி (செட்டிக்குளம் பிரதேச செயலர் பிரிவு) என்பன இப்புல்காரணமாக ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

**வவுனியா மாவட்டத்தில் நீர்த்தாவரப் பெயரில் அமைந்துள்ள இடப்பெயர்கள்**

**அட்டவணை- 7 நீர்த்தாவரங்கள்**

| இலக்கம் | நீர்த்தாவரப்பெயர் | எண்ணிக்கை | வீதம் |
|---|---|---|---|
| 01 | தாமரை | 08 | |
| 02 | தாளி | 02 | |
| 03 | நீலோற்பலம் | 02 | |
| **மொத்தம்** | 03 | 12 | |

வவுனியா மாவட்டத்தில் நீர்த்தாவரங்களான தாமரை, நீலோற்பலம், தாளி என்பவற்றின் பெயர்களாலமைந்த பன்னிரண்டு இடங்களுள்ளன (அட்டவணை- 7). வவுனியா பிரதேச செயலர் பிரிவில் இறம்பைக்குளம் (இறம்பைக்குளம் கிராமசேவனர் பிரிவு), மகாறம்பைக்குளம், இறம்பைக்குளம் (பூவரசன்குளம் கிராமசேவகர் பிரிவு), இறம்பைக்குளம் (மகிழன்குளம் கிராமசேவகர் பிரிவு), தாமரைக்குளம், நெலுக்குளம் என்பனவும், வவுனியா வடக்கு பிரதேச செயலர் பிரிவில் இறம்பைக்குளம் (நெடுங்கேணி கிராமசேவகர் பிரிவு), வவுனியா தெற்கு பிரதேச செயலர் பிரிவில் நெலுமடுவ என்னும் கிராமமும் அமைந்துள்ளன. இறம்பை என்பது தாமரையைக்குறிக்கும் (கதிர் தணிகாசலம், 1992: பக்.189). நெலு என்பது சிங்களத்தில் தாமரையைக் குறிப்பது (சிவசண்முகராஜா சே, 2009 பக். 267).

கிழவி என்பதற்கு முருங்கை, கல்லாரை என்னும் பொருள்களுள் (மூலிகை அகராதி,1903, பக்.21, சாம்பசிவம்பிள்ளை பாகம்- 2 பக். 1460). கல்லாரை என்பது நீலோற்பலத்தைக்குறிக்கும். "நீலோற்பல மிந்தீவரங் குவலய நீலம் பானல் காவி கருங்குவளை கல்லாரமுமெனக் கழறலாகும்" சேந்தன்றிவாகரம், 1897, பக்.73),

**"கல்முகப் பிரமங் கடிய நால் வேதியன்**
**செல்முகக் கரந்தை சிறுமலைக் குறத்திதான்**
**வெல்முகக் கிழவி வேண்டு கோட்டத்திதான்**
**நல்முகக் கல்லினல்லாரைப் பேரே"**

என்று கல்லாரையின் வேறு பெயர்களைக் கூறியுள்ளது சட்டமுனி நிகண்டு (பக்.126, பாடல் 876). வவுனியா பிரதேச செயலர் பிரிவில் மருதமடு கிராசேவகர் பிரிவிலும், மாளிகை கிராமசேவகர் பிரிவிலும் கிழவிகுளம் என்ற பெயரில் இடங்களுள. இங்கு கிழவி என்பது குளத்துடன் தொடர்பாகக் காணப்படுவதால் அது கல்லாரை எனப்படும் நீலோற்பலத்தைக் குறிப்பதாகக் கொள்வது பொருத்தமுடையது. யாழ்ப்பாண மாவட்டம் வடமராட்சியில் கிழவித்தோட்டம் என்னும் ஊர் உள்ளது. அது தோட்டத்துடன் தொடர்புடையதாக இருப்பதால்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

முருங்கைமரத்தைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது (சிவசண்முகராஜா சே. 2018: பக். 27). நீர்த்தாவரங்களில் தாளியும் முக்கியமான ஒன்றாகும். வவுனியா பிரதேச செயலர் பிரிவிலுள்ள பூவரசன்குளம் கிராமசேவகர் பிரிவிலும், சாளம்பைக்குளம் கிராமசேவகர் பிரிவிலும் தாளிக்குளம் என்ற பெயரில் ஊர்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

இந்த ஆய்வின் மூலம் வவுனியா மாவட்டத்தில் உள்ள 512 கிராமங்களில் 315 கிராமங்கள் தாவரமூலிகை இடப்பெயர்களுடன் சம்பந்தப்பட்டவையாக இருப்பது கண்டறியப்பட்டுள்ளது. அதாவது இம்மாவட்டத்திலுள்ள கிராமங்களில் அறுபது சதவீதத்துக்கும் அதிகமான கிராமங்கள் தாவரமூலிகைப்பெயர்களுடன் தொடர்புபட்டுக்காணப்படுகின்றன. அவற்றுள் மரங்களுடன் தொடர்புடையவை மிகஅதிகமாகவும் (72 சதவீதம்), மற்றவை செடி, கொடி, புற்கள், நீர்த்தாவரங்களுடனும் சம்பந்தப்பட்டவையாகவும் காணப்படுகின்றன. மரங்களும் செடிகளும் பெரும்பாலும் பல்லாண்டு வாழ்பவையாக ஓரிடத்தில் நிலைத்து நிற்பதால் அவற்றின் பெயரால் இடங்கள் அடையாளப்படுத்தப்பட்டிருப்பதில் வியப்பேதும் இல்லை. வவுனியா மாவட்டம் உலர்வலயத்துக்குரியதாகவும், உலர்வலயக்காடுகள், பற்றைக்காடுகளைக் கொண்டதாகவும் இருப்பதால் இங்கு இடப்பெயர்களுக்குக் காரணமாக அமைந்துள்ள பெரும்பாலான தாவர மூலிகைகள் உலர்வலயத்துக்குரியவையாகக் காணப்படுகின்றன.

செடிகளும், கொடிகளும் உலர்வலயத்துக்குரியவையாகவே அமைந்துள்ளன. அதேவேளை மக்கள் குடியேற்றம் குளங்கள், மடு, மோட்டை, ஓடை போன்ற நீர்நிலைகளையண்டி ஏற்பட்டதன்காரணமாக அந்நீர்நிலைகளுடன் தொடர்புபடுத்தப்பட்டதாகத் தாவரமூலிகை இடப்பெயர்கள் காணப்படுகின்றன. குளம் போன்ற நீர்நிலைகள் காரணமாக தாமரை போன்ற நீர்த்தாவரங்களும் கணிசமான அளவில் காணப்படுகின்றன. ஜே.பி.லூயிஸ் அவர்கள் *இலங்கையின் வன்னி மாவட்டங்கள்- ஒரு கையேடு* என்ற தமது நூலில் இம்மாவட்டத்தில் அதிகளவில் காணப்படக்கூடியதும், முக்கியமானதுமான தாவரங்களைப் பற்றிய குறிப்புகளையும் கொடுத்துள்ளார். வவுனியா மாவட்டத்தில் உள்ள இடப்பெயர்களுடன் தொடர்பான தாவரங்களிற் பல அவர் குறிப்பிட்ட தாவரப்பட்டியலுள் அடங்குவதைக் காணமுடிகிறது. அது மட்டுமன்றி 1815 ஆம் ஆண்டு காலப்பகுதியில் இங்கு இருந்த கிராமப்பெயர்களின் பட்டியலையும் அவர் கொடுத்துள்ளார்.

அந்தவகையில் நோக்குமிடத்து இக்கிராமங்களிற்பல மிகவும் தொன்மையானவையாகக் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கது. ஒரே தாவரப்பெயரில் பல இடப்பெயர்கள் அமைந்துள்ளமையானது அத்தாவரங்களின் பரம்பலை எடுத்துக்காட்டுவதாகவுள்ளது. அதேவேளை “ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்” என்பது போல இம்மாவட்டத்தில் பரவியிருக்கக்கூடிய தாவரங்களை எடுத்துக்காட்டுவது போலவும் பல ஊர்கள் அமைந்துள்ளன. மருத்துவத்தாவர மூலிகைகள் வவுனியா மாவட்டத்தில் செறிந்து காணப்படுகின்றன என்பதில் ஐயமில்லை. இம்மாவட்டத்தில் அவுசதப்பிட்டிய என்னும் ஊர் அமைந்திருப்பதும் அதை உறுதிப்படுத்துகிறது. சில பரம்பரை வைத்தியர் குடும்பங்கள் பத்து, பன்னிரண்டு தலைமுறைகளுக்கும் மேலாக இம்மாவட்டத்தில் மூலிகை வைத்தியத்தில் ஈடுபட்டு வந்துள்ளதையும் களஆய்வின்போது அறியக்கூடியதாக இருந்தது. எனவே, வவுனியா மாவட்டத்திலுள்ள தாவரமூலிகைகளைப்பற்றி விரிவான ஆய்வுகள் மேற்கொள்வதன் மூலம் இங்குள்ள மூலிகைகளைப்பற்றி வெளிக்கொண்டுவர முடியும். அதற்கு இந்த ஆய்வு ஒரு முன்னோடியாக அமையும் என்பது ஆய்வாளரின் நம்பிக்கையாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**உசாத்துயைநூல்கள்**


1. இராமநாதன் பொ. (2008), **சித்தமருத்துவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**, தாவடி, யாழ்ப்பாணம்.
2. பகவதி கு. (2005) **ஊர்ப்பெயர்கள் ஒரு வரலாற்று மூலம்**, முல்லை நிலையம், சென்னை
3. திலகநாயகம்போல். ப. (2000) **ஊரும்பேரும் - வலிகாமம் வடக்கில் ஓர் ஆய்வு.** வலிகாமம் (வடக்கு பிரதேசசபை மலர்)
4. ஞானப்பிரகாசர் சுவாமி. (1928), **யாழ்ப்பாண வைபவ விமர்சனம்**. Reprint – Asian Educational Srvices, New Delhi : Chennai (2003)
5. குமாரசுவாமி எஸ்.டபிள்யு (1918), **வடமாகாணத்துச் சில ஊர்ப்பெயர்கள்**, யாழ்ப்பாணம்.
6. பாலசுந்தரம்.இ. (2002), **ஈழத்து இடப்பெயர் ஆய்வு** , ரொறன்ரோ, கனடா.
7. கதிர் தணிகாசலம், (1992), **தமிழர் வரலாறும் இலங்கை இடப்பெயராய்வும்**, சரவணா பதிப்பகம், சென்னை – 600095
8. சிவசண்முகராஜா சே. (2019), **மன்னார் மாவட்ட இடப்பெயர்களில் மூலிகைத்தாவரங்களின் செல்வாக்கு – ஓர் ஆய்வு**, சான்லாக்ஸ், பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ், மலர்-3 இதழ் -4, தமிழ்நாடு, இந்தியா
9. சிவசண்முகராஜா சே. (2014), **கிளிநொச்சி மாவட்டத்தில் மூலிகைப்பெயர்களில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்கள்,** கிளிநொச்சி மாவட்ட தொன்மையின் மூலங்கள், கிளிநொச்சி மாவட்ட செயலகமும், பண்பாட்டுப்பேரவையும், கிளிநொச்சி.
10. சிவசண்முகராஜா சே. (2018), **யாழ்ப்பாண மாவட்டத்தில் மூலிகைப்பெயர்களில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்கள்**, சித்தமருத்துவ வளர்ச்சிக்கழகம், யாழ்ப்பாணம்.
11. வரதராஜன் சி. (1992), **வவுனியா மாவட்டம் (புள்ளிவிபரங்கள்**), தமிழ்த்தாய் பதிப்பகம், யாழ்ப்பாணம்.
12. ----. Annual Performance Reports and Accounts, Vavuniya District , 2018
13. Sivaharan K. (2019), Culture, History and Social Conditions / Economic Problems of Villages in Vavuniya
14. Lewis J.P. (தமிழில்) (2012), **இலங்கையின் வன்னி மாவட்டங்கள் ஒரு கையேடு** (வவுனியா – முல்லைத்தீவு), சேமமடு பதிப்பகம். (Lewis J.P. (1895), Manual of The Vanni Districts (Vavuniya and Mullaittvu), Colombo.
15. சிவசண்முகராஜா சே. (2012), **மூலிகைத்திறவுகோல்**, சித்தமருத்துவ வளர்ச்சிக்கழகம், யாழ்ப்பாணம்.
16. சாம்பசிவம்பிள்ளை ரீ.வீ, (1998), **தமிழ் ஆங்கில அகராதி** பாகம்-4, இந்தியமருத்துவம் மற்றும் ஓமியோபதித்துறை, சென்னை.
17. ---. **சேந்தன்றிவாகரம்** (1897), சென்னை.
18. தேவேந்திரநாதபண்டிதர் (1958), **பச்சிலைவர்க்க பசுமூலி அகராதி**, சென்னை – 1
19. பொன்னையா ஐ, (பதிப்பாசிரியர்) (1928), **பரராசசேகரம் சிரரோகநிதானம்**, சைவப்பிரகாச யந்திரசாலை, யாழ்ப்பாணம்.
20. பொன்னையா ஐ, (பதிப்பாசிரியர்) (1934), **பரராசசேகரம் வாதரோகநிதானம்**, மல்லாகம் திருஞானசம்பந்தர் யந்திரசாலை, யாழ்ப்பாணம்.
21. சாம்பசிவம்பிள்ளை ரீ.வீ. (1991), **தமிழ் ஆங்கில அகராதி**, பாகம்- 2, இந்தியமருத்துவம் மற்றும் ஓமியோபதித்துறை, சென்னை.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

22. மணி பி.எஸ். (1989), **வளம் தரும் மரங்கள்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரவேட் லிமிடெட், சென்னை.
23. மாதையன் பெ., சித்திரபுத்திரன் எச்., (1986), **மர இனப் பெயர்த் தொகுதி**, (தொகுதி - 1), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
24. பகவதி கு., (2005), **ஊர்ப்பெயர்கள் ஒரு வரலாற்று மூலம்,** முல்லை நிலையம், சென்னை.
25. குகதாசன் கே.எஸ்.. (2004), **தாவரவியல் மற்றும் பொதுவான சிறப்பியல்புகளுள்ள சில தாவரங்களின் சிரல் - சிறு குறிப்புகளுடன்**, தொண்டைமானாறு வெளிக்கள நிலையம், யாழ்ப்பாணம்.
26. ---. (1903) **வைத்தியமலையகராதி**, சென்னை.
27. **Tamil Lexicon**, (1982) , Vol..IV, Part – I, University of Madras..
28. சாம்பசிவம்பிள்ளை ரீ.வீ.. (1994). **தமிழ் ஆங்கில அகராதி** பாகம் - 5, தமிழ்நாடு அரசாங்கம்.
29. **Tamil Lexicon**, (1982), Vol..II, Part – I, University of Madras.
30. பொன்னையா ஐ., **பரராசசேகரம் உதரரோகநிதானம்**, மல்லாகம் திருஞானசம்பந்தர் அச்சுயந்திரசாலை.
31. **Tamil Lexicon**, (1982), Vol..I, University of Madras.
32. **கழகத்தமிழ் அகராதி**, (1980), திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை.
33. **சட்டமுனி நிகண்டு** (ஆண்டு ?), சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சிவசண்முகராஜா, சே.** “இலங்கை வவுனியா மாவட்டத்திலுள்ள தாவர மூலிகை இடப்பெயர்கள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 28-44. டிஒஐ: 10.5281/zenodo.3628602.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Sivashanmugarajah, S.** “Names of Places with the Names of Herbs in Vaviniya District of Ilangai.” *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 28-44. DOI: 10.5281/zenodo.3628602.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# தொல்காப்பியத்தில் பயணங்களும் பதிவுகளும்
# Travels and Records in *Tholkappiyam*

**முனைவர் மு.சுதா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3
**Dr.M.Sudha,** Assistant Professor, Department of Tamil, Alagappa University, Karaikudi.
**ORCiD:** https://orcid.org/0000-0002-6938-7149
**DOI: 10.5281/zenodo.3628434**

## Abstract

*Tholkappiyam, the first written document for the grammar has becomes a primal source of all the write-ups in Tamil as well as the concrete evidence to explicit the life style of our ancient people.This paper aims at tracing the epistemological element of 'Travel and its record' in Tholkappiyam.Though, it has no direct connection with the travel, it has an indirect allusion in the expenditure part. Porulathikaram,one of the major proportions of Tholkappiyam,excels on the various facets of travel and how it has the influence upon the ancient Tamil people. Ultimately, this paper tries to prove that literary outputs are not only a source for depicting the society but also to bring out the patterns of grammar.*

**Keywords:** Travels, Record, *Tholkappiyam*

மனிதன் தோன்றிய காலம்தொட்டே தேடலுக்கானப் பயணமும் தொடங்கிவிட்டது எனலாம். தன்னுடையத் தேவைகளுக்காக ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் இடம்பெயர்ந்து தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டனர் நம்முன்னோர்கள்.

அந்தத்தேடலும் அதுதொடர்பான பயணங்களுமே உறவுகளையும், வாழ்க்கை முறைகளையும் நாகரீக முதிர்ச்சியையும் பழக்க, வழக்கப் பண்பாடுகளையும் உருவாக்கியது என்பதற்குச் சான்றுகள் பல சுட்டலாம்.

இதில் உலகவரலாற்று இலக்கியங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. ஓவியங்களாக உணர்வுகளைத் தீட்டத் தொடங்கிப் பரிமாற்றம் ஆரம்பித்த நிலையில் இருந்து கல்வெட்டுகளாகவும் செப்பேடுகளாகவும் பலநிலைகளில் நம்முன்னோர்களின் வாழ்வியல் முறைகளைப் பற்றி அறிந்து கொள்ளமுடிகின்றன.

இவை ஒருபுறமிருக்க ஒவ்வொரு மொழிக்கும் தனிப்பெருமையை உண்டாக்கும் இலக்கியங்கள் அம்மொழிக்கும், அம்மொழி பேசும் மக்களுக்கும், அம்மொழிக்குரியப் பண்பாட்டுச் சிறப்பிற்கும், அவர்கள் தம் வாழ்வியலுக்கும் சான்றாய் விளங்குவதும் குறிக்கத்தக்கது. **இவற்றுள் இலக்கியங்கள் என்பன இரண்டு நிலைகளில் தம் கருத்தைப் பதிவுசெய்யும்.**

ஒன்று சமூகம் இத்தன்மையது என்று பதிவு செய்தல். மற்றொன்று சமூகம் இவ்வாறு இருந்தால் நன்றாக இருக்கும் என்று பதிவு செய்தல். இந்த இரண்டு நிலைகளையும் இலக்கியங்களில் காணலாம். இந்நிலை இன்றளவும் தோன்றும் இலக்கியங்கள் வரை பொருந்துவதாகும். தமிழில் தோன்றிய இலக்கியங்களும் இத்தகுதன்மை கொண்டதேயாகும்.

**கலை, கலைக்காகவே எனவும் கலை, வாழ்க்கைக்காகவே**

அகத்தையும் புறத்தையும் பாடுபொருளாகக் கொண்டு நம் பண்டைய மக்களின் வாழ்வியலை எட்டுத்தொகையாகவும் பத்துப்பாட்டுகளாகவும் தந்த சங்கஇலக்கியங்கள் அறத்தை எடுத்தோதவந்த நீதிஇலக்கியங்கள், அகம், புறம், அறம் என அனைத்தையும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தேவைபடக் கலவையாகத் தந்த காப்பியஇலக்கியங்கள் , பக்தியின் அடிப்படையில் மக்களின் நல்வழிப்படுத்த வந்த பக்திஇலக்கியங்கள், பழமையை ஏற்றுப் புதுமையை வரவேற்ற இன்றைய இலக்கியங்கள் என ஒவ்வொரு காலகட்டத்திலும் தோன்றிய இலக்கியப் படைப்புகள் **கலை, கலைக்காகவே எனவும் கலை, வாழ்க்கைக்காகவே** என்ற இருநிலைகளிலும் தோன்றின.

இவ்விலக்கியங்களின் வழி ஓரளவு ஒவ்வொரு காலச்சமூகத்தை அறியமுடிகின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால் இலக்கியச் சான்றுகளைத் தாண்டிய நிலையில் இலக்கணங்கள் அவை தோன்றிய சமூகபபதிவாகக் காணப்படுவதும் அதனை ஏற்றுக்கொள்வதும் சரியானதே என்பது அவ்விலக்கணங்கள் தரும் குறிப்புகளிலிருந்து அறிய இயலும்.

**தொல்காப்பியம்.**

**குறிப்பாகத் தொல்காப்பியம். தமிழில் முழுமையாகக் கிடைக்கும் முதல் இலக்கணநூல் தொல்காப்பியம்.**

**“உலகில் நிலவும் பல மொழிகளிலும் உள்ள பிற இலக்கணங்களுக்கு இல்லாத எழிலும் பயனும் வாய்ந்தது தொல்காப்பியம். பழமையும், பெருமையும், அழகும், அருமையும் வாய்ந்தது”** என நாவலர் சோமசுந்தரபாரதியார் தொல்காப்பியத்தைப் பாராட்டுகிறார். இலக்கணத்திற்குப் பிறகு இலக்கியமா! இலக்கியத்திற்குப் பிறகு இலக்கணமா என்ற நிலையில் இலக்கியத்திற்கு எழுதப்பட்டதே இலக்கணம் என்பதில் ஐயமின்றித் தெரிவு கொள்ளலாம். தனக்கு முன்னரே தோன்றிய இலக்கியங்கள் நடைமுறை வாழ்வியல் ஆகியனவற்றைக் கற்றுத்தேர்ந்து எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று நிலைகளில் பின்பற்றப்படவேண்டிய கோட்பாடுகளை வகுத்து அளித்தவர் தொல்காப்பியர். இவருடைய காலம் குறித்துக் கருத்து வேறுபாடு பல உண்டு.

**காலம்:**

**கி.மு 10 க்கு முன் - நாவலர் சோமசுந்தரபாரதியார்.**
**கி.மு 7க்கு முன் - சி.இலக்குவனார், கா.சு.பிள்ளை**
**கி.மு 5 க்கு முன் - மது.ச.விமலானந்தம், சி.பாலசுப்பிரமணியன்**
**கி.மு 3 - மு.வரதராசனார்**
**கி.மு 2 - இரா.இராகவையங்கார் எனப் பல கருத்துகள் உள்ளன.**

தொல்காப்பியர் தம்நூலை நிலந்தருதிருவிற்பாண்டியன் அவையில் அரங்கேற்றினார். நிலந்தரு திருவிற்பாண்டியன் கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட காலத்தில் கி.மு 504 இல் இரண்டாம் கடல்கோள்வந்து கபாடபுரத்தை அழித்தது. அதன்பின் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். இக்காலக் கட்டத்தில் தான் நிலந்தரு திருவிற்பாண்டியன் அவையில் தொல்காப்பியர் தொல்காப்பியத்தை அரங்கேற்றினார். எனவே தொல்காப்பியரின் காலம் கி.மு 5 ஆம் நூற்றாண்டு என்பதனை உணரலாம்’ எனத் தனது தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் **பாக்யமேரி** (ப-38) குறிப்பிடுகின்றார்.

இக்காலம் பற்றி விரித்துரைக்கக் காரணம் பலநூற்றாண்டுகளுக்கு முன்னரேயே மக்கள் தம்வாழ்வை முற்றிலும் அறிந்து உணர்ந்து அப்போது காணப்பட்டச் சமூகத்தையும்,. சமூகத்தார் பின்பற்றப்படவேண்டிய நெறிமுறைகளையும், அச்சமூகத்தைப் பற்றிப் பதிவுசெய்யும் பொறுப்புடைய இலக்கியங்கள் எவ்வாறு அமைதல்வேண்டும் என்பதனையும் இலக்கணமாய்த் தந்து சென்றது தொல்காப்பியம் என்பது இங்கு குறிக்கத் தக்கது.

இத்தகையச் சிறப்புடையத் தொல்காப்பியத்திற்கு முழுமையாக உரைகண்டவர் இளம்பூரணர். இவரை அடுத்து கல்லாடர், தெய்வச்சிலையார், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்று சிறந்த பலஉரைகள் தந்தத் திறனாய்வுமிக்க உரையாசிரியர்கள் இவ்விலக்கணத்துப் பதிவுகளை இன்றளவும் உணர்ந்து போற்றுமவண்ணம் தந்து சென்றுள்ளனர். இத்தகையப் பல்வேறு சிறப்புகளுக்குரிய பழமையான இலக்கணநூலான

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தொல்காப்பியம் பதிவுசெய்து தந்துள்ள பல்வேறு வாழ்வியல் குறிப்புகளுள் நம் மக்களிடத்து இருந்த பயணம் பற்றிய பதிவும் ஒன்றாகும்.

**பயணம்**

பயணம் என்ற சொல் **'பிரயாணம்'** என்பதிலிருந்து தோன்றியதாகும். சொற்கள் தோன்றலும், திரிதலும், கெடுதலும் மொழிகளில் காணப்படும் மாற்றங்கள் ஆகும். ஒருமொழிபேசுவோர் பிறமொழி பேசுவோருடன் கொள்ளும் உறவினால் ஏற்படும் மாற்றம் இதுவாகும். அவ்வாறே பிரயாணமும் பயணம் ஆயிற்று. இம்மாற்றமும் ஒருவர் மற்றோரிடத்திற்கு மேற்கொள்ளும் பயணத்தினாலேதான் என்பதும் குறிக்கத்தக்கது. இவ்வாறு ஒருசொல் மற்றொரு சொல்லாவது குறித்துத் தொல்காப்பியரும் **"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" (சொல்: எச்ச:நூ: 6)** என்று ஏற்கக்கூறுகிறார். ஆனால் பயணம் என்ற சொல்லாட்சி தொல்காப்பியத்தில் இல்லை. மாறாக பயணங்கள் நம் மக்களின் வாழ்வில் இருந்தமையைத் தொல்காப்பியம் பதிவுசெய்துள்ளது.

**"பிரயாணம் மனிதனுக்கு இயற்கையாக அமைந்தது. இல்லாவிட்டால் கடவுள் நமக்குக் கால்களையே படைத்திருக்கமாட்டார்" என்பார் சோமலே**. உலகம் தொடங்கிய காலம்முதலே மனிதனின் பயணமும் தொடங்கிவிட்டது. "திரை கடலோடியும் திரவியம்தேடு" எனும் பழமொழி வழக்கிலிருப்பதை இங்கு நோக்கவேண்டும்.

பத்துப்பாட்டில் இடம்பெறும் ஆற்றுப்படை நூல்கள் பயண இலக்கியங்களுக்கு முன்னோடியாகக் கொள்ளலாம். வாஸ்கோடகாமா, கொலம்பஸ் முதலிய வெளிநாட்டவர் மேற்கொண்டவை வரலாற்றுப்பயணங்கள். சைவ சமய நாயன்மார்கள் சிவாலயங்கள் தோறும் சென்றது திருத்தலப் பயணங்களே. இவ்வாறு காலந்தோறும் பயணங்கள் வாழ்வோடு இணைந்துள்ளன. பின்னர் இப்பயணங்களே பயண இலக்கியங்களாகத் தனித்துவம் பெற்றுத் தோன்றத்தொடங்கின.

**பயண இலக்கிய முன்னோடி - ஏ.கே.செட்டியார்**

**பயண இலக்கியப் பெருவேந்தர் - சோமலே**

என இன்றுவரை பலர் பயண இலக்கியங்கள் படைப்பதில் ஆர்வம் காட்டி வருகின்றனர். இவ்விலக்கியங்கள் ஒவ்வொரு காலகட்டத்தும் காணப்பட்ட பயணங்களையும் அதற்கானக் காரணங்களையும் அதனால் ஏற்பட்ட அநுபவங்களையும் எடுத்துரைப்பனவாகவும் உள்ளன.

முதல் இலக்கணமானத் தொல்காப்பியமும் பயணம் என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தவில்லையே தவிர அக்காலத்துக் காணப்பட்ட பயணங்கள் குறித்துத் தெளிவாகப் பதிவு செய்துள்ளது. ஆதலால் பயணங்கள் குறித்து நமக்குக் கிடைத்த முதற்பதிவாகத் தொல்காப்பியச் செய்திகளைக் கொள்வதில் தவறில்லை.

தொல்காப்பியத்தில் பயணங்களும் பதிவுகளும் என்னும் ஆய்வுப் பொருண்மைக்குப் பொருளதிகாரம் முழுவதும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. வாழ்வியலின் ஒருகூறு பயணம் என்பதால் பொருளதிகாரத்தின்கண் இப்பயணம் குறித்தச்செய்திகள் பரவலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளமையைக் காணமுடிகின்றன.

பயணம் என்ற சொல் இல்லாது போனாலும் செலவு, செலவு அழுங்குதல், உடன்போக்கு, பிரிவு போன்றனவும் பயணம் குறித்த பதிவுகள்தாம் என்பதனை உளம் கொள்ளவேண்டும். ஏதேனும் ஒருகாரணம் பற்றி ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்குச் செல்லுதல், அப்போது நிகழும் நிகழ்வுகள் போன்றனவும் பயணங்குறித்த பதிவுகள்தாம்.

பண்டைக்காலத்தில் வணிகம் பொருட்டும், தலைவன் தலைவியோடு உடன்போக்கு நிகழ்த்துமிடத்தும், அரசன் போரின்பொருட்டு செல்லுமிடத்தும், குறிப்பாகப் பிரிவினை உரிப்பொருளாகக் கொண்ட பாலைநிலப்பிரிவு நிகழுமிடத்தும், பிற பிரிவின் கண்ணும் இப்பயணங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதனைச் சொல், பொருளதிகார நூற்பாக்களின்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

வழி அறியமுடிகின்றன. இந்நூற்பாக்களே தொல்காப்பியர் காலத்துப் பயணப்பதிவுகளுக்குச் சான்றாகின்றன.

**சொல்லதிகாரம்**

சொல்லதிகாரத்தில் **வேற்றுமையியலில்** 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமைப் பொருள் பாகுபாடுகள் குறித்துக் கூறும்போது

**காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின் (சொல்: வேற்று: 11)**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. "ஐ" இருபத்தெட்டுப் பொருளிலும் பிறவற்றிலும் வரும் என்ற தொல்காப்பியர் "ஊர்தி" என்ற சொல்லைக் குறிப்பிட்டுள்ளார். ஊர்தி என்பது பயணத்திற்கு உதவும் ஒரு பொருள் என்பதனை அறியவேண்டும். ஆதலால் அக்காலத்து ஓரிடம் பெயர வாகனப்பயன்பாடு இருந்தமையை அறிய முடிகின்றது.

இதுபோலவே **வேற்றுமைமயங்கியலில்**

**கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே (சொல்: வேற்று: 3)**

என இரண்டாம் ஏழாம் வேற்றுமை உருபுகள் வருதல் பற்றிக் குறிப்பிடும்போது 'செலவு' என்ற சொல்லினைச் சுட்டுகிறார். செலவு – கடத்தல் என்பது பொருள். (வழியைக்கடந்தான், வழிக்கண் கடந்தான்) இங்கு செலவு என்பது பயணம் பற்றியதேயாகும். மேலும் உரியியலில்

**செல்லல், இன்னல், இன்னாமையே (சொல்: உரி: 6)**

எனக்குறிப்பிடுகிறார். 'செல்லல்' இன்னாமைப் பொருளைக் குறிக்கும் என்கிறார். உதாரணமாக 'அணங்கிய செல்லல்' அதாவது செல்லுதல் இல்லை என்பது பொருளாகும். இதுவும் பயணம் குறித்ததே. இவற்றிலிருந்து பயணம் மேற்கொள்ளுதலும் அதற்கு ஊர்தியினைப் பயன்படுத்துதலும் அச்செலவு இல்லாமல் நின்றுபோனது பற்றிய பதிவுகளைச் சொல்லதிகாரம் சுட்டுவதை அறியலாம்.

சொல்லில் அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் பதிவு செய்யப்பட்டுள்ள இப்பயணப் பதிவுகள் முழுமையாக ஆட்கொண்டு நிறைந்து பதிவு செய்திருப்பதை நூற்பாக்கள் சுட்டிச்செல்கின்றன.

**அகத்திணையியல்**

**முல்லைக் குறிஞ்சி மருதம்' நெய்தல்' எனச்**
**சொல்லிய முறையில் சொல்லவும் படுமே (5)**

எனும் தொல்காப்பியர் பாலைத்திணையை உள்ளடக்கிப்பாடவில்லை. ஆனால் பின்னர் யாத்த நூற்பாவில் நடுவுநிலைத்திணை என்கிறார். தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணரே 'காடுறை உலகம்' என்றதால் ஐவகைப்பூதத்திலும் ஐந்து இடம் என விளம்புகின்றார்.

பாலை என்பது தனித்த நிலமில்லை. 'வேனிற்கால வெப்பத்ததாக்குதலுக்குரிய மரம் பாலை எனப்படுதற் காரணமாக அச்சிறப்பு நோக்கிப் பாலை' என்கிறார் இளம்பூரணர். இந்நடுவுநிலைத் திணையைப் பாலையெனக்கொள்ளுதல் அடுத்தடுத்த நூற்பாக்களின் வழி நிறுவப்படுகிறது. நடுவுநிலைத்திணை எனப்படும் பாலைத் திணைக்குரிய பொழுது, பிரிவுகள் குறித்துத் தொல்காப்பியர் விளக்கிச் செல்கின்றார். இப்பாலைக்குரிய உரிப்பொருளாகப் பிரிவும், பிரிவின் நிமித்தமும் சுட்டப்படுகின்றது.

ஆதலால் பிறதிணைகளில் மாறுபாட்டால் உருவாகும் இந்நடுவுநிலைத் திணையினைப் பற்றியும் அதில் ஏற்படும் பிரிவுகள் பற்றியும் தொல்காப்பியர் அகத்திணையியலில் எடுத்துச் சொல்வதைக்காணமுடிகின்றது.

இங்கு கூறப்படும் பிரிவு என்பதே பயணம் பற்றியதே என்பதை உணரவேண்டும். பிரிந்து செல்வதோ, இணைந்து செல்வதோ ஆனால் ஓரிடம் விட்டு பிறிதோரிடம் செல்லும் நிகழ்வுகளை உள்ளடக்கியது இப்பிரிவு என்பதனை உணரவேண்டும். இதனடிப்படையில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

பாலைத்திணை பயணம் பற்றியப் பதிவுத் திணை என்பது கருத்தில் கொள்ளத்தக்கது. இதுபோன்று பொருளதிகாரம் முழுமையும் பயணப்பதிவுகள் பலவற்றைக் காணமுடிகின்றன. பிரிதலின் வேறுவகை பற்றிக் குறிப்பிடும்போது,

**கொண்டுதலைக் கழிதலும், பிரிந்து அவண் இரங்கலும்**
**உண்டென மொழிப ஓரிடத்தான (15)**

என்கிறார். அதாவது தலைவன் தலைவியைத் தன்னுடன் உடன்கொண்டு செல்லுதலும் சுற்றத்தினர் வந்து பிரிந்தவழி பிரிவிற்காகக் கலங்குதலும் சில வேளைகள் உண்டு. இங்கு தலைவனும் தலைவியும் மேற்கொண்ட உடன்போக்கு உணர்த்தப்படுகின்றது.
தொல்காப்பியர் அகத்திணையியலில்,

**ஓதல் பகையே தூது இவை பிரிவே (25)** என்கிறார்.

பிரிதலுக்குக் காரணமாகக் கற்றல், போர், தூது அமையும் என்று சுட்டுவதிலிருந்து இவற்றின் காரணமாகப் பயணம் மேற்கொள்ளப்பட்டதை அறியலாம். மேலும் இப்பயணம் யார்க்கு உரித்து? எதன்பொருட்டு நிகழும்? என்றும் தொல்காப்பியர் சுட்டிச்செல்கிறார்.

**ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன (26)**

என்கிறார். கற்றலும் தூது செல்வதும் சமுதாயத்தில் உயர்ந்தவர்களிடத்து அமைகின்றன. ஒழுக்கத்தாலும் பண்பினாலும் உணர்வு மிகுதியாலும் ஏனையோரைக் காட்டிலும் உயர்வுடையோரே இதற்குரியவராவார். நால்வகை வருணத்திலும் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் இப்பிரிவுகள் உரியன என்கிறார்.

பகைவர் காரணமாக அரசன் போர் வினைக்கருதி தானே தலைமையேற்றுச் செல்லும் பயணமும் உண்டு. அரசனோடு சேர்ந்து ஏனோர் தலைமையேற்றுப் பிரியும் பயணமும் உண்டு. இதனை:

**தானே சேறலும் தன்னொடு சிவணிய**
**ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே (27)**

எனும் நூற்பா சுட்டுகின்றது. இவை மட்டுமன்றி அறத்தினை நிலை நிறுத்துதற் காரணமாகவும் பொருளினை ஈட்டுதற் காரணமாகவும் ஓரிடம் விட்டுப் பிறிதோரிடம் சென்றுள்ளதையும் தொல்காப்பியம் பதிவுசெய்கின்றது. (28) முல்லை முதலாகச் சொல்லிய நிலப்பகுதிகளில் அலைத்தல் பெற்றுச் சிதைவுற்றதனைச் சிதைவு நீக்கி காத்தல் வேண்டிப்பிரிவர். இப்பிரிவு அறத்தினை நிலைநிறுத்தற் பொருட்டு ஏற்பட்டது என்கிறார். பொருளை ஈட்டுதல் கருதியும் பிரிவர். இதனைப்போல:

**மேலோர் முறைமை நால்வருக்கும் உரித்து (29)**

காவற்பிரிவு அரசியலாளர், தலைமக்கள், நிலமக்கள், அடியோர் என நால்வருக்கும் உரித்து.

**மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப (30)**

மன்னர்க்குரிய ஆட்சியுரிமையில் அவரது குடியில் பிறந்த பின்னோர்கள் இயல்பாக உரியர்

**உயர்ந்தோர்க்குரிய ஒத்தினான (31)**

உயர்ந்தோர்க்குரிய பிரிவு வணிகர்க்கும் வேளாளர்க்கும் உரியது. வணிகரும் வேளாளரும் பொருள்வயிற் பிரிவுக்கும் உரியர் (32, 33) என்பதனைக் கூறும் நூற்பாக்கள் பிரிவினைச் சுட்டினாலும் காவல், தூது, பொருள், பகை காரணமாக மக்கள் மேற்கொண்ட பயணங்களைச் சுட்டுவதாகக் கொள்ளலாம். மேலும் பயணங்கள் செய்வதற்குக்கூட எத்தகையோர் எப்பிரிவிற்கு உரியர் என்று இருந்த பண்டைச் சூழலும் இங்கு புலனாகின்றது. குறிப்பாக:

**முந்நீர் வழக்கம் மகடூவொடு இல்லை (34)**

என்னும் நூற்பா பெண்கள் கடல் கடந்து செல்லும் வழக்கமில்லை என்று சுட்டுவது நோக்கத்தக்கது.

**முந்நீர் வழக்கம் மகடுஉவொடு இல்லை (37)**

இதுவும் பொருள்வயிற் பிரிவதற்குரிய இலக்கணமாகும்
பொருள்வயிற் பிரிவு - காலிற் பிரிவு - தலைமகளுடன் உண்டு - கலத்திற்பிரிவு - தலைமகளுடன் இல்லை.)

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

இப்பிரிவுகளுக்குரிய கால வரையறையையும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**வேண்டிய கல்வியாண்டு மூன்றிறவாது (கற்பியல் 47)**
**ஓதற்குப் பிரியும் பிரிவு மூன்று ஆண்டுகள்** என்றும்
**வேந்துறு தொழிலே யாண்டின தகமே(கற்பியல்: 48)**
**தூதுப்பிரிவும், துணைவயிற்பிரிவும், பொருள்வயிற்பிரிவும் ஓர் ஆண்டு எல்லையினை உடைய**

என்றும் குறிப்பிடுகின்றார். இப்பிரிவுகள் காடிடையிட்டும், நாடிடையிட்டும் பிரியப்படுவதால் காலவரையறைப் படுத்தப்பட்டதாக உரையாசிரியர்கள் தெரிவிக்கின்றனர். இவற்றிலிருந்து காடுகள், நாடுகள் கடந்து பயணம் கொள்ளப்பட்டதும் அதற்கு எடுத்துக்கொண்ட காலஅளவுகளும் தெரியவருகின்றன. மேலும் பயணங்கள் என்பது ஆண்டுக்கணக்கில் நிகழ்ந்துள்ளன என்பதனையும் அறியமுடிகின்றது.

இதனைப்போல் அகநிகழ்வில் உடன்போக்கு நிகழ்வாகும். தலைமகளை தலைமகன் உடன்கொண்டு போதலையும் பயணம் பாற்கொள்ளலாம். இவ்வாறு உடன்போக்கில் இருவரும் சென்றதைக் குறித்த பல நூற்பாக்கள் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றன.

தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொள்ளுதல் அவர்களுக்கு ஏற்படும் நன்மை, தீமை பற்றி ஆராய்தல் செல்லும் வழியில் அவர்களைக் கண்டோரிடத்துப் புலம்புதல் ஆகியன நற்றாய், செவிலிகூற்றில் இடம் பெறுவதாகத் தொல்காப்பியர் பதிவு செய்கின்றார்.(36, 37) இதற்கு ஒரு இலக்கியச்சான்று: ***நற்றாய்கூற்று***

**தோழியர் சூழத் துறைமுன்றில் ஆடுங்கால்**
**வீழ்பவள் போலத் தளருங்கால்- தாழாது**
**கல்லதர் அத்தத்தைக் காதலன் பின்போதல்**
**வல்லவோ மாதர்நடை (ஐந்திணைஐம்பது 37)**

முன்பெல்லாம் தோழியர் புடைசூழத் துறைமுன்றில் ஆடுவாள். ஆனால் ஆடமுடியாமல் வீழ்பவள் போலத் தளருவாள்.அத்தகையாள் இன்றோ கல் நிறைந்த காட்டு வழிதனிலே தன் காதலன் பின்னே நடந்து போகின்றாளே' என்பதாக வரும் பாடல்- **முன்னிய காலம் முன்றோடு விளக்கிக்கூறும் கூற்றுக்குச் சான்றாகும்.**

மேலும், பேரூர்களுக்கும், அதைச்சேர்ந்த சேரிகளுக்கும், காட்டு வழிகளுக்கும் நற்றாய் செவிலித்தாயர் செல்வர் என்பதை

**ஏமப்பேரூர்ச் சேரியும் சுரத்தும்**
**தாமே செல்லும் தாயரும் உளரே (37)**

எனும் நூற்பா சுட்டுகின்றது. இதற்கான ஒரு சான்று:

**.........அந்தணீர்**
**வெவ்விடைச் செலல் மாலை ஒழுக்கத்தீர் இவ்இடை**
**என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்**
**தம்முளே புணர்ந்த தாம் அறிபுணர்ச்சியர்**
**அன்னார் இருவரைக் காணீரோ? பெரும! (கலித்:பாலை: 9)**

இது சுரத்தின் வழியான பயணத்தைச் சுட்டுவதாகும்.
இச்செய்திகள் அக்காலத்து மேற்கொண்ட பயணங்கள் செல்லும் வழிகள் சென்ற இடங்கள் போன்றனவற்றையும் கூறுவதாக உள்ளன.

ஓரிடத்திலிருந்து தலைமக்கள் செல்லும்போது பிறிதோரிடத்திலிருந்து மக்கள் இவர்களிருக்கும் இடம்நோக்கி பயணப்பட்டதைக் கண்டோர்கூற்று பதிவு செய்கின்றது.

**பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி**
**வழுவின் ஆகிற குற்றம் காட்டலும்**
**ஊரது சார்வும் செல்லும் தேயமும்**
**ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும் (40)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

என்ற நூற்பா அடிகள் பயணம் பற்றிய சிறந்த பதிவுகளாகும்.

1. நீங்கள் செல்லும் இம்மாலைப் பொழுதும் செல்லும் வழியும் அச்சம் தரத்தக்கனவாக உள்ளன. ஆகவே இப்போது இவ்வழியிற் செல்லற்க செல்லின் அதனால் குற்றமுண்டாகும் என எடுத்துக்கூறல்.
2. எம் ஊர் அணித்தே உள்ளது. நீர் செல்லும் இடம் சேய்மையில் உள்ளது. ஆதலின் எம் ஊரில் தங்கிச்செல்க என்று அன்புள்ளத்தோடு கூறுதல்.
3. தங்கிச்செல்ல தலைவனும் தலைவியும் உடன்படாததால் நும் ஊர்க்காயினும் விரைந்து செல்க என அன்போடு கூறுதல்.
4. தேடிவரும் செவிலித்தாயின் நிலையைக்கண்டு நின்மகள் நெடுந்தொலைவு சென்றுவிட்டாள். ஆதலின் இனியும் தேடிச் செல்லவேண்டாம் என அவளைத் தடுத்து நிறுத்தல்.
5. செவிலித்தாயே இவ்வழியேசென்றால் அவர்களைக்காணலாம் எனச் செல்ல விடுத்தல்.
6. நெடுந்தொலைவு செல்லும் இடைச் சுரத்தார் தாம் திரும்பவரும் வருகையின் போது சில சொல்லல்.

ஆகியன கண்டோர் கூற்றாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவன ஆகும்.
இதற்கு உதாரணமாக ஓர் நற்றிணைப்பாடலொன்று,

**அழுந்துபட வீழ்ந்த பெருந் தண் குன்றத்து …**
**…ஈங்கு ஐய!சுரனே….**
**மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே (நற்:2)** என்பதைச் சுட்டலாம்.

கண்டோர் செலவினும் அல்லது வரவினும் கூறியது என்பதற்கு

**வில்லோன் காலன கழலே தொடியோள்**
**மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்**
**யார்கொல் அளியர் தாமே ஆரியர்**
**கயிறாடு பறையில் கால்பொரக் கலங்கி**
**வாகை வெண்நெற் றொலிக்கும்**
**வேய்பயில் அழுவம் முன்னீயோரே (குறுந்: 7)**

எனும் குறுந்தொகைப்பாடலைச் சுட்டலாம்.

கால அருமைப்பாட்டினையும் வழிநடைத்துன்பத்தினையும் சொல்லி ஆற்றுப்படுத்தும் பயணஅநுபவம் மற்றும் அருகிலிருக்கும் ஊர்பற்றியும், தலைமக்கள் செல்லும் இடம்பற்றியும், தாயர்களிடத்துக் கண்டோர்கள் மொழிவதாகக் கூறியுள்ளமை இன்றைய பயண இலக்கியங்களுக்கு முன்னோடியெனலாம். கடுமையான வழிகளைக் கடந்து நீண்டதூரத்திற்குத் தங்கள் பயணங்களை அமைத்த செய்தியை 'சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும் கண்டோர் மொழிதல் கண்டது என்ப" (40) எனும் தொல்காப்பிய அடிகள் உணர்த்துகின்றன.

**புறத்திணையியல்**

முற்கூறப்பட்ட பிரிவுகளுள் ஒன்றான போர்வயிற்பிரிவு பற்றிப் புறத்திணையில் தெளிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. பிற நாட்டினைத் தன் ஆளுகைக்கு உட்படுத்தும் பொருட்டுப் படைகளைத் திரட்டிப் பயணம் மேற்கொண்டமையை நூற்பாக்கள் சுட்டுகின்றன.

அவ்வாறு செல்லும்போது ஆரவாரித்தல், நற்சொல் கேட்டுக்கிளம்புதல், பக்கம் அறியாமல் செல்லுதல், பகைநாட்டுப்பொருள்களைக் கொணருதல், அதனைப் பங்கு வைத்துக்கொடுத்தல்(3) போன்றவற்றை வெட்சித்திணை பற்றி உரைக்கவந்த தொல்காப்பியர்

**படை இயங்கு அரவம் பாக்கத்து விரிச்சி**
**புடைகெடப் போகிய செலவே (3)**

என விரித்துச்செல்கிறார். மேலும் கடைநிலை எனும் துறை பற்றிக் கூறும்போது

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**சேய்வரல் வருத்தம் வீடவாயில்**
**காவலர்க் குரைத்த கடைநிலையானும் (35)**

என்கிறார். சேய்மைக்கண்ணின்று வருகின்ற வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயில்நிலை என்று கூறப்படுகின்றது.

**வாயிலோயே வாயிலோயே**
**வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித் தாம்**
**உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து**
**வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கைப்**
**பரிசிலர்க்கு அடையா வாயிலோயே**
**கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி**
**தன் அறியலன்கொல் என்அறியலன்கொல்**
**....எத்திசைச்செலினும் அத்திசைச் சோறே (புறம்:206)**

எனும் புறநானூற்றுப் பாடல் பயணம் பற்றியதேயாம். வறுமையின் காரணமாகவோ பிற காரணமாகவோ தூரதேசங்களிலிருந்து உடல்வருத்தம் மீதுர வருகை மேற்கொண்டமையை இப்பாடல் சுட்டுகின்றது

நோய் இன்றி உய்த்தல் (3) எனும் துறைபற்றி கூறும்போது,

**பகை நாட்டிலிருந்து கொணரப்பட்ட ஆனிரைகளுக்கு துன்பம் எதுவும் இல்லாதவாறு அதனைக் கொண்டு செலுத்துதல்**

என உரையாசிரியர்கள் உரைக்கின்றனர். இப்பயணம் குறித்தப் பாடலொன்று,

**செருப்பிடைச் சிறுபரல் அன்னன் கணைக்கால்**
**புல்லார் இனநிரை செல்புற நோக்கிச்**
**சிலையின் மாற்றியோனே....தோனே (புறம் 257)** என்பதாகும்.

காஞ்சித்திணையில்,

**மூதானந்தம் எனும் துறை சுட்டப்படுகிறது. 'கணவனோடு இருந்த மனைவியின் செலவை நோக்கி வழிச் செல்வோர் இரங்கிக் கூறிவது'** இத்துறையாகும்.

அதுபோல முதுபாலை எனும் துறை

**நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்புவது முதுபாலை எனும் துறை** எனப்படுகிறது.

**ஐயோ' எனின் யான் புலி அஞ்சுவலே**
**அணைத்தனன் கொளினே அகல் மார்பு எடுக்கவல்லேன்**
**என்போல்பெரு விதிர்ப்புறுக நின்னை**
**இன்னாது உற்ற அறன் இல் கூற்றே!**
**நிரை வளை முன்கை பற்றி**
**வரைநிழல் சேர்கம் நடந்திசின் சிறிதே (புறம்:255)**

எனும் புறநானூற்றுப்பாடலை இத்துறைக்குச் சான்றெனச் சுட்டலாம். ஆற்றுப்படைகளைப் பயண இலக்கியங்கள் என்றே சுட்டுவர். இப்பயணம் மையமிட்ட ஆற்றுப்படை பற்றிக்,

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக்காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்றபெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் (36)**

எனப் புறத்திணையியலில் தொல்காப்பியர் பதிவு செய்துள்ளார். இது பொருள்,தொழில் காரணமாகப் பயணம் மேற்கொண்டோர் மற்றும் பயணவழி பற்றியப் பதிவாக அமைகின்றது.

**களவியல்**

களவியல் தலைமகன் தலைமகளை அழைத்துச்செல்லும்போது கூற்று நிகழும் என்கிறது. தலைவனும் தலைவியும் மேற்கொள்ளும் இப்பயண நிகழ்வுகளை பின்வந்த காப்பிய இலக்கியங்கள் வருணனைப் பகுதிக்கு எடுத்துக்கொண்டன எனக்கொள்ளலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**கற்பியல்**

கற்பியலில் தலைவனுக்கு கூற்று நிகழும் இடங்கள் பற்றிக் கூறவந்த தொல்காப்பியர்

**மிகுந்த பிரிவின் அஞ்சிய வருத்தத்தின் கண்ணும்**
**சென்று மீண்டும் திரும்ப நினைத்த இடத்தும்** (5)

என்று குறிப்பிடுகின்றார். நீண்டபிரிவு இங்கு சுட்டப்படுகின்றது. கற்புக்காலத்து பொருள்வயிற்பிரியுமிடத்து நீண்ட பயணம் மேற்கொண்டும் அதனால் பிரிவு நீண்டமைபற்றியும் பொருளைவிட அன்பு மேலானது என உணர்ந்து தலைவன் திரும்ப நினைத்தமையும் கூறப்படுகின்றது. பிரிவுக்குரியக் காலத்தைத் தொல்காப்பியர் கூறியமையை இங்கு நினைவு கொள்ளவேண்டும். ஆண்டுக்கணக்கினால் ஆன இப்பிரிவு பொருளின் காரணமாக ஏற்பட்ட பயணம் என்பதனைக் கொள்ள வேண்டும்.

மேலும் உடன்போக்கின் போது தலைவிக்கு தலைவன் செல்லும் வழியிலுள்ளனவற்றைக் காட்டிச் சென்றமையும் கற்பியல் சுட்டிச்செல்கின்றது.

**புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து**
**இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி**
**அன்புறு தக்க கிளத்தல் தானே**
**கிழவோன் செய்வினைக்கு அச்சம் ஆகும்** (7)

என்கிறார். இது தலைவனுடன் தலைவி மேற்கொண்ட பயணத்தைச் சுட்டுவதாகும். களவுக்காலத்துத் தலைவனுடன் சேர்ந்து உடன்போக்குப் போகிய தலைமகள் கற்புக்காலத்து வீட்டின்கண் இருந்துகொண்டு தான்முன்னர் உடன்போக்கின்கண் பாலைநிலத்துத் தலைவனுடன் கண்ட கருப்பொருள் முதலியவற்றையும் அவற்றின் தொழிலையும் குறித்துத் தலைவன் அன்புறுதற்குத் தக்கவற்றைக் கூறுதலே தலைமகன் இயற்றும் தொழிற்கு அஞ்சும் அச்சமாகும்'என்பது பொருளாகும்.

**கானயானை தோல் நயந்து உண்ட**
**பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை**
**அலங்கல் உலவைஏறி ஒய்யெனப்**
**புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்**
**அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்ச்**
**சேர்ந்தனர் கொல்லோதாமே-யாம் தமக்கு**
**ஒல்லேம் என்ற தப்பற்குச்**
**சொல்லாது ஏகல் வல்லுவோரே (குறுந்: 79)**

இச்செய்யுள் பயணம் பற்றியும் பயண வழிக்காட்சிகள் பற்றியதுமான பதிவுகளாகும்.

மேலும், இடம்விட்டு இடம்பெயர்வோர் குறித்தும் அவர்கள் செய்யவேண்டுவன குறித்தும் கற்பியலில் கூறப்பட்டுள்ளன.

**நிலம் பெயர்ந்து உரைத்தல் கூத்தர்க்கும் பாணர்க்கும் உரிய** (28)

செல்லும் வழியின் இயல்புகளைக் கூறுதல் வழியிடைக்கண்ட பொருள்கள், கருப்பொருள்கள்

**தாம் கண்ட நிகழ்வுகள் பற்றிக் கூறுதல் இளையோர்க்கு உரியன** (29)

என்றும் தொல்காப்பியர் கூறுகின்றார். இவையும் பயணப்பதிவேயாம்.

கடல் கடந்து செலவு மேற்கொள்ளுதல் பெண்களுக்கு இல்லை என்று கூறிய தொல்காப்பியர் கற்பியலில் பகைவயிற்பிரிவு ஏற்படும்போது உடன்செல்லுதல் பெண்களுக்கு இல்லை என்பதனை

**எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்** (34)

எனச் சுட்டுகிறார். அதேநேரத்தில்

**புறத்தோர் ஆங்கண் புரைவதென்ப** (35)

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

எனவும் சுட்டுகிறார். புறத்திணைப் பணிகளுக்குள்ள பெண்டிர் பாசறைக்கண் செல்வர் என்பது ஈண்டு குறிக்கப்படுகின்றது. இதன்வழி போர் காரணமாகச் செல்லும் பயணத்தின்போது பெண்களுக்குள்ள வரையறை சுட்டப்படுவதை அறியமுடிகின்றது.

ஒவ்வொரு பிரிவிற்கும் ஆண்டு வரையறை சுட்டிச்செல்லும் தொல்காப்பியர் தலைவனும் தலைவியும் தம் ஊரைவிட்டு நீங்கிச் சென்று நீர்த்துறைகளிலும் சோலைகளிலும் விளையாடி நுகர்ச்சி பெறுதலும் இருவருக்கும் உரிய வாழ்க்கைச் செயல்கள் என்பதை

**யாறும் குளனும் காவும் ஆடிப்**
**பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப (50)**

என்று சுட்டுகிறார்.

இங்கு செல்லுமிடமும் பயணமும் சுட்டப்படாவிட்டாலும் ஊரைவிட்டு நீங்கிச் செல்லுதலும் சென்ற இடத்தில் இன்பத்தை அநுபவித்தலுமாகிய பயண நிகழ்வுகள் சுட்டப்படுவது குறிக்கத்தக்கது.

அதேபோல் தலைவியை பிரிந்து தம் வினைமேல் பயணம் மேற்கொண்ட தலைவன் வினைமுடித்துத் திரும்பும்போது இடைவழியில் தங்கித் தாமதித்தல் இல்லை(53) என்பது தலைவன் பயணம் பற்றியதே.

**பொருளியல்**

ஓரிடம்விட்டுப் பெயர மக்கள் பயன்படுத்திக்கொண்ட வாகனங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

**தேரும் யானையும் குதிரையும் பிறவும்**
**ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப (18)**

எனக் குறிப்பிடப்படுகின்றது. தலைவன் தேர், யானை, குதிரை இவற்றுள் ஊர்ந்து வருதல் உண்டு என்பதாகும். இவை பயணத்திற்குப் பயன்படுவன குறித்தப் பதிவாகும்.

- இவ்வாறு தொல்காப்பியத்தில் ‘பயணம்’ என்ற சொல்லாட்சி இல்லாது போனாலும் அப்பயணம் குறித்தப் பதிவுகள் காணப்பட்டமையை நூல் தோறும் காணமுடிகின்றன.
- கல்வி, தூது, பகை, பொருள்வயிற்பிரிதலும், கடல் கடந்த வணிகத்தின் பொருட்டும், அவ்வாணிபம் பொருட்டுச் செல்வதற்கு உரியர்யாவர் என்றும, தலைவன் தலைவி உடன்போக்கு பற்றியும், அப்போதைய நிகழ்வுகள் குறித்தும், செலவும், செலவு அழுங்குதல் குறிப்புகளும் அச்செலவிற்குப் பயன்படுத்தப்பட்ட ஊர்திகள் குறித்தப் பதிவுமாகத் தொல்காப்பியத்தில் காணப்படும் பதிவுகள் அனைத்தும் அக்காலத்து மக்கள் மேற்கொண்ட பயணங்கள் பற்றிய பதிவுகளேயாகும்.
- இத்தகைய பதிவுகளின் வளர்ச்சியே இன்றைய பயண இலக்கியங்களாக நிற்கின்றன.
- தொல்காப்பியர் சுட்டும் இப்பயணப் பதிவுகளால் இவ்விலக்கணநூல் எழுந்த காலத்திய சமூகச் சூழலை நன்கு உணரமுடிகின்றது.
- மக்களின் அகப்புற வாழ்வியலையும் அவர்களின் வாழ்வில் பயணங்கள் பெற்றிருந்த இடத்தையும் வாழ்வின் முக்கிய அங்கமாக எல்லா நிலை மக்களுடன் உறவு கொண்டிருந்தமையையும் இப்பதிவுகள் புலப்படுத்துகின்றன.
- மாறிவந்த காலச் சூழ்நிலையில் இருக்கும் இடம்நீங்கி இனிமைக்காக வேறிடம் சென்று அநுபவம் பெற்று அவ்வநுபவம் இலக்கியமாகத் தோன்றிவரும் சூழலில் எங்குசென்றார்கள் என்ற இடம் குறிப்பிடப்படாவிட்டாலும் எதற்காகச் சென்றார்கள் என்ற குறிப்புகளைப் பதிவு செய்ததுடன் அப்பயணங்கள் வழிப் பண்டைக்காலத்தையும் பதிவுசெய்துள்ளார் தொல்காப்பியர்.
- பயணம் என்பது மக்களின் வாழ்வில் அங்கமான ஒரு நிகழ்வு அவை இன்றியமையாதத் தேவைக்காக அன்று மேற்கொள்ளப்பட்டது. அகமோ புறமோ பின்வரும் ஆக்கத்திற்காக மேற்கொள்ளப்பட்டதனைத் தொல்காப்பியம் கொண்டு அறியமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

- மேலும் இதுபோன்ற பயணங்களில் காணப்பட்ட வரன்முறைகள் ஆண் பெண்களுக்குரிய பாகுபாடுகள் பயன்படுத்தப்பட்ட வாகனங்கள் செல்லும் வழி குறித்தத் தகவல்கள் என பயணம் தொடர்பான அன்றைய சமூகச் சூழலையும்,ஓர் சமூகம் எவ்வாறிருக்கவேண்டும் என்ற எண்ணத்தையும் கோட்பாடுகளாக்கிக் கண்முன் நிறுத்தியுள்ளார் தொல்காப்பியர்.
- ஆதலால் வாழ்வியலைச் சுட்டுவது இலக்கியங்கள் மட்டுமல்ல. இலக்கணங்களும் தாம் என்பதற்குத் தொல்காப்பியம் சான்றுகாட்டி நிற்பதை அனைவரும் உளம்கொளவேண்டும்.

**துணை நின்றன**

1. அ.க.செட்டியார் (2007)., *பிரயாண நினைவுகள்* (பயணக்கட்டுரைகள்) வ.உ.சி நூலகம்.
2. சோமலே., (1950) *என் பிரயாண நினைவுகள்*, பாரி நிலையம்.
3. *சங்க இலக்கியங்கள்.* (2004) (மூலமும் உரையும்), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.
4. *தொல்காப்பியம்* (1920) கழகவெளியீடு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.
5. *பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்* (2009) (மூலமும் உரையும்)இ சாரதா பதிப்பகம்.

**இணையத்தரவு - தள முகவரிகள்**

1. www.tamildigitallibrary.in
2. www.keetru.com
3. www.tamilvu.org
4. https://shodhganga.inflibnet.ac.in
5. www.poornachandran.com
6. www.jeyamohan.in

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சுதா, மு. "தொல்காப்பியத்தில் பயணங்களும் பதிவுகளும்."** *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 45-56. டிஓஐ: 10.5281/zenodo.3628434.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Sudha, M. "Travels and Records in *Tholkappiyam*."** *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 45-56. DOI: 10.5281/zenodo.3628434.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# சிறைக்குடி ஆந்தையார் பாடல்கள் வெளிப்படுத்தும் அக உணர்வுகள்
# Explicit Expressions of Love in the Poems of Siraikudai Aanthaiyar

**பா.தமிழரசி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊற்றங்கரை.
**B.Tamilarasi,** Assistant Professsor of Tamil, Adhiyaman Arts and Science College for Women, Uthangarai.
ORCiD: https://orcid.org/0000-0002-4868-9615
**DOI: 10.5281/zenodo.3628445**

## Abstract

*Sangam Literature is an encyclopedia for understanding the ancient Tamil culture, realising the magnificence of tamil language and knowing information. Sangam literature comprises of many poems sung by various sangam poets over vareied periods of time. The poems are divided into parts namely poems dealing with implicit understanding and poems dealing with explicit understanding of the human life and culture. This paper deals with the exclusive poems in Kurunthogai, a collection of poems from Kurinci, Pallai, Neithal and deals with the explicit understanding of the love of the head of the house hold, the thalaivan towards his beloved through her friend. It enumerates the longing and yearning of love-stricken souls who refuse to accept even a small separation and they are consoled through the friend Siraikudi Aanthaiyar has vivified friendship through love. Hence, the paper analyses the poems written by Siraikudi Aanthaiyar in a detailed manner.*

**Keywords:** Explicit Expressions, Love Poems, Siraikudai Aanthaiyar.

### முன்னுரை

பண்டைய தமிழ் நாகரிகம், மொழிச்சிறப்பு முதலானவற்றை அறிய விரும்புவோருக்குச் சான்றாதாரமாக, செய்தி ஊற்றாக அமைவது சங்க இலக்கியம். அத்தகைய சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற சங்கப்பாடல்கள் பல்வேறு இடங்களில், வாழ்ந்த புலவர்களால் பாடப்பெற்றவையாகும். அவை கருத்தால் அகம், புறம் என்று அமைந்திருப்பினும் பாடல் இயற்றிய புலவர்களின் நடை நயத்தால் தனிச் சிறப்பு பெற்று விளங்குகின்றன. அவ்வாறு அகப்பாடல்கள் மூலம் தனிச்சிறப்பு பெற்று விளங்கும் குறுந்தொகை நூலில் குறிஞ்சி, பாலை, நெய்தல் திணையில் தலைவன், தலைவி மற்றும் தோழிக் கூற்றின் வாயிலாக உள்ளத்து உணர்ச்சிகளைப் பாடல்கள் மூலம் சிறைக்குடி ஆந்தையார் வெளிப்படுத்தும் கருத்துக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சிறைக்குடி ஆந்தையார் பெயர் காரணம்

சிறை என்னும் சொல் பக்கம் என்னும் பொருளைத் தருகிறது. **"மகளிரை சிறைக்காக்கும் குடி சிறைக்குடி"** என்று ரா. இராகவையங்கார் கூறியுள்ளார். ஆதன், தந்தை என்னும் சொற்கள் ஒன்று சேரும் போது ஆந்தை உருவாகியது என்றும் அதனுடன் 'ஆர்' விகுதி சேர்த்து ஆந்தையார் என அழைக்கப்பட்டதாகத் தொல்காப்பிய நூலில் கூறப்பட்டுள்ளது. அவ்வூரில் ஆந்தையார் வாழ்ந்ததால் இப்பெயர் வந்ததாகவும் அறியமுடிகிறது.

### தலைவியின் அன்பு மேன்மை

சங்ககாலம் முதல் தற்காலம் வரை பெண்கள் தன் மனதில் ஒரு ஆடவனைக் கணவனாக ஏற்றுக்கொண்டால் எந்த சமயத்திலும் அவனை விட்டு பிரியக்கூடாது என்றும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

எப்பொழுதும் தன் அருகே இருக்க வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டே இருப்பார்கள். அப்படி பெற்றோரின் பாதுகாப்பில் இருக்கும் தலைவிக்கு தலைவனை பிரியக் கூடிய சூழ்நிலையில் தன் ஆற்றாமையைத் தோழியிடம் வெளிப்படுத்தும் விதத்தை நெய்தல் திணையில் இடம் பெற்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

**பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன**
**நீர் உறை மகன்றில் புணர்ச்சி போலப்**
**பிரிவுஅரிது ஆகிய தண்டாக் காமமொடு**
**உடன்உயிர் போகுகதில்ல - கடன் அறிந்து**
**இருவேம் ஆகிய உலகத்து**
**ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே. (குறு.தொ - நெய்தல் - 57:1-6)**

பெற்றோரால் பாதுகாக்கப்படும் தலைவி தலைவனைப் பிரிந்து இருக்க முடியாதவளாகி தோழியை நோக்கி தமக்கிடையே பூ ஒன்று இடைப்புகுந்து ஒருவரை ஒருவர் காண முடியாமல் மறைப்பதாயினும் அவை ஓராண்டு கழிந்தது போல, நீரில் வாழ்கின்ற மகன்றில் பறவைகளின் சேர்க்கை விளங்குவதாகும். மகன்றில் பறவைகள் ஆணும் பெண்ணுமாய் இணைப்பிரியாது வாழும். நொடி பொழுது பிரிந்தாலும் துயரம் தாங்காமல் தன் உயிரை விட்டுவிடும்.

ஒருயிர் இரண்டு உடல்களுடன் வாழ்வது போல் நாங்கள் இவ்வுலகில் வாழ்ந்துக் கொண்டிருக்கிறோம். தலைவன் பிரிந்தபோது ஓர் உயிர் ஓர் உடலில் வாழ்வது போன்ற இழிவு நேர்ந்து விடும். ஆகையால் தலைவனைப் பிரிந்து உயிர் வாழ்தலை விட இறப்பதே தக்கது என்று கூறுவதால் உயிரை விட தலைவன் மீதுக் கொண்ட அன்பு பெரிது என்பதைப் புலவர் விளக்கியுள்ளார்.

**அன்பின் வழியது உயிர்நிலை அ∴தில்லார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு (குறள்: 80)**

அன்பின் வழியில் இயங்கும் உடம்பே உயிர்நின்ற உடம்பாகும். அன்பு இல்லாதவர்க்கு உள்ள உடம்பு எலும்பைத் தோல்போர்த்த வெற்றுடம்பேயாகும் என்று வள்ளுவரும் அன்பின் சிறப்பை வலியுறுத்தியுள்ளார்.

**குறுங்கால் மகன்றில் அன்ன**
**உடன் புணர் கொள்கைக் காதலோரே (ஐங்குநுறூறு: 381)**
**மகன்றில் அன்னர்ப் புணர்ச்சி (பரிபாடல் 8: 44)**

இணைப்பிரியாமல் வாழும் மகன்றில் பறவையோடு ஒப்புமைப்படுத்தி ஒன்றைவிட்டு ஒன்று எப்படி உயிர் வாழாதோ அதுபோல் தலைவனைப் பிரிந்து தலைவி உயிர் வாழமாட்டாள் என்பதை சங்க இலக்கியங்களும் அற இலக்கியங்களும் சொல்வதை இணைத்து ஆந்தையார் வெளிகாட்டியுள்ளார்.

**தோழியின் ஆறுதல்**

'வினையே ஆடவர்க்கு உயிர்' என்ற வரிகளில் கூறுவது போல் பொருள் தேடச் சென்றாலும் மனம் ஒப்பவில்லை என்பதை கீழ்க்கண்ட வரிகள் இயம்புகின்றன.

**பெருந்தேன் கண்படு வரையில் முதுமால்பு**
**அறியாது ஏறிய மடவோன் போல,**
**ஏமாந்தன்று, இவ்வுலகம்**
**நாம் உளேம் ஆகப் பிரியலன் நெளிமே. (குறு.தொ. பாலை 273: 5-8)**

தேன் கொள்ளும் வேட்கையில் கண் ஏணியில், அது தாங்கும் வலிமை அறியாமல் ஏறிய மடவோன், அதற்கு மேல் ஏறினால் தன் உயிர்க்கு ஆபத்து ஏற்படும் என அஞ்சி அவ்வேணியிலிருந்து கீழே இறங்க முற்படுவான். அதுபோலத் தலைவனும் பொருள்தேடும் வேட்கையால் தலைவியாகிய உன்னைப் பிரிந்து செல்ல முற்பட்டாலும் பொருள் நிலையாமையை எண்ணி தன் பயணத்தைத் தவிர்த்து திரும்பி வருவான் என்று

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

கூறுவதிலிருந்து தோழியின் தேர்ந்த வார்த்தைகள் மூலம் தலைவியின் மனதை மாற்றுவதை உணரலாம். இவ்வரிகளில் ஆடவனின் தன்மையையும் தோழியின் அக்கறையும் வெற்றியடைகிறது.

**நுனிக்கொம்பார் ஏறினார் அ·.தறிந்து ஊக்கின்**
**உயிர்க்கு இறுதி ஆகிவிடும். (குறள்: 476)**

அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு என்பதுபோல் ஒரு மரக்கிளையின் நுனியில் ஏறிவிட்டவர் அந்த அளவையும் கடந்து மேலும் ஏற முயன்றால் அம்முயற்சியே அவர் உயிருக்கு முடிவாகும் என்பதை வள்ளுவரும் தம் இரண்டடி வெண்பாவால் வெளிப்படுத்துகிறார்.

**தலைவனின் உள்ளத்துணர்வுகள்**

**த**லைவனின் மனதில் ஏற்படும் உணர்வுகளைக் குறிஞ்சி, பாலைத் திணைப் பாடல்கள் வாயிலாக புலவர் வெளிப்படுத்துகிறார்.

உடன்போக்கின்போது தலைவன் தலைவியை விட்டு தனியே செல்கின்றபோது பாலை நிலத்தில் கண்ட கொடிய காட்சிகள் அவன் உள்ளத்தைப் பெரிதும் வருத்துகிறது. தலைவியைத் தன்னுடன் அழைத்து வந்திருந்தால் அவள் மிகவும் துன்பப்பட்டு இரங்கத்தக்கவளாக இருந்திருப்பாள் என்று தன் நெஞ்சுக்கு கூறிக் கொள்வதாக அமைந்ததை,

**வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்**
**குளவி மொய்த்த அழுகற் சில்நீர்**
**வளையுடைக் கையள், எம்மொடு உணிஇயர்,**
**வருகதில் அம்ம, தானே,**
**அளியளோ அளியள் என்நெஞ்சு அமர்ந்தோளே (குறு.தொ.: பாலை 56: 1-5)**

ஒருவர் உண்ட உணவில் எஞ்சியதைப் பிறர் உண்ணுவது அருவருக்கத்தக்கது. வேட்டை மேற்கொண்ட செந்நாய் குடித்ததில் எஞ்சியுள்ள நீரைக்குடிப்பது அதைவிட அருவருக்கத்தக்கதாகும். மேலும் நாய் குடித்து எஞ்சிய நீர் அழுகல் நாற்றமுடையதாக இருந்ததால் அதைக்குடிப்பது என்பது நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு கொடுமையானது என்பதால் அப்பாலை நிலத்தைக் கடந்து செல்லும் தலைவன் தன்னுடன் தலைவி வந்திருந்தால் வளை அணிந்த மென்மையான கைகளை உடைய அவள் அத்தகைய நீரை உண்ண வேண்டிய சூழல் ஏற்பட்டிருக்கும் என பாலை நிலத்தின் கொடுமையை நினைத்து வருந்துவதாக கூறப்பட்டுள்ளது.

**புனற்புணை அன்ன சாய்இறைப் பணைந்தோள்,**
**மணத்தலும் தணத்தலும் இலமே;**
**பிரியன் வாழ்தல் அதனினும் இலமே. (குறு.தொ. பாலை: 168: 5- 7)**

என்றும் ஒன்றுபட்டு இருப்பதால், பருத்த தோள்களை உடைய தலைவியைப் பொருந்துதலும், பிரிந்ததும் இல்லை. இன்று அவளைவிட்டுப் பிரிந்து சென்றால் பிரிவுத்துயரால் தலைவன் உயிர் வாழ்தல் என்பது உறுதியாக இல்லை என்பது உள்ளக்கருத்தாகிறது. இதில் ஒன்றியிருக்கும் நிலையை ‘மணத்தலும் தணத்தலும்’ இல்லை எனக் குறிப்பிடும் அழகிய சொல்லாட்சி போற்றத்தக்கதாக உள்ளது. (மணத்தல் - பொருந்துதல், தணத்தல் - பிரிதல்) கலித்தொகைப் பாடலிலும் தலைவன் பிரிந்து செல்லும் வழியில் ஆறு, அலை மற்றும் கள்வர் விடுத்த கூர்மையான அம்புகள் அவர்கள் உடலில் தைக்கும்போது அதனால் துன்பப்பட்டு நா உலர்ந்து வாடும்போது அவர்விடும் கண்ணீர்தான் நீர்த்தாகத்தை தணிப்பதாக உ.ள்ளது.

**தண்ணீர் பெறாஅத் தடுமாற்று அருந்துயரம்**
**கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு (கலித்தொகை 6: 5-6)**

இப்பாடல் வரிகளில் தண்ணீர், கண்ணீர் என்ற சொற்களின் வழியாக புலவர் சொற்களைக் கையாண்டவிதம் போற்றப்படுகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தலைவன் தன் மனதில் நினைத்ததை தலைவியிடம் தெரிவிப்பதற்கு நல்லதொரு வாயிலாக கருதியது தோழியைத் தான். அத்தகைய தோழியைக் குறிஞ்சித்திணையில் புகழ்ந்துள்ளதை,

**தலைப்புணைக் கொளினே, தலைப்புணைக் கொள்ளும்**
**கடைப்புணைக் கொளினே, கடைப்புணைக் கொள்ளும்**
**புணைகை விட்டுப் புனலோடு ஒழுகின்,**
**ஆண்டும் வருகுவன் போலும் - மாண்ட (குறு.தொ.222: குறிஞ்சி: 1-4)**

தோழியானவள், புணையின்(தெப்பம்) தலைப்பக்கத்தை பற்றினால், தலைவியும் தலைப்பக்கத்தைப் பற்றிக் கொள்ளுவாள். அவள் கடைப்பகுதியைப் பற்றிக்கொண்டாள் தலைவியும் கடைப்பகுதியைப் பற்றிக் கொள்ளுவாள். தலை, கடைப்பகுதி விட்டு தோழி புனலோடு சேர நேர்ந்தால் தலைவியை நீரிலிருந்து எடுத்துக் காப்பதற்காக அவ்வரிய இடத்திலும் தோழி செல்வாள். ஆதலால் தலைவியின் விருப்பத்தற்குரிய தோழி என்பதால் தன் குறையை முடிப்பதற்கு உரியவள் இவளே எனக்கருதியதாலும், தலைவனால் விரும்பப்படும் வாயிலாகவும் இருப்பதால் தோழி **'பெட்ட வாயில்'** ஆக கூறப்படுவதை,

**நறுவீ நாகமும் அகிலும், ஆரமும்**
**துறையாடு மகளிர்க்குத் தோட்புணையாகி (சிறுபாணாற்றுப்படை: 116-7)**

தலைவனின் மனதில் உள்ள அன்பினை தலைவிக்கு எடுத்துச்சொல்லும் நல்லதொரு வாயிலாக இருப்பவள் தோழியே என்பதை ஆற்றுப்படை நூலும் வெளிப்படுத்துகிறது.

**கடல்சூழ் மண்டலம் பெறினும்**
**விடல் சூழலனான் நின்னுடை நட்பே (கு.தொ.:300 குறிஞ்சி: 7-8)**

இயற்கைப்புணர்ச்சியின்போது தலைவன் தலைவியை நோக்கி, கடல்சூழ்ந்த இவ்வுலகத்தையே பெறுவதாக இருந்தாலும் நான் உன்னை விட்டு பிரியமாட்டேன். நீ அஞ்சவேண்டாம் என்று வற்புறுத்தி ஆறுதல் கூறுவது இவ்வுலகத்தைக் காட்டிலும் தலைவனுக்கு தலைவி மீது கொண்ட அன்பே பெரியதாக இருக்கிறது.

**முடிவுரை**

உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகள் என்பது ஒவ்வொருவருக்கும் சூழ்நிலை பொருத்து அமைகிறது. அப்படி தோன்றும் உணர்வுகளை ஆண், பெண் பாகுபாடின்றி பிறரிடம் வெளிப்படுத்தி தங்கள் மனத்தின் பாரத்தை குறைத்து அமைதிப்படுத்திக்கொள்கின்றனர். இக்குறுந்தொகை நூலிலும் தலைவி தலைவன் இருவருமே ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்தாலும் உயிர்வாழ முடியாத அளவிற்கு அன்போடு வாழ்ந்துள்ளார்கள் என்பதையும் அவ்விருவருக்கும் இடையே நல்லதொரு வாயிலாக இருந்து இருவரின் மனதையும் தேற்றியும் ஆற்றுப்படுத்தியும் இருந்ததால் தலைவியின் விருப்பத்துக்குரிய தோழி (பெட்டவாயில்) என்றும் சிறைக்குடி ஆந்தையாரின் பாடல்கள் வெளிப்படுத்தியதை இக்கட்டுரையின் வாயிலாக அறியமுடிந்தது.

**அடிக்குறிப்பு**

1. *குறுந்தொகை* - நெய்தல் 57ம் பாடல்
2. *திருக்குறள்* - 80
3. *ஐங்குறுநூறு* - 381ம் பாடல்
4. *பரிபாடல்* - 8ம் பாடல்
5. *குறுந்தொகை* - பாலை 273ம் பாடல்
6. *திருக்குறள்* - 476
7. *குறுந்தொகை* - பாலை 56ம் பாடல்
8. *குறுந்தொகை* - பாலை 168ம் பாடல்
9. *கலித்தொகை* - 6ம் பாடல்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

10. *குறுந்தொகை* - குறிஞ்சி 222ம் பாடல்
11. *சிறுபாணாற்றுப்படை* - 116ம் பாடல்
12. *குறுந்தொகை* - குறிஞ்சி 300ம் பாடல்

**நூல்கள்**

1. குறுந்தொகை பதிப்பு 1 மற்றும் 2, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41- பி, சிட்கோ
2. இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098.
3. ஐங்குநுறுாறு, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41- பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098.
4. கலித்தொகை, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41- பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098
5. பரிபாடல், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41- பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை, 600 098.
6. சிறுபாணாற்றுப்படை, வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ், 141, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை – 600 017.
7. திருக்குறள், பரிமேலழகர் உரை, அம்சா பதிப்பகம், சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**தமிழரசி, பா.** "சிறைக்குடி ஆந்தையார் பாடல்கள் வெளிப்படுத்தும் அக உணர்வுகள்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 57-61. டிஒஐ: 10.5281/zenodo.3628445.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Tamilarasi, B.** "Explicit Expressions of Love in the Poems of Siraikudai Aanthaiyar." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 57-61. DOI: 10.5281/zenodo.3628445.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பிடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# தன்னில் பிறரைக் காட்டிடும் பைந்தமிழ்க் குறள்
# Replication of Others in Us Substantiated in Classic Kural

**முனைவர்.செ.பாண்டியம்மாள்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, வியாசா கலை மன்றும் அறிவியல் மகளிர் கல்லூரி, வாசுதேவநல்லூர், தென்காசி மாவட்டம்.
**Dr.C.Pandiammal,** Assistant Professor of Tamil, Vyasa Arts and Science College Women's College Vasudevanallur, Thenkasi District.
ORCiD: https://orcid.org/0000-0002-7031-2443
**DOI: 10.5281/zenodo.3628456**

## Abstract

*Literature is not just for entertainment the educated society; it is also not just a mirror of the picture of human ordinary life. It ought to foster good-will and harmont in the society. In today's society, luxury, drought, caste and religion are creating evil mindset in the minds of people and peoples are sparking riots and causing violence that instable the society. Instead of cultivating love for man, they prefer to create and benefit from hate. In such an environment, we must help others with love. Thiruvalluvar, the universal saint has stressed on the importance of compassion and love to see others spirit in others. Today, the mindset of people is to do evil to those who do evil. Hate is developing hatred and so does the idea of revenge stops the positive aspects of religion, ethnicity and language. On the contrary, the country is growing hostile for many reasons and ending in War. Therefore, Thiruvalluvar insists Universal Forgiveness to the International relationship. Hence, the paper tries to bring the holistic elements revealed in "Thirukkural".*

**Keywords:** Replication, Substantiation, Classic Kural, See thy Neighbor in You

**முன்னுரை**

இலக்கியம் என்பது இன்பத்தைத் தருவது மட்டுமன்று இவ்வுலகில் வாழும் மக்களின் வாழ்வியலின் பிழிவாகும். இலக்கியம் படித்தவனுக்கு இகத்தில் துன்பமேயில்லை இன்பமே எந்நாளும் என்பர். 'எத்திசை செல்லினும் அத்திசை சோறே' என்ற ஒளவையின் பொன்மொழிக்கு ஏற்ப இலக்கியங்கள் மனித வாழ்க்கையைப் படம் பிடித்துக்காட்டும் காலக் கண்ணாடி மட்டுமல்ல, நம்மை மற்றவர்களுக்கு முன்னுதாரணமாக விளங்கச் செய்திடும் விளக்காகவும் விளங்கிடுவதால் தான் இலக்கியம் படித்த நாம் அதனைப் பின்பற்றிட வேண்டும். 'உன்னைப் போல் பிறனையும் நேசி' என்ற இயேசு நாதரின் போதனையைப் பின்பற்றிடுவது போல் வள்ளுவரின் பைந்தமிழ்க் குறளில் தன்னில் பிறரை எப்படிக் காண்பது என்பதை விளக்கிச் செல்வதாக இவ்வாய்வுரையில் எடுத்தியம்பப்பட்டுள்ளது.

இன்றைய மனித சமுதாயத்தில் ஆடம்பரமும், வரட்டுக்கௌரவமும்,சாதியும், மதமும் மக்களுக்குள்ளும், மக்கள் மனங்களுக்குள்ளும் பிளவுகளை உண்டாக்கிக் கலவரங்களைத் தூண்டி வன்முறைக்கு வித்திட்டுமனித உயிர்களைப் பறிக்கும் தீய சக்திகளாக உருவாகி வருகின்றன. மனிதரிடத்தில் அன்பை வளர்ப்பதற்கு மாறாகப் பகையை உருவாக்கிப் பயன் பெறுகின்றன. இத்தகைய சூழலில் பிறர் அன்பு பேணி அயலார்க்குநாம் உதவ வேண்டும். என்பதை,

**ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்**[1]
**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**தம்நோய்போல் போற்றாக் கடை**[2]

என்று திருவள்ளுவர் கூறினார். இதனை,

**உங்களுக்குப் பிறர் என்னென்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்களோ, அவற்றையெல்லாம் நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்**[3]

**சின்னஞ் சிறு என்சகோதரருள் ஒருவனுக்கு நீங்கள் இவற்றைச் செய்தபோதெல்லாம் எனக்கே செய்தீர்கள்**[4]

என்று இயேசுநாதரும் மொழிந்துள்ளார். பிறர் படும் துன்பத்தைத் தானே உணர்ந்து உதவும் பேரறத்தைத் திருவள்ளுவர் கூற, உன்னில் அயலானைப் பார் என்று விவிலியம் கூறுகிறது. மனிதப் பிறவிக்கு மட்டுமே பிறரை அறிந்து அவர்தம் தேவைக்கு ஏற்ப உதவும் பண்பு உண்டு. மனிதப் பிறவியின்மாண்பும் அதுவேயாகும் என்று இருவரும்கூறுவது கருதத்தக்கது. பிறர் தமக்கு செய்த தீமையை நன்மையால் நனைத்திடும் தூய்மையான உள்ளளம் படைத்தவர்களாய் நாம் வாழ்ந்திட **தன்னில் பிறரைக் காட்டிட** வேண்டும். அதனை வலியுறுத்திடும் வண்ணம் வள்ளுவரின் வாய்மொழிக்கு சில மேற்கோள்கள் மட்டுமே வேதாகமத்திலிருந்தும், பாரதியார் பாட்டிலிருந்து கையாளப்பட்டது.இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமே உலகிலுள்ள உயிர்களிலே கடவுளுக்கு இணையானவன் மனிதன் அம்மனித இனம் சிறப்பாக வாழ்ந்திட வள்ளுவரின் குறள் குறைகளைந்து ஒற்றுமையுடன் வாழ்ந்திட வழிகோலிடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை என்பது திண்ணம்.

**பொறுத்தருளும் பண்பு**

தீமை செய்தவர்க்கு தீமை செய்வதே மக்களின்மனநிலையாக உள்ளது.பகை பகையை வளர்க்கின்றது. அதனால் பழிவாங்கும் எண்ணமும் வளர்கிறது.இன்றைய நிலையில் சாதி,மதம் இனம்,மொழி போன்றவற்றின் அடிப்படையில் பகை வளர்ந்து வருகிறது. நாட்டிற்கு நாடு பல காரணங்களால் பகை வளர்ந்து பெரும் போரில் முடிவடைகிறது. தனி மனிதப்பகையும் சமுதாயத்தில் வளர்ந்து வேரூண்றி வருகிறது. ஆசை,அனுபவம் போன்ற காரணங்களால் ஒருவரையொருவர் பகைக்கும் கொடுமை வளர்கிறது. இதற்கு மாறாக ஒருவர் புரியும் தீமையைப் பொறுப்பதால் பகைவளர வழியில்லை. பிறர் பிழையை பொருத்தருளும் பெருங்குணம் மக்களிடையே வளர வேண்டும். தீமைக்குத் தீமை தீர்ப்பாகாது என்று திருவள்ளுவரும் இயேசுநாதரும் மொழிந்தனர்.

**இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்துவிட்ல்.**[5]
**இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு?**[6]

என்ற திருக்குறளில் தீமை செய்தவர்க்கு நன்மை செய்வதே!சால்பு என்று திருவள்ளுவர் கூறினார். இதனை இயேசு நாதர் "உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள், உங்களைத் துன்புறுத்துவோர்களுக்காக ஜெபியுங்கள் உங்களுக்குஅன்பு செய்பவர்களுக்கே நீங்கள் அன்பு செய்தால் உங்களுக்கு என்ன கைமாறு கிடைக்கும்"[7] என்று கூறினார். ஏசுநாதர் தான் கூறியவாறே தனக்குத் தீமை செய்தவர்களை தண்டிக்காமல் அவர்களை மன்னித்தார்."தந்தையே,அவர்களை மன்னியுங்கள் ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதெனில், அவர்களுக்குத் தெரியவில்லை"[8] என்றே வேண்டிக்கொண்டார். எனவே, திருவள்ளுவரும் இயேசுநாதரும் நற்பயன் அளிக்காத தீமையை மறந்து பொருத்தருளும் பண்பை அறமாகக் அகிலத்திற்கு அறிவுறுத்தி வருகிறார்.

**பகைவனுக்கு அருளல்**

எந்தச் சூழ்நிலையிலும் பழிக்குப் பழி வாங்கும் எண்ணம் உங்கள் உள்ளத்தில் வரக்கூடாது. "**பழி வாங்குதல் எனக்குரியது**"[9] என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆகவே, அதை நீங்கள் கர்தரிடத்திலே விட்டு விடவேண்டும். பழைய ஏற்பாட்டுக்காலத்தில் **"கண்ணுக்குக் கண்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**பல்லுக்குப் பல்''**[10] என்கிற பிரமாணம் இருந்தது. அது அப்போதைய நியாயப்பிரமாணம். ஆனால்,புதிய ஏற்பாட்டிலே நியாயப்பிரமாணம் மாறி அன்பின்பிரமாணம் வந்தது. அன்பின் பிரமாணத்தின்படி ஒருவன் ஒரு கன்னத்தில் அறைந்தால், பழிக்குப்பழி வாங்க அறைந்தவனின் கன்னத்தை திருப்பி அறைய முடியாது. மறு கன்னத்தையும் திருப்பிக்காட்டும்படி இயேசு சொன்னார். நிந்திக்கிறவர்களை பதிலுக்குப் பதில் நிந்தியாமல் அவர்களை ஆசீர்வதிக்கவும், ஜெபிக்கவும் இயேசு கற்றுக்கொடுத்தார். பாரதியாரோ!

**பகைவனுக் கருள்வாய்-நன்னெஞ்சே,**
**பகைவனுக்கு அருள்வாய.**
**புகை நடுவினில் தீயிருப்பதைப்**
**பூமியிற்கண்டோமே நன்னெஞ்சே**
**பூமியிற் கண்டோமே.**
**புகை நடுவினில் அன்புரு வானநம்**
**பரமன்வாழ்கின்றான் - நன்னெஞ்சே**
**பரமன் வாழ்கின்றான்.**[11]

நமக்குத் தீங்கிழைத்தவரிடம் அன்பு பாராட்டுவதையே நல்லறமாகக் கொள்ளவேண்டும் என்பதை 'இன்னா செய்யாமை' என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் பிறர்க்கு இன்னா செய்யாமையை மட்டும் அறிவுறுத்தவில்லை. இன்னா செய்தார்க்கும் இன்னா செய்யாமையையும் சிறப்பாக வலியுறுத்துகின்றார்.

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்**[12]

என்பது அவர் வாக்கு.

**இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு**[13]

எனச் சான்றாண்மை அதிகாரத்திலும், அவர் இக்கருத்தினை விரித்துக் கூறுகின்றார்.வள்ளுவர் வாய்மொழியை நினைப்பூட்டுகையில்,''பிறர் செய்த தீமைக்குத் தகுந்த பிரதி, அவரைப் போல் நாமும் செய்யாதிருத்தலே'' என்கிறார்.மேலும், நாம்,''தீங்கு இழைத்தவரிடமும் அன்பு செய்தல் தான் தருமம், உறவினர் தவறு செய்தமைக்குக் காரணம் அறியாமை. மனம் ஒவ்வாமல் தான்! தவறு செய்கிறார். மனிதர்களுக்கு மரணம் என்பது நிச்சயம். இதை நாம் உணர வேண்டும். பிறர் நமக்கு செய்த தீங்மையை மனத்தில் வைத்தோமேயானால்,நமக்குத் தீங்கு செய்தவரிடம்அன்பு காட்டுவது எவ்வாறு? தீங்கு செய்தவரிடமும் அன்பு காட்டுமாறும், அவர் நாணநன்னயம் செய்யும் போது நம் குணம் மாறும்.அப்போது,ஒரு துன்பமும் நம்மை அணுகாது.இன்னா செய்தார்க்கும் அவர் நாணநன்னயம் செய்துவிடுமாறு அறிவுறுத்துகின்றார்.

**மனநலம் போற்றுதல்**

**'நாநலம்'**[14], **'துணைநலம், வினைநலம்''**[15], **'இனநலம்'**[16] முதலான எல்லாநலங்களினும் மேம்பட்டதாக மனநலத்தைக் கருதினார் திருவள்ளுவர். மனந்தூய்மையை மலையினும் மானப்பெரிதாகப் போற்றுகிறார் அவர். **'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்'**[17] என்பது வள்ளுவம் கண்ட முடிவு. உள்ளத்தைப் பரிசுத்தமாக்கிப் பயன்படுத்துவதே பெருமை. அதில் தான் சகல நற்பயனும் உண்டு. மற்றவை அனைத்தும் நிலையற்றவை. வெறும் புகையாய்ப் போகும் என்பதை, **'அன்றறிவாம் என்னாது அறம் செய்க'**[18] என்கிறார் வள்ளுவர். உயிருடன் வாழ்கின்ற காலத்திலே உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ளவேண்டும். **''உள்ளத்தால் பொய்யாது ஒழுகுவதையே வாய்மையாகக் கருதும்''**[19] என்னும் குறள் வாயிலாக வலியுறுத்துகின்றார்.

**இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதல்**

இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுவதைத் திருவள்ளுவர்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

- இன்பம் - துன்பம்
- பிறப்பு - இறப்பு
- புகழ்ச்சி - இகழ்ச்சி.

இந்தத் தத்துவங்களைச் சம உணர்ச்சியுடன் கருதாதவர் தெய்வ பக்தர் ஆகமாட்டார்.நம் வாழ்வில் நேரும் சுகம் துக்கம் இரண்டையும் வருத்தமின்றி ஒப்புக்கொள்வதே ஞானம் என்றும் உரைக்கின்றது திருக்குறள். **'இடுக்கண் அழியாமை'** என்றோர் அதிகாரம் வகுத்து அதில் வள்ளுவப்பெருந்தகை, **"துன்பம் வரும்போது அதற்குக் கலங்காமல் நகுதல் வேண்டும்"**[20] என்றும், "இன்பம் வந்த காலத்தில் அந்தத் துன்பத்தை அடைவதும் இல்லை" என்றும், ஒருவன் துன்பத்தையே தனக்கு இன்பமாக்கிக் கொள்வானானால் அவனுடைய பகைவரும் விரும்பத்தக்கச் சிறப்பு உண்டாகும் என்றும் கூறியுள்ள கருத்துக்கள் "துன்பம் வரும்வேளையிலே சிரிங்க என்று சொல்லி வைத்தான் வள்ளுவனும் சரிங்க! என்று மிக எளிய பதத்தில் கண்ணதாசரின் திரைத்தத்துவ வளமும் தனித்தன்மையும் வாய்ந்தவை ஆகும்.

**"இடுக்கண் வருங்கால் நகுக" "இடும்பைக்கு இடும்பை படுக்க" "உடம்பு இடும்பைக்கு இலக்கம்" 'இன்பத்துள் இன்பம் விழையற்க''துன்பத்துள் துன்பம் உறற்க', 'இன்னமை இன்பம் எனக் கொள்க'** என்னும் வள்ளுவரது வாழ்வறங்கள் திட்ப நுட்பமும் தெளிவும் கொண்டவையாகும். இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுவதோடன்றி அதனைப் புன்னகையுடன் ஏற்குமாறும், துன்பத்தையே இன்பமாக்கிக் கொள்ளுமாறும் அறிவுறுத்துகின்றது வள்ளுவம் இதனை மனமுவந்து ஏற்றுக் கொள்ளுதலே வாழ்வின்இனிமையாகும்.

**ஒழுக்கம் வலியுறுத்தல்**

நல்லொழுக்கமும், நேர்மையும் நம்முடைய வாழ்வில் குறிக்கோளாக இருக்க வேண்டும். அப்போது தான், நம் பேச்சில் தைரியமும், சத்தியமும் பொருந்தி சுகமாயிருப்போம் என்பதை,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**[21]

என்னும் குறட்பாவில் ஒழுக்கத்தை உயிரிலும் மேலானதாகப் போற்றுகிறார் திருவள்ளுவர். 'ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை'. என்றும் 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்'. என்றும் அவர் ஒழுக்கத்தின் உயர்வினை எடுத்துரைக்கின்றார். மேலும், அவர் ஒழுக்குத்திற்கு எதிர்ச் சொல்லாக இழுக்கம்' என்னும் புதிய சொல்லையும் படைக்கின்றார்.

**உயிரிரக்கம் யேணல்**

நம் மனிதர்களிடம் தயை என்னும் உயிர்ப் பண்பு மலிந்து வருகிற காரணத்தினால் தெய்வம் மனிதனிடத்தில் எவ்வளவு தயை காட்டுகிறது. அதையே நாமும் மற்றவர்களிடம் தயை கொண்டு நடந்திடல் வேண்டுமென்பது வள்ளுவர் கூறிடும் அறிவுரை. மேலும், "அந்தணர் என்பர் அறவோர்" எனப் புரட்சிக்குரல் எழுப்பியவர் வள்ளுவர். "எல்லா உயிர்களிடத்திலும் செம்மையான அருளை மேற்கொண்டு ஒழுகுவோர்" என்பது அவர் அந்தணர்க்குத் தரும் புதிய விளக்கம்.

**அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர் செகுத்து உண்ணாமை நன்று**[22]

என்ற 'புலால் மறுத்தல்' அதிகாரத்திலும்,

**உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற் குரு**[23]

என்று 'தவம்' அதிகாரத்திலும் உயிர் இரக்கத்தை ஒல்லும் வகையெல்லாம் அறிவுறுத்தும் வள்ளுவம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**மரணத்தின் மெய்ம்மையையுணர்தல்**

ஒரு தாயின் வயிற்றிலிருந்து குழந்தை பிறக்கும் நாளை எதிர்பார்ப்பது போலவே, நம்முடைய ஆத்மா அடைபட்டிருக்கும் இவ்வுடம்பாகிய பையிலிருந்து வெளியேறுவதை எதிர்பார்த்திருக்க வேண்டும். மரணம் என்பது நிச்சயம் என்பதை அழகிய உவமை வாயிலாக,

**நாள்என ஒன்றுபோற் காட்டி உணிரீரும்**
**வாள்அது உணர்வார்ப் பெறின்**[24]

என்ற குறளில் மரணத்தின் உண்மையை மனத்திற் பதியுமாறு உணர்த்துகின்றார் வள்ளுவர். “இறப்பது உலகத்தில் இன்றியமையாத நிகழ்ச்சி,அது கடவுள் நியதி, அதை வெறுக்காதே! பாலியப் பருவத்திலிருந்து வளர்ந்து யெவனம் அடைவது போலவே, முடிவில் இறப்பது இயற்கையாக வரும். ஆகையால், அறிவுள்ளவர் மரணத்தை வெறுக்கமாட்டார். அசட்டை செய்யவும் மாட்டார். அதை ஒப்புக்கொண்டு அதனை எதிர் பார்த்திருப்பர். என்கிறார் அவர்,

**உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு**[25]

என மரணத்தின் இயல்பை வள்ளுவர் அருமையான உவமை வடிவில் வெளியிட்டுள்ளார்.

**வாழ்வாங்கு வாழ பின்பற்றத் தக்கவை**

நாம் வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டியவர் வள்ளுவர். ‘மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் என்று மக்களுக்கு நம்பிக்கை ஊட்டிவர். அவரது அறிவுரைகள் எளியவை, நடைமுறைக்கு உகந்தவை, வாழ்வில் பின்பற்றத்தக்கவை. விரக்தியில் விளைந்த வெற்றுத் தத்துவங்கள் அல்ல அவை. வறட்டு முழக்கங்களுமல்ல அவை,நம்மிடத்தில் இல்லாத எந்தப் பொருளின் மேலும், ஆசை கொள்ளவே கூடாது. நம்மிடத்தில் இருக்கும் சிறந்த பொருள்களை நினைத்துப் பார்த்து மகிழ்ச்சியுடன் வாழவேண்டும். அவை இல்லாதிருந்தால் அவற்றை எவ்வளவு ஆவாவுடன் தேடியிருப்போம் என்பதை சிந்தித்துப்பார்க்க வேண்டும். இவ்வாறு சிந்தித்து மனத்தைத் திருப்தி செய்து கொள்ள வேண்டும் என்று எளிமையாக வாழும் வழிகளை மனிதருக்குக் கற்றுக் கொடுக்கிறது வள்ளுவம்.

**யாதலின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்**[26]

என்னும் குறட்பா இச்சிந்தனையின் வாமன அவதாரம் தானே“கோபம் காட்டுபவரின்! கோபம் கொள்ளாமல் மனத் தடுமாற்றம் இன்றி நம்முடைய கருமத்தைப்பொறுமையுடன் செய்திடல் வேண்டுமென்ற. இச்சிந்தனையுடன் செயல்பட முற்படுகையில், நம் மனத்திரையில்,

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை**[27]

என்னும் குறட்பாவே ஓடும்.

**ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்க**[28]என்பது குறள்.

**விதியை உழைப்பால் வெல்லலாம்**

**ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்**
**தாழா(து) உஞற்று பவர்.**[29]

என்னும் குறள் ‘விதியை மதியால் வெல்லலாம்’ என்பது பழமொழி. வள்ளுவரின் வாய்மொழியோ! விதியையும் உழைப்பால் வெல்லலாம் என்றார். உலகில் பல நாடுகள் உயர்வு பெற்றுள்ளன. இரண்டாம் உலகப்போரில் அழிவுற்ற நிலையிலிருந்த சப்பான் நாடு பழையபடியும் எல்லாத் துறைகளிலும் முன்னேறக் காரணமாயிருந்தது அந்நாட்டில் ஏற்பட்ட தொழில் வளமே. இன்றைக்கு இவ்வுழைப்புத் தான் நமது நாட்டிற்குத் தேவை என்பதை உணர்ந்து செயலாற்றிட வேண்டும்.இதுவே, நல்ல சிந்தனையில் நல்லவர் இவ்வாறு இருப்பர். என்னும் மனித சமூகம் வாழ்வாங்கு வாழ வழிகாட்டி உறுதிப்படுத்துகின்றது வள்ளுவம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**அடிக்குறிப்புகள்**

1. திருக்குறள் - 214 ஆவது குறள்
2. திருக்குறள் - 314ஆவது குறள்
3. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடு மத்தேயு.அதிகாரம்- 7:12ஆவது வசனம்.
4. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடு மத்தேயு.அதிகாரம் -25:40ஆவது வசனம்.
5. திருக்குறள் - 314 ஆவது குறள்
6. திருக்குறள் - 987 ஆவது குறள்
7. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடு மத்தேயு.அதிகாரம்- 5:44-46ஆவது வசனம்.
8. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடுலூக்கா.அதிகாரம்- 23:33-34ஆவது வசனம்.
9. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடு ரோமா. அதிகாரம் - 12:19 ஆவது வசனம்.
10. பரிசுத்த வேதாகமம். புதிய ஏற்பாடுமத்தேயு.அதிகாரம் -5:38 ஆவது வசனம்.
11. பாரதியார் கவிதைகள் தொகுதி. வேதாந்தப்பாடல் பகுதி.
12. திருக்குறள் - 987 ஆவது குறள்.
13. திருக்குறள் - 214 ஆவது குறள்
14. திருக்குறள் - 641 ஆவது குறள்
15. திருக்குறள் - 651 ஆவது குறள்
16. திருக்குறள் - 457 ஆவது குறள்
17. திருக்குறள் - 34 ஆவது குறள்
18. திருக்குறள் - 36 ஆவது குறள்
19. திருக்குறள் - 294 ஆவது குறள்
20. திருக்குறள் - 621 ஆவது குறள்
21. திருக்குறள் - 131 ஆவது குறள்
22. திருக்குறள் - 259 ஆவது குறள்
23. திருக்குறள் - 261 ஆவது குறள்
24. திருக்குறள் - 334 ஆவது குறள்
25. திருக்குறள் - 339 ஆவது குறள்
26. திருக்குறள் - 341 ஆவது குறள்
27. திருக்குறள் - 151 ஆவது குறள்
28. திருக்குறள் - 190 ஆவது குறள்
29. திருக்குறள் - 620 ஆவது குறள்

**உதவிபுரிந்த நூல்கள்**

1. திருக்குறள் - திருக்குறள் உரை முழுமையும் - Tamil virtual university library.org.
2. பாரதியார் கவிதைகள் தொகுப்பு -Tamil virtual university library.org.
3. திருவிவிலியம் - பெந்தேகோஸ்தே பைபிள் -பைபிள் சோசைட்டி ஆம் இந்தியா - பெங்களூர்.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**பாண்டியம்மாள், செ.** “தன்னில் பிறரைக் காட்டிடும் பைந்தமிழ்க் குறள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 62-68. டிஓஐ: 10.5281/zenodo.3628456.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# அகப்பொருள் இலக்கணத்தில் பாங்கன்-பாங்கியர் கூற்று - ஓர் ஆய்வு
# Tête-à-Tête of the Lover-Beloved in *Agaporul Ilakkanam* - A Study

ம.மலர், உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊற்றங்கரை.
**M.Malar,** Assistant Professsor of Tamil, Adhiyaman Arts and Science College for Women, Uthangarai.
ORCiD: https://orcid.org/0000-0002-1112-4290
**DOI: 10.5281/zenodo.3628464**

## Abstract

*Tamil life and culture is a primordal one. It has its origin many ages back in the realms of time. Owing to its nobility, Its classic quality, simplicity, sweetness are oozing in every Tamil work. 'Agapporul Ilakkanam' is an out-standing work that shows the life style of the classic Tamil society and life of the 'Thalaivan-Lover and Thalaivi-Beloved' in an enchanting manner. The tête-à-tête (conversation) of them are portrayed in a mesmerising manner and we can understand their moral stand, fear and other virtues in regard to the ancient Tamil society. Hence, the paper ponders to find out the ancient Tamil society and the portrayals of the heart-to-heart conversations of the 'Thalaivan- Lover and Thalaivi-Beloved' in a justifying note.*

**Keywords:** Lover-Beloved, tête-à-tête, *Agaporul Ilakkanam*

### முன்னுரை

தமிழர் தம் வாழ்வு காலத்தால் முற்பட்டது. அஃது கல்தோன்றா மண்தோன்றாக் காலத்தது. பண்பட்டு வாழ்ந்த பழம்பெருமை உடையது. எளிமையும், இனிமையும் உடையது. இத்தகு சிறப்புமிக்க பழந்தமிழர் வாழ்வை இப்படியே வடித்துக்காட்டுகின்ற இலக்கணமாக அமைவது அகப்பொருள் இலக்கணமாகும். அகம், புறம் என இரண்டு வகையாக அழகுற வடித்துத்தந்த இலக்கணமே பொருள் இலக்கணமாகும். அவற்றுள் மனித வாழ்கையில் முதன்மையானதாகப் போற்றப்படுவது அக இலக்கணமாகும். அகம் என்ற அதன் பெயரிலேயே அதன் தனித்தனமையை அறியலாம். இலக்கண மரபிற்கு உட்பட்டு அமையும் தன்மையைக் கொண்டது. இலக்கண மரபுகளுக்கு உட்பட்டு அமைந்திருப்பதையும், தமிழர் தம் அக வாழ்வின் தனிச்சிறப்புகளை எடுத்தியம்புவதாகவும இக்கட்டுரை அமைகின்றது.

### அகப்பொருள்

அகப்பொருள் என்பது மனதால் மட்டுமே உணரக்கூடியது. வெளியே சொல்ல முடியாதது. அனுபவத்தால் மட்டுமே பெறக்கூடியது. கண்ணுக்குப் புலனாகாதது அத்தகு இன்ப நிகழ்வுகளின் ஒட்டுமொத்த அமைப்பே அகப்பொருளாகும். அந்தவகையில் அகஇலக்கணங்கள் பற்றிய ஆய்வுகள் தமிழில் நிறைய வெளிவந்துக்கொண்டே இருக்கின்றன எனினும் இலக்கண மரபுகளோடு இலக்கியங்களைப் பொருத்திப்பார்த்துச் செய்யப்படும் ஆய்வுகள் மிகக்குறைவு. அக்காலத்தில் மக்கள் அதிக அளவில் காதல் மணம் புரிவதையே விரும்பியிருக்க வேண்டும் என்பதும், திணையமைப்புகளின் அடிப்படையில் வாழ்ந்த பழந்தமிழரின் அக வாழ்வானது மேம்பட்ட நிலையில் இருந்ததென்பதும் கருத்துகளாக அமைகின்றன.

### அகப்பொருள் மரபுகள்

தலைவன், தலைவி என்று பெயர் குறிப்பிட்டு சொல்லாமல் பொதுப்பெயர்களாகவோ

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

அக இலக்கணம், இலக்கியங்கள் நமக்கு எடுத்துக்காட்டுகின்ற மனித வாழ்வை அகப்பொருளில் களவு, கற்பு என்னும் இருபெரும் பிரிவுகளாக பகுக்கப்பட்டுள்ளன.

களவு என்பது ஒருவனும் ஒருத்தியும் மனதால் ஒன்றுபட்டு அன்பை எவரும் அறியா வண்ணம் பறிமாறிக்கொள்வது. இவை திருமணத்தற்கு முன்பு நடைபெறக் கூடியவை.

கற்பு என்பது தலைவனும் தலைவியும் இல்வாழ்வில் நன்நெறி பிறழாமல் தன்நெறியில் வாழ்வது. இவை திருமணத்திற்கு பிறகு நடைபெறக்கூடியவை. அதன் அடிப்படையில் தலைவனையும் தலைவியையும் ஒன்று சேர்க்கும் பாலமாக இருப்பவர்கள் தோழியர்கள், தலைவன் பிரியும் காலத்து தோழி அறிவுரை கூறும் செய்தி,

**காதலர் பிரிதல் இன்சொல்**
**இகுளையர்த் தரூஉம் வாடையோடு**
**மயங்கிதழ் மழைக்கண் பயந்த, தூதே (நற்றி - 5 7-9)**

தலைவி பிரிவினால் வாடும் துன்பங்களை நின் கண்கள் தெரிவித்தன. அதுகண்டு தலைவன் முன் பனிக்காலத்தும் நின்னைப் பிரியார் என்று குறிப்பிடுகிறார். காதலரை பிரிந்து வாழ்தல் இல்லை. ஆகையால் மகிழ்வோடு இருப்பாயட் என்று உரைக்கிறாள்.

**இலக்கண மரபுகள்**

ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் பால்வழி இணைந்து அளவாகிய காலத்துப் பிறந்த துன்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாகும் உள்ளத்துணர்வே அகம் எனப்பட்டது. இப்பொருள் பற்றிய புலனெறி வழக்கத்தின் இலக்கணம் தொல்காப்பியத்திலும், இறையனார் அகப்பொருளிலும் கூறப்பெறறுள்ளது.

இப்பொருள் ஐந்து திணையாகப் பகுக்கப் பெற்றது ஒவ்வொன்றும் நிலம், காலம் ஆகிய முதற்பொருளாலும், மக்கள், மரம், விலங்கு, பறவை, தொழில் முதலிய கருப்பொருளாலும், அக ஒழுக்கமாகிய உரிப்பொருளாளும் விரிவாக அமைக்கப்பெற்றன.

**பாங்கன்**

பாங்கன் என்பவர் கல்வி, கேள்விகளால் சிறந்த அறிவைப் பெற்றுத் தலைவனுக்குப் பாங்காக நிற்பவரே பாங்கர் என்பதை உணர முடிகின்றது. தலைவனுக்கு உற்றத் தோழனாகவும் தலைவனுக்கு அறிவுத்திறத்தாலும் உடல் வலிமையாலும் துணையாக விளங்குபவனாகவும் இருப்பவன் பாங்கன் என்பதை அகஇலக்கணங்கள் மூலம் அறிய முடிகின்றது. இவர்களுள் ஒருவகையினர் பார்ப்பனச் சாதியில் தோன்றியதால் பார்ப்பன பாங்கர் என ஒரு வகையினர் இருந்ததாக தெளிவாக்கப்படுகின்றன.

**பார்ப்பனப் பாங்கர்க்கு உரிய செயல்கள்**

மறையவர் வகைச் சார்ந்த பாங்களுக்கு உரியதாக இளமையும், யாக்கை நிலைமையும், வளமை முதலானவற்றை கூறும் செல்வ செழிப்பின் திறன் ஆகியவற்றை எடுத்துரைப்பது மட்டும் அல்லாமல் உலகில் நிலை நிலையற்ற தன்மை குறித்தும், நிலைத்து இருக்கக்கூடிய அறப்பொருட்களையும் எடுத்துக்கூறுவது இவர்களுடைய செயல் என்றும், தலைமகளை தலைமகன் பிரிந்து செல்லுதலைத் தடுத்து அவர்களுக்குரிய இன்றியமையாத பணிகளைக்கூறி யாரிடம் சென்றால் வேலையை எளிமையாக செய்து முடிக்க முடியும் என்பதை கூறி வழிப்படுத்துவதும் பார்ப்பன பாங்கனுடைய செயலாகும் என்பதை அறியமுடிகின்றது. இதனை

**இளமையும் யாக்கையும் வளமையும் ஏனவும்**
**நிலையாத் தன்மை நிலையெடுத்து உரைத்தலும்**
**செழுவலங்கு வித்தலும் செலவுடன் படுத்தலும்**
**பிறவும் எல்லாம் மறையோர்க்கு உரிய (நம்பி.நூ – 100)**

விளக்குகின்றது. மேலும் தலைமகன் இளமைக் காலத்தில் வாழும் வாழ்கையின் அருமைக்குரித்து அறிவுரை கூறுவதாகவும், உலகில் நிலைத்து இருக்கக்கூடிய பொருள் என்று எதுவும் என்பதையும் தெளிவாக்கப்படுகின்றது என்பதை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்து இவ்வுலகு (திரு.336)**

விளக்குகின்றது.

**சூத்திர பாங்கருக்குரிய செயலை உரைத்தல்**

நான்கு வகை வருணத்தாருள் வேளாளர் குலத்தில் தோன்றித் தலைவனுக்கு பாங்காக நிற்பவரே சூத்திரப் பாங்கராவர். மதி நுட்பமும் உடல்வலிமையும் கொண்ட இவர்கள் தலைவனை தீமைத்தரும் செயல்களிலிருந்து நீக்கி நன்மைத்தரும் செயலை கூறி தலைவனை நல்வழிப்படுத்துமல் சூத்திர பாங்கருக்குரிய செயல் என்பதை விளக்குகின்றது. இதனை

**நன்மையின் நிறுத்தலும் தீமையின் அகற்றலும்**
**சொன்னவை பிறவும் சூத்திரர்க்கு உரிய (நம்பி: நூற்.101)**

தெளிவாக்குகின்றது. தீமையை அகற்றல் என்று கூறப்படும். இத்தகை தீயச்செயலானது பரத்தையின் பாற்டுதல் என்பதற்கு திருவள்ளுவர்,

**இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திரு நீக்கப் பட்டார் தொடர் (திரு.920)**

திருக்குறளில் தெளிவாக்கியுள்ளார் என்பதை அறிய முடிகின்றது. மேலும் நன்மையில் நிறுத்துதல் என்பதை அறநெறியில் பொருளீட்டி வாழ்தல் என்பதை,

**பொருள் என்னும் பொய்யாவிளக்கம் ஈனும் திறன்அறிந்து**
**எண்ணிய தேகத்துச் சென்று (திரு.753)**

எனவும், தலைவனை தீய வழியிலிருந்து நீக்கி நல்வழிப்படுத்துதல் பாங்கனுக்குரிய செயலாக உணர முடிகின்றது.

**இருவகைப் பாங்கரின் உரிமை**

பார்ப்பனப் பாங்கர், சூத்திரப்பாங்கர் ஆகிய இருவரும் பெருமையுடைய தலைவனுக்கு இனிய உயிர் நண்பராக இருப்பவர்கள். இவ்விருவரும் அவனுடைய தாயும், தந்தையும் தலைவனுக்கு அடைக்கல் பொருள் என்னும் தன்மைக்கு சிறப்புடையவராகக் கொடுக்கப்பட்டவர்கள் என்பதை அறிய முடிகின்றது. இதனை,

**இருவகைப் பாங்கரும ஒருபெருங்குரிசிற்கு**
**இன்னுயிர்த் துணையாய் இருபெருங்குரவரும்**
**தன்னை யளித்த தகைமை யோரே**

அகப்பொருள் மூலமாகத் தெளிவாக்கப்படுகின்றது.

**பாங்கற் கூட்டம்**

தலைவியைப் பிரிந்த தலைவன் மூன்றாம் நாள் பாங்கனின் உதவியால் தலைவுடன் சேர்வான் அறியமுடிகின்றது. சார்தல், வினாவுதல், உரைத்தல், எதிர்மறையாக இருத்தல், இசைதல், கூடுதல், பாங்கியின்பாற் கூடுதல் என பாங்கற் கூட்டம் ஏழுவகையினை உடையதாக தெளிவாக்கப்படுகின்றது. இதனை

**சார்தல் கேட்டல் சாற்றல் எதிர்மறை**
**நேர்தல் கூடல் பாங்கின் கூட்டல் என்று**
**ஆங்குஎழு வகைத்தே பாங்கற் கூட்டம் (அகம்.நூற் -136)**

அகப்பொருள் விளக்கம் தருகின்றது,

**பாங்கன் தலைவனுக்கு எதிர் மொழிதல்**

தலைவனை எதிர்த்துப் பேசும் (கழறுதல்) உரிமை பாங்கனுக்கு உண்டு என்பதை,

**மொழி எதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே (தொல்.பொருள். 1128)**

அறியமுடிகின்றது. மேலும்

**குறித்து எதிர்மொழிதல் அஃகித் தோன்றும் ( தொல்.1129)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தலைவன் செய்யும் தவறை நேரில் நின்று சுட்டிக்காட்டி எதிர்மொழி பேசுதல் பாங்கனுக்குரியது என்பதை விளக்கியுள்ளார் தொல்காப்பியர்.

**பாங்கிக்கு உரிய செயலை உரைத்தல்**

தலைமகளைப் பிரிந்து செல்லவேண்டும் என்று தலைமகன் என்னும் போது அதனை நீக்குதலும், தலைமகன் தலைமகளின் மீது தொடரும் புணர்ச்சியை நீக்கி பிரிவு கொள்ளுமாறும் செய்தலும் தலைமகளை திருமணம் செய்வதற்காகப் பொருளீட்ட பிரிந்து செல்லும் தலைமகன் பிரிந்து செல்லும்போது உறுதி கூறுதலும் வேறு எந்த வகையில் தலைவனுக்கும் தலைவிக்கும் பிரியும் நிலை வந்தால் அப்பிரிவை நீக்குவதோடு மட்டுமல்லாமல் "பிறவும் உரிய" என்பதற்கு தலைமகன் தலைமகளைப் பிரிந்து பரத்தையர் முதலான பெண்களை நாடி சென்றபோது அதனை தவிர்த்தல் வேண்டும் என்று தலைவனுக்கு அறிவுரைக் கூறுதல் பாங்கிக்குரிய செயலாகும் என்பதை அறியமுடிகின்றது. இதனை,

> **பிரிவுரி விலக்கலும் பிரிவுடன் படுத்தலும்**
> **பிரிவுழித் தேற்றலும் புரிவுழி அழுங்கலும்**
> **பிறவும் உரிய இறைவளைப் பாங்கிற்கு (நம்பி.நூற்.103)**

இதனை விளக்குகின்றது.

**முடிவுரை**

நம்பியகப்பொருளில் இடம்பெற்றுள்ள தலைவனுக்கும் தலைவிக்கும் உற்ற தோழனாகவும், தோழியாகவும் விளங்குபவர்கள் பாங்கனும் பாங்கியும் என்பதை உணர்த்துகின்றது. தலைவன் தலைவி தீயவழியில் செல்லாமல் நல்ல வழியில் சென்று அறச்செயல்களைச் செய்வதற்கும் பாங்கனும் பாங்கியும் உரைக்கும் அறிவுரைகள் தலைமகனையும் தலைமகளையும் மேன்மையுடையவராக உலகிற்கு காட்டிய அகப்பொருள் இலக்கணம் மனித வாழ்க்கையை மேன்மையடைய செய்யும் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக தெளிவாக்கப்படுகின்றது.

**பார்வை நூல்கள்**

1. கழக வெளியீடு, அகப்பொருள் விளக்கம், திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், 522, டி.டி.கே சாலை, சென்னை.
2. வ.த.இராமசுப்பிரமணியம். தொல்காப்பியம் - பொருளதிகாரம், பூம்புகார் பதிப்பகம், 127, பிரசாகம் சாலை (பிராட்வே), சென்னை – 600 108.
3. பரிமளம்.அ.மா. நற்றினை (முதற்பதிப்பு), ஏப்ரல்-2004 நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-600 098.
4. கௌமாரீஸ்வரி. எஸ்., (உ.ஆ)- பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், 2009.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**மலர், ம.** "அகப்பொருள் இலக்கணத்தில் பாங்கன்-பாங்கியர் கூற்று - ஓர் ஆய்வு." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 69-73. டிஓஐ: 10.5281/zenodo.3628464.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Malar, M.** "Tête-à-Tête of the Lover-Beloved in *Agaporul Ilakkanam* - A Study." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 69-73. DOI: 10.5281/zenodo.3628464.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# வெறியாட்டு - தொல்காப்பியமும் அகநானூறும்
## Veriyattu -*Tholkappiyam* and *Agananooru*

[1]**ந.மாலதி,** முனைவர் பட்ட ஆய்வாளர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[1]**N.Malathi,** Ph.D. Research Scholar, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
ORCiD: https://orcid.org/0000-0003-4687-8057
[2]**முனைவர் அ.கோவிந்தராஜன்,** உதவிப்பேராசிரியர் (அ) இயக்குநர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்பலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[2]**Dr. A. Govindarajan,** Assistant Professor of Tamil & Director, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
ORCiD: https://orcid.org/0000-0002-1237-8962
**DOI: 10.5281/zenodo.3628472**

## Abstract

*'Tholkappiyam' is the first Grammatical work found in Tamil language and in the world of other languges. It teaches the people about the meaning of the life. It preaches the life's truthfulness as existed in the Tamil Society in ancient times. It also evinces the rules that should be followed in life. 'Agathinnai' can be divided into two. One is 'Kalavu' and another is 'Karppu'. Kalavu is a type of love that happen before marriage. Karuppu is the type that happen after marriage. Due to the feeling of love, the beloved become very lean because of missing her lover. In home, her mother on seeing her state performs the ritual 'Veriyattam' to make her normal. To make her daughter happy, the mother has done 'veriyattam' for her daughter. The mother performs veriyattam by cleaning her house, offering grains, and offering varieties of flowers to the God. She slaughters a goat and mix its blood in the rice and dedicate it to the Lord Muruga and hopes the ritual will heal her daughters sickness failing to understand her love-sickness. Hence, the paper tries to evince the on these rituals and superstitions prevailed in the ancient Tamil Society.*

**Keywords:** *Tholkappiam*, *Agananooru*, Veriyattam, Sangam literature.

### முன்னுரை

தமிழில் கிடைத்துள்ள முதல் இலக்கண நூல் தொல்காப்பியம் ஆகும். இந்நூல் மக்களின் வாழ்க்கைக்குரிய இலக்கணத்தை பொருளதிகாரத்தின் வழி எடுத்துக் காட்டுகிறது. தொல்காப்பிய பொருளதிகாரம் தமிழின் உயிர்நாடி, முதுகெலும்பு என்றும் அழைக்கப்படுகிறது. வேறு எந்த மொழியிலும் இல்லாத வாழ்க்கைக்குரிய இலக்கணம் பொருளதிகாரமாகும். இந்நூல் உலகப் பொது நூல் என்று அழைக்கப்படுகிறது. நம் வாழ்வின் பல்வேறு கூறுகளை ஆய்ந்துக் கூறும் பகுதியாகப் பொருளதிகாரம் அமைகின்றன. வாழ்க்கை முறைக்கு இலக்கணம் கூறும் பொருளதிகாரத்தினுள் ஒன்பது இயல்கள் அடங்கியுள்ளன. அவற்றுள் மூன்றாவது இயலாக அமைந்துள்ள களவியலில் தொல்காப்பியர் களவு பற்றியச் செய்திகளை முழுமையாகத் தொகுத்து விளக்கியுள்ளார். வெறியாட்டின் முக்கியத்துவத்தை முழுமையாக தொல்காப்பியம் மற்றும் அகநானூற்றில் கூறப்பட்டுள்ளக் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக் கூறுவதே கட்டுரையின் நோக்கமாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**களவு**

அகத்திணை இரண்டு கைக்கோளாக பிரிக்கப்பட்டுள்ளது. கைக்கோள் என்பது ஒழுக்க நிலையாகும். திருமணத்திற்கு முன் நடப்பன களவு எனப்படும். திருமணமான பிறகு நடப்பன கற்பு எனப்படும். களவு என்பது பிணி மூப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும் திருவும் பருவமும் அன்பும் போன்றவற்றால் ஒப்புமையுடையராய் தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் எடுப்பவுமின்றி ஊழ் வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவதாகும். தமது மகள் பிறர்க்கு உரியவள் என்று இருமுதுகுரவரால் (பெற்றோரால்) கொடை எதிர்தற்குரிய தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்தலே 'களவு' எனப்படும். இக்களவு அன்பொடு புணர்ந்த 'காமக்கூட்டம்' என்றும் கூறப்படுகிறது. களவு என்பது தலைவன் தலைவி இருவருக்கு மட்டும் நடைபெறும் மறைமுக காதல் என்றும் குறிப்பிடப்படுகிறது. இதனையே 'மறைந்த ஒழுக்கம்', 'மறை', 'அருமறை' என்ற சொற்களாலும் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**வெறியாட்டு**

வெறி என்பது 'முருகனுக்குரிய இயல்பான நறுமணம்' ஆகும். வேலை ஏந்தி நின்று ஆடுபவன் வேலன் எனப்படும். இவனைப் படிமத்தான் 'பூசாரி' என்றும் அழைக்கப்படுகிறது. இவண் வெறியாட்டு எடுப்பவன் ஆவான். முருகனுக்கு பூசைப் பண்ணும் தொழிலையுடையதாலும் தன் கையில் வேலைக் கொண்டுள்ளதாலும் 'வேலன்' என்று அழைக்கப்படுகிறது.

**வெறியயர்தல்**

வெறியயர்தல் என்பது வெறியாட்டு எடுக்கும் பரந்த இடம் என்றும் கூறலாம். வெறியயர்தலில் முக்கியமான ஒன்று மறியறுத்துக் (செம்மறி ஆட்டுக்குட்டி) குரவையாடுதலாகும். குரவை தூங்கல் என்பது குரவைக் கூத்தாடுதல் எனப்படும். குரவைக் கூத்து என்பது மங்கையர் எழுவர் கைகோத்து ஆடும் கூத்தாகும். இவ்வாறாக ஆடி முருகனை வழிபடுதல் 'வெறியயர்தல்' எனப்படும்.

**பிரப்பு**

பிரப்பு என்பது தெய்வத்துக்குப் பலியாகப் பரப்பி வைக்கும் தினை போன்ற 'நிவேதனப் பொருள்' எனப்படும். பிரப்பு அரிசி என்பது குறுணி (நொய் அரிசி) மற்றும் தினைப் போன்ற பொருள்களுடன் குருதியை கலந்து தூவி பாட்டுப் பாடி பூசைச் செய்து முருகனை வரும்படி அழைத்து இல்லத்தில் வழிபடுவதாகும்.

**கட்டுவிச்சி பார்த்தல்**

கட்டுவிச்சி அல்லது கட்டுவித்தி என்பது குறி சொல்லும் குறமகள் எனப்படும். நெல்லைப் பரப்பி அதில் குறிக்கொள்பவள் எனப்படும். அணங்கப்படல் என்பது தெய்வத்தால் தீண்டப்பட்டவள் என்றும் கூறப்படுகிறது. தலைவியின் முகம் வாட்டமுற்று மிகுந்த வருத்தத்துடன் காணப்பட்டாள். இதனை அறிந்த செவிலி, தலைவியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள். அவளது முக வாட்டத்திற்கு காரணம் என்னவாக இருக்கும் என்று எண்ணி செவிலி கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்டாள். கட்டுவிச்சி "மயிலும் கோழியும் வேலும்" வந்திருப்பதால் முருகனால் தீண்டப்பட்டுள்ளால் என்று கூறினாள். துர் தேவதைகளால் தீண்டப்படவில்லை. நீங்கள் வருந்த வேண்டாம். முருகனுக்கு பூசைச் செய்தால் எல்லாம் சரியாகிவிடும் என்றாள்.

**வெறியாட்டு நிகழ்வு**

வேலனை அழைத்து வெறியாட்டு எடுத்தல் வேண்டும் என்று அன்றிரவே அழைக்க வேண்டும். வேலனும் வெறியாடும் களத்தினை நன்கு அமைத்தான். முருகனுடைய வேலிற்கு மாலைச் சூட்டினான். வளம் பொருந்திய வீட்டில் ஒலியுண்டாக முருகனைப் பாடிப் பரவிப் பலியினையும் கொடுத்தான். அழகிய சிவந்தத் தினையினைக் குருதியுடன் கலந்து தூவி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

முருகனை வரும்படி அழைத்து இல்லத்துள் வழிபாடு நடத்தினான். இதனையே 'வெறியாட்டு நிகழ்வு' என்றும் கூறலாம்.

**அன்னை வெறியாட்டு எடுத்தல்**

தன் மகள் மேனி நாள்தோறும் மெலிவதைப் பார்த்து நற்றாய் (செவிலித்தாய்) கவலை கொள்கிறாள். தெளிவானக் காரணம் ஒன்றும் அவளுக்குத் தெரியவில்லை. முன்னோர்களின் வழி பின்பற்றும் தாயாதலின், இம்மெலிவு முருகனால் வந்தது என்று நம்பி முருகப் பூசை செய்யத் துணிந்தாள். வீட்டில் நல்லதோர் இடத்து நடுயாமத்துப் பூசையைத் தொடங்கினாள். முருகப் பூசாரி தினையை இரத்தத்தில் கலந்து எறிந்து முருகனைக் கூவி அழைப்பதும், வெறியாட்டு என்னும் ஆவேசக் கூத்தை ஆடுவதும், கழற்சிக்காயிட்டு நோய்க்கு முருகன் தான் காரணம் என்று கூறினான். பூசாரியின் வாய் மரபு வழக்கம் போல், இவள் முருகனால் தீண்டப்பட்டுள்ளால் என்று தாய்க்குக் தெளிவுப்படுத்தினான்.

**அறிஞர்களின் கருத்து**

களவு காலத்தில் இடம்பெறும் மற்றொரு செயல் வெறியாட்டு. அலரின் விளைவான இற்செறிப்பும், தலைவன் இரவில் தன்னைக் காணவரும் வழியிடையூறுகளும் தலைவியின் மனத்தை வருத்த அவள் உடலாலும் உள்ளத்தாலும் வேறுபடுகிறாள். தினைப்புனைக் காவலுக்கும், கடற்கரையில் விளையாடவும், மீன் உணங்கலைக் காக்கவும் வெளியேச் சென்ற தன் மகளை மலையுறை தெய்வமோ, கடல் அச்சுறுத்தி இருக்க வேண்டும் என்று ஐயம் கொண்டாள் தாய். அதனால் தங்கள் சமுதாய நம்பிக்கையின்படி வெறியாடும் வேலனையும் கழங்கினால் குறிக் கூறும் கட்டுவிச்சியையும் அழைத்துத் தன் மகளின் நோய்க்குரிய காரணத்தை அறிய முயல்கிறாள் என்று இரா.சண்முகம் குறிப்பிடுகிறார்.

தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ட தாய் அதைக் காதல் என அறியாமல் முருகன் வருந்துவதாகக் கருதப்பெற்ற தெய்வமான அணங்கால் வந்த நோயாகத் தவறாக உணர்ந்த முருகனின் பூசாரியான வேலனை அழைத்துக் களம் அமைத்துப் பொரி தூவி ஆடுபலி கொடுத்து நிகழ்த்தப்பெறும் சடங்கே வெறியாட்டு. இந்த வெறியாட்டு இளம்பெண்டிர், முதுபெண்டிர் எனும் இருவரின் இருவேறுபட்ட மனநிலைகளைக் காதல்நோய் எனும் இருவேறு புரிதல்களை வெளிப்படுத்தும் இயல்புடையதாக உள்ளது என பெ.மாதையன் வெறியாட்டு பற்றி விளக்கமளிக்கிறார்.

**காந்தள்**

தமிழ்நாட்டிலே இன்றும் பலவகைப்பட்ட தெய்வ வணக்கங்களையும், திருவிழாக்களையும் பார்க்கின்றோம். தெய்வத்தின் பிரதிநிதிகள் என்று சொல்லிக் கொண்டு கையில் வேல் சூலம் முதலிய ஆயுதங்களை ஏந்தி ஆவேசங்கொண்டு ஆடுகிறார்கள். இப்படி ஆடுகின்ற ஆவேசக்காரர்களின் மேல் தெய்வமே வந்து ஏறியிருப்பதாகப் பாமர மக்கள் நம்புகின்றார்கள். இவர்களிடம் மக்கள் தங்கள் குறைகளைச் சொல்லிப் பரிகாரம் கேட்கின்றார்கள். இது போன்ற நம்பிக்கைகளும் நிகழ்ச்சிகளும் தொல்காப்பிய காலத் தமிழர்களிடம் இருந்துள்ளன.

> **வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
> **வெறியாட்டு அயர்ந்த காந்தளும் (தொ.பொ.புறத்.63)**

வேலன் (முருகனைப் போல் கையில் வேல் பிடித்து ஆடும் படிமத்தனாகிய பூசாரி) வெறி ஆடிக் குறி கூறுவான். இத்தகைய சிறப்பினையுடைய கடிதானச் சொற்களைக் கூறும் வேலன் காந்தள் பூச்சூடி 'வெறியாட்டு' நிகழ்த்துவது 'காந்தள்' எனப்படும்.

**தலைவி கூற்றில் வெறியாட்டு**

> **கயறு தோழி கண்ணீர் துடைப்பின்**
> **வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் (தொ.பொ.களவு.109:22-23)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தலைவன் பொய்யாக மடலேறுவேன் என மருட்கும் போதும் தோழி கையற்றுத் தன் கண்ணீரைத் துடைக்கும் போதும் தாயர் தன் மகளின் நிலையினை அறிந்து வெறியாட்டு எடுப்பாள். இதனை அறிந்த தலைவி மிகவும் அச்சம் கொள்வதாகப் பாடல் வரிகள் நமக்கு புலப்படுத்துகிறது.

**செவிலி கூற்றில் வெறியாட்டு**

> **கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும்**
> **ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும் (தொ.பொ.களவு.113:3-4)**

வெறியாட்டு என்ன என்பதைப் பாடல் வரிகள் மூலம் எடுத்துக் காட்டுகிறார் தொல்காப்பியர். கட்டுப் பார்த்தல் என்பது கட்டுவிச்சி குறிக் கூறுதலாகும். அதாவது குறமகள் குறிப் பார்த்து கூறுவதாகும். கழங்கு என்பது கோடாங்கி அருள் வந்து ஆடிக் கழற்சிக்காயை உருட்டிக் குறிக் கூறுதலாகும். இவ்வாறாக வெறியாட்டு செவிலிக் கூற்றில் இடம் பெறுவதை அறிய முடிகிறது.

**பண்டையோர் நம்பிக்கை**

> **படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை**
> **நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென**
> **முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்**
> **களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி**
> **வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்**
> **துருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
> **முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள் (அகம்.22:5-11)**

வெறியாட்டினைச் சிறப்பாக எடுத்துக் கூறுவதால் இப்பாடலை பாடியவர் வெறிபாடிய காமக் கண்ணியார் என்றும் கூறப்படுகிறது. களவொழுக்கத்தில் தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டு பிரிந்தான். இதனை அறிந்த தலைவியின் உடல் வேறுபாடு கொண்டது. இதனை அறிந்த அன்னையானவள் 'இவள் முருகனால் வருத்தப்பட்டாள்' என்று கருதி வெறியாடும் வேலனை அழைத்து முருகனுக்கு வழிபாடு செய்தார்கள். இதனால் தலைவியின் துன்பம் நீங்கப் பெற்று நலம் பெறுவாள் என்பது பண்டையோர் நம்பிக்கையாகும் என்று அகநானூற்றுப் பாடல் வரிகள் நமக்கு தெரிவித்துள்ளது.

**வாச்சியங்கள் ஒலிக்க வெறியாட்டு**

> **முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்**
> **தோவத் தன்ன வினைபுனை நல்லி**
> **பாவை அன்ன பலராய் மாண்கவின்**
> ------------------------------------------------------
> -------------------------------------------------------
> **செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்**
> **வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்**
> **வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே. (அகம்.98:10-27)**

'முதுவாய் பெண்டிர்' தெய்வங்களை அழைத்துப் பாடுதலைச் செய்யும் கட்டுவிச்சியர் என்றும் கூறுவார்கள். பிரப்பு அரிசியைப் பரப்பி வைத்து முருகனால் ஏற்பட்டது என்றும் கூறுவார்கள். பல வாச்சியங்கள் ஒலிக்க பெரியப் பந்தலிலே வேலன், வெண்மையான பனந்தோட்டினைக் கடப்ப மலரோடு சூடி, இனிய பாடலினை தாளத்தோடு முருகக் கடவுளின் பெரும் புகழினைத் துதித்து, வெறியாடும் களத்தில் கைவீசி வெறியாட்டுதலைச் செய்வார்கள். வேலன் வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டுள்ளதால் வேலன் எனப்படும். இக்கருத்தினை 'வெறிபாடிய காமக்கண்ணியார் அகநானூற்றுப் பாடல் வழி விளக்கியுள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**வெறியாடும் களம் முல்லை மலர்**

**கேளாய் எல்ல தோழி வேலன்**
**வெறியயர் களத்துச் சிறுபல தாஅய**
**விரவுவீ உறைந்த ஈர்நறும் புறவின் (அகம்.114:1-3)**

வேலன் வெறியாடும் களத்தில் பல்வகைப் பூக்கள் பரவி கலந்துக் கிடப்பது போல முல்லை நிலத்தில் பல வகைப் பூக்கள் மலர்ந்து உதிர்ந்துக் கிடப்பது வெறியாடும் களம் போன்று அழகாக காட்சியளிக்கின்ற செய்தி அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் புலப்படுகிறது.

**வெறியாடும் களம் வேங்கை மலர்**

**நல்நாள் வேங்கைவீ நன்களம் வரிப்பத் (அகம்.133:4)**

அகநானூற்றில் வேங்கை மலர் பூத்து உதிர்ந்து பரவிக் கிடத்தல் நல்ல மணநாளைக் குறிக்கின்றன. மலர்கள் பரவிக் கிடக்கும் இடம் பார்ப்பதற்கு வெறியாடும் களம் போல அழகாகக் காட்சியளிக்கின்ற செய்தி உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகிறது.

**கடம்ப மாலை அணிந்த வெறியாட்டு**

**உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்**
**கடம்புங் களிறும் பாடி நுடங்குபு (அகம்.138:10-11)**

தலைவியின் மெய் வேறுபாட்டினைக் கண்ட செவிலி இனிய வாத்தியங்கள் முழங்க முருகக் கடவுளைத் தொழுது கடம்ப மரத்தினையும் களிற்றினையும் புகழ்ந்துப் பாடினார்கள். கடம்ப மாலையினை கையில் கொண்டு இரவு முழுவதும் அசைந்து அசைந்து வெறியாட்டு ஆடினார்கள் என்ற கருத்து 'எழூஉப் பன்றி நாகன் குமரனார்' பாடலின் கருத்துக்கள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

**மறியினை பலி கொடுத்த வெறியாட்டு**

**கமழிதழ் அலரி தாஅய் வேலன்**
**வெறியயர் வியன்களம் கடுக்கும் (அகம்.182:16-17)**

குரங்கு இனம் மரத்திற்கு மரம் தாவும் போது உதிர்ந்து கிடக்கும் மலர்கள் பார்ப்பதற்கு வேலன் வெறியாடும் களம் போன்று காட்சியளிக்கின்றன. வெறியாட்டு எடுக்கும் போது ஆட்டுக்குட்டியைப் பலியிட்டும் குரவைக் கூத்தாடியும் முருகனை வழிபடுவார்கள் என்ற செய்தி கபிலர் பாடல் மூலம் புலப்படுகிறது.

**குரவை ஆடி வெறியாட்டு**

**வியலறை வரிக்கும் முன்றில் குறவர்**
**மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்**
**ஆர்கலி விழவுக்களங் கடுப்ப நாளும்**
**விரவுப்பூம் பலியொடு விரைவுஇ அன்னை**
**கடியுடை வியனகர்க் காவல் கண்ணி**
**முருகென வேலன் தரூஉம் (அகம்.232:9-14)**

தலைவி தலைவன் மீது கொண்ட நட்பினால் உடல் வேறுபாடுக் கொண்டால் இதனை அறியாத அன்னையானவள் நாள்தோறும் பூக்களால் பூசைச் செய்து இல்லம் தெய்வத் தீங்கு நேரா வண்ணம் காத்து, வேலனை அழைத்து குரவைக் கூத்தாடி வெறியாட்டு எடுப்பாள் என்ற கருத்து 'கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகிறது.

**நிவேதனப்பொருள் கொண்ட வெறியாட்டு**

**அறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ**
**அறியா வேலன் தரீஇ அன்னை**
**வெறியயர் வியன்களம் பொலிய ஏத்தி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**மறியுயிர் வழங்கா அளவைச் சென்றியாம் (அகம்.242:9-12)**

நல்ல நிறங்கொண்ட மாந்தளிர் போன்ற அழகியப் பெண்மை நலத்தினையுடைய தலைவியின் உடல் மெலிவிற்கு காரணம் ஏனோ? என அறிந்த அன்னையானவள், தினை குறுணி அரிசி போன்ற நிவேதனப்பொருள்களையும்(பிரப்பு) ஆட்டுக்குட்டியையும் பலியாகக் கொடுத்து வேலனை அழைத்து, வெறியாட்டு களம் அமைத்து வெறியாட்டு நிகழ்த்துகிறாள் என்ற கருத்து புலவர் பேரிசாத்தனார் நமக்கு தெளிவுப்படுத்தியுள்ளார்.

**குளகு - மறி கொண்ட வெறியாட்டு**

**சிறுகுளகு அருந்து தாய்முலை பெறாஅ**
**மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி (அகம்.292:3-4)**

தலைவியின் வளையல் கழன்று விழுவதற்கானக் காரணத்தை அறிந்த அன்னையானவள் தாயின் முலைப்பால் கிடைக்கப்பெறாத தழையுணவை உண்ணக்கூடிய செம்மறியாட்டின் ஆட்டுக்குட்டியை பலிக் கொடுத்தும் மாலை மார்பில் அசையும் அளவிற்கு வெறியாட்டு நடைப்பெற்ற அவசியத்தை கபிலர் பாடல் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது.

**முருகனுக்கு வெறியாட்டு**

**கடம்புகொடி யாத்துக் கண்ணி சூட்டி**
**வேறுபல் குரல ஒருதூக் கின்னியம்**
**காடுகெழு நெடுவேட் பாடுகொளைக் கேற்ப**
**அணங்கயர் வியன்களம் பொலியப் பையத் (அகம்.382:3-6)**

கடம்ப மரத்தில் கொடிக் கட்டி, மாலை சூட்டி செந்தூக்கு என்னும் எழுவகைக் தூக்கினுள் ஒன்றினை மட்டும் பாடி குறிஞ்சிக் கடவுளாம் முருகனுக்கு வெறியாட்டு எடுத்து இல்லத்திற்கு தீங்கு வராது காத்தல் வேண்டும் என்று கபிலர் பாடல் வரிகள் நமக்கு உண்மையை எடுத்துக் கூறுகிறது.

**அன்னை வேடனை அழைத்தல்**

**சாந்தார் அகலமும் தகையும் மிகநயந்து**
**ஈங்குநாம் உழக்கும் எவ்வம் உணராள்**
**நன்னர் நெஞ்சொடு மயங்கி வெறியென**
**அன்னை தந்த முதுவாய் வேலன்**
**எம்மிறை அணங்கலின் வந்தன்று இந்நோய்**
**தணிமருந் தறிவல் என்னு மாயின் (அகம்.388:16-21)**

தலைவனது சந்தனம் பூசப்பெற்ற அழகிய மார்பினை தலைவி விரும்பினாள். தற்பொழுது தலைவி தலைவனைப் பிரிந்து மிகுந்த வருத்தத்துடன் துன்ப நிலையை அடைகின்றாள். இதனை அறியாத அன்னையானவள் முதுமை வாய்ந்த வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்துகிறாள். இவளை எம் இறைவனான முருகன் தீண்டப்பட்டுள்ளதாகவும் இத்தகைய நோயினைத் தீர்ப்பதற்கான மருந்து என்னிடம் உள்ளதாகவும் வேலன் தாயிடம் தெரிவிக்கிறார். இதனைக் கேட்ட அன்னையானவள் வெறியாட்டு எடுப்பதன் மூலம் தன் மகளின் இயல்பு நிலையினை மீண்டும் கொண்டு வர முடியும் என்ற நம்பிக்கையில் வெறியாட்டு எடுக்கிறாள். இக்கருத்தினை ஊட்டியார் அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்துகிறார்.

**முடிவுரை**

தலைவி தலைவன் பிரிவால் துன்பமடைந்து பசலை நோய்க்கு ஆளாகியும் இதனால் வளையல் கழன்று விழுவதும் உடல் மெலிதலுக்கும் ஆளாக்கப்படுகிறாள். வேற்றார் மணம் முடிக்க வருதலாலும் மிகவும் ஆழ்ந்த துன்பத்திற்கு ஆளாக்கப்படுகிறாள். தலைவன் இரவு நேரத்தில் கையில் வேலை ஏந்திக் கொண்டு தன்னை பார்க்க வருதல் களவொழுக்கத்தில் தலைவிக்கு மிகுந்த வருத்தத்தை தருகிறது. இதனை அறியாத அன்னையானவள் தன் மகளினைத் தெய்வம் தீண்டி தீங்குத் தருவதாகக் கருதி குறிஞ்சி நிலக் கடவுளான

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

முருகனுக்கு வெறியாட்டு எடுத்து இல்லத்தினை தீங்கு நேரா வண்ணம் காக்கும் படி பூசைச் செய்து வேண்டுகிறாள். இதன் மூலம் வெறியாட்டின் முக்கியத்துவத்தை இக்கட்டுரையின் மூலம் அறிந்துக் கொண்டோம்.

**துணைநூற்பட்டியல்**

1. அகநானூறு (தொகுதி-6) - நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ)களிற்றியானை நிரை, தமிழ்மண்பதிப்பகம், தியாகராயர் நகர், சென்னை-17. முதற் பதிப்பு - ஜுன்1953.
2. அகநானூறு (தொகுதி-7) - நாவலர் ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உ.ஆ)மணிமிடை பவளம், தமிழ் மண் பதிப்பகம், தியாகராயர் நகர், சென்னை-17. முதற் பதிப்பு - ஜுன்1953.
3. அகநானூறு (தொகுதி-8) - நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ) நித்தலக்கோவை, தமிழ் மண் பதிப்பகம், தியாகராயர் நகர், சென்னை-17. முதற் பதிப்பு - ஜுன்1953.
4. இலக்கண விளக்கம் - 4 பொருளியல், கே.இராஜகோபாலாச்சாரியார், ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேனி, சென்னை-5. முதற் பதிப்பு - அக்டோபர் 1997.
5. சங்க இலக்கியங்களில் வரைவு கடாதலும் அறத்தொடு நிற்றலும் - இரா.சண்முகம், சரவணா பதிப்பகம், வண்டியூர் அஞ்சல், மதுரை. முதற் பதிப்பு – நவம்பர் 1992.
6. சங்க இலக்கியத்தில் குடும்பம் - பெ.மாதையன், நியு செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், அம்பத்தூர், சென்னை. முதற் பதிப்பு - ஜீன் 2010.
7. தமிழ்க்காதல் - வ.சுப.மாணிக்கனார், சாரதா பதிப்பகம், ராயப்பேட்டை, சென்னை-14 ஆறாம் பதிப்பு - 2014.
8. தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை பகுதி-1, திருநெல்வேலி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. முதற் பதிப்பு - ஜுன் 1953.
9. தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை பகுதி-2, திருநெல்வேலி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. முதற் பதிப்பு - ஜுன் 1953.
10. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை – ந.சுப்புரெட்டியார், பாவை பப்ளிகேஷன்ஸ், இராயப்பேட்டை, சென்னை-14. முதற் பதிப்பு – மே 2012.
11. மக்கள் வாழ்வும் ஒழுக்கம்(தொல்காப்பியர்காலம்) - தமிழறிஞர் சாமி.சிதம்பரனார், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை – 5. முதற் பதிப்பு – மார்ச் 2011.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**மாலதி, ந.,** [2]**கோவிந்தராஜன், அ.** “வெறியாட்டு - தொல்காப்பியமும் அகநானூறும்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 74-81. டிஓஐ: 10.5281/zenodo.3628472.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Malathi, N.,** [2]**Govindarajan, A.** “Veriyattu - *Tholkappiyam* and *Agananooru*.” *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 74-81. DOI: 10.5281/zenodo.3628472.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# 'பெண்' கற்பிதத்தைப் பொதுமை செய்வோம்
# Making Portrayal of Women Equal

**முனைவர் ம. வித்யா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊற்றங்கரை.
**Dr.M.Vidya,** Assistant Professor of Tamil, Adhiyaman Arts & Science College For Women, Uthangarai.
ORCiD:https://orcid.org/0000-0001-9200-6925
**DOI: 10.5281/zenodo.3628483**

## Abstract

*The world history looks at woman slavery's from the foundation to foundation of every civilization. Our human society has spread so many different sithandhas yet, it has never realized the importance and need of women sithandhas. In the quest, Who is a woman? Is she a life? Soul? Body? Or feeling? Till now it is a question mark and we could not limitize the definition of woman because she is all in the world without her nothing exist. Old arts and scriptures describes only the beauty of women. At the moment, in society, what women writers are focusing on? What do they protest on? How does medaia depicts women in society? All of these factors are under debate and discussion. The subjects like History, philosophy, humanism, literature, art and culture should depict and describe women in different aspect to the change the world to be better from the past. Media and communication plays a vital role for this rapid and drastic change to strenthen women community. In such manner, this essay is written on the intention of generalizing the study on woman by denoting literary proofs of woman history from ancient to modern civilization.*

**Keywords:** Portrayal, Women, Women Equality.

### முன்னுரை

பெண் என்னும் தத்துவத்தை உலக வரலாறானது அடிமைத்தனத்தின் அடித்தளத்திலிந்தே காண்கின்றது. பல்வேறு சித்தாந்தங்களை உலகளவில் பரப்பிய நம் மனிதகுலம், பெண்ணிய சித்தாந்தத்தின் முக்கியத்துவத்தை உணரவில்லை. பெண் என்பவள் யார்? அவள் உயிரா? உடலா? உணர்வா? என்பது குறித்த சரியான வரையறையை இன்று வரை நம்மால் வரையறைக்கு உள்ளாக்க முடியவில்லை. பெண் இனத்தைத் தவிர வேறு எந்த ஜந்துக்களும் தன் இணையை தமது அடிமையாக நடத்துவதில்லை. என்னும் பெரியாரின் வாக்கிற்கு இணங்க பெண்ணிற்கு உலகின் ஏதோ ஒரு மூலையில் அநீதி இழைக்கப்பட்டு வருகிறது என்பது தெளிவு. இயற்கையிலிருந்தே மனிதகுலம் தோற்றம் பெற்றது என்பதை ஆராய்ந்தால் பெண்ணிற்கான கற்பிதங்களும் இயற்கையிலிருந்தே வருவிக்கப்பட வேண்டும் என்பது திண்ணம். அந்த வகையில் பெண் வரலாற்றை சிந்துசமவெளி முதல் நவீனம் வரை காணப்படுகின்ற இலக்கியப் பதிவுகளைச் சுட்டிக்காட்டி பெண்ணியத்தின் கற்பிதங்களைப் பொதுமையாக்கும் நோக்கோடு இக்கட்டுரை வரையப்படுகிறது.

### சிந்து சமவெளி நாகரிகம்

'சிந்து வெளியில் பெண் வடிவங்கள் மிகப் பலவாகக் கிடைத்துள்ளன. இவை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

போன்றவை பலுசிஸ்தானம் முதல் கிரிஸ் வரையில் உள்ள எல்லா இடங்களிலும் கிடைத்துள்ளன. எனவே பண்டை மக்கள் தமக்கு வேண்டிய எல்லா உணவுப் பொருள்களையும் உதவி வந்த தரையைப் பெண் தெய்வமாக வழிபட்டு வந்தனர் என்பது தெளிவாகிறது.' (Dr. Margons Pre- historic Man, p.250)

ஹரப்பாவில் கிடைத்த முத்திரைகள் ஒன்றில் தலைகீழாக நிற்கும் நிர்வாணமான பெண்ணொருத்தியின் கருப்பையிலிந்து செடியொன்று வளர்ந்திருப்பது போல் அமைக்கப்பட்டுள்ளது. (ஆ. சிவசிப்பிரமணியன், மந்திரமும் சடங்குகளும், ப.57) எனவே இயற்கை அளித்த கொடையான கருவுறுதல் என்பது பெண்களை மேல்நிலையாக்கம் பெறச்செய்து நிலவளத்தை அதிகரிக்கச் செய்யும் பூமியையும் பூமி தேவதையாக வணங்கப்பட்டது எனக் கருதுவதே ஆகச் சிறந்ததாகும். கால மாற்றத்தின் காரணமாக பூமி தேவதை வணக்கமே சக்தி வணக்கமாக மாறியது என்பது நாம் அறிந்ததே. வளமையின் குறியீடாகக் கன்னித் தெய்வமாக வணங்கப்பட்டு வந்த பெண் தெய்வங்கள் சிறுக சிறுக ஆண் தெய்வங்களோடு இணைத்து வணங்கப்பட்டன.

உலகக் கண்ணோட்டத்தோடு நோக்கும் போது பல்வேறு நாடுகளில் பெண் என்பவள் ஒரு போதைப் பொருளாகவும் உழைப்புச் சுரண்டலுக்காகவுமே பயன்படுத்தப் படுத்து வந்திருக்கிறாள். என்பதையும் சான்றுகளின் வாயிலாக அறியமுடிகிறது. ஆஸ்திரேலியா, ஆப்ரிக்கா, திபெத், போன்ற நாடுகளில் பெண்கள் அடிமைகளிலும் கடையராக நடத்தப்பட்டு வந்திருக்கின்றனர். கி.மு 66ல் அரேபியாவில் சகோதரர், சகோதரிகளையும் புத்திரர் தாய்மார்களையும் பெண்டாண்டுவந்ததாக ஸ்ட்ரோபா கூறுகிறார். வமிச விருத்திக்காக முறை கேடான புணர்ச்சி உலகம் முழுவதும் அனுமதிக்கப்பட்டு வந்தது. (பெரியார் இன்றும் என்றும் - பெரியாரின் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள் ப. 293-295)

சில இந்தியப் பழங்குடிகளில் திருமணத்திற்கு முன் மணமக்கள் பல நிலைகளில் பழகும் வாய்ப்பைப் பெறுகின்றனர். முரியா கோண்டுகள் இதனையும் கடந்து திருமணத்திற்கு முன்னரே அவரவர் விரும்பும் பெண்களுடன் உடலுறவு உட்பட அனைத்து வகையிலும் பழக அனுமதிக்கப் படுகின்றனர். இப்பழங்குடிகளிடையே இவர்களுக்காக இளையோர் கூட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன இது போன்ற பழக்கம் வேறுசில பழங்குடிகளிடமும் உள்ளன. (பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 353) மேலும் தாய்வழிச் சமூகமே மனித குலத்தின் தொடக்க நிலை என்று உறுதிப் படுத்த டைலர் 282 சமூகங்களில் தரவுகளைத் தொகுத்துப் பேறுகாலத் தனிமை முறையை சான்றாகக் காட்டுகிறார். பெண்கள் தங்கள் தலைப்பிரசவத்தைத் தாயகத்தில் வைத்துக் கொள்ளலாம் என்னும் மரபும், சாந்தி முகூர்த்தம் தாயகத்தில் நடக்க வேண்டும் என்னும் மரபும் தாய்வழிச் சமூகத்தின் எச்சக்கூறு.

**சேய்வழி அழைத்தல்**

குழந்தைகளின் பெயரை முன்வைத்து அவர்களின் பெற்றோரை அழைக்கும் முறை சேய்வழி அழைத்தல் எனப்படும். சேய்வழி அழைத்தல் முறையானது தாய்த்தலைமைக் குடும்பமுறையின் எஞ்சிநிலைத்தவையாக இன்றும் பல சமூகங்களில் காணப்படுகிறது. சேய்வழி அழைத்தலுக்கான குறிப்புகள் சங்க இலக்கியத்திலும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**அகுதை தந்தை (புறம். 67)**
**வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன் (புறம் 277).**

பகோபன் என்னும் மானிடவியல் அறிஞர் உருவாக்கிய கோட்பாட்டின் படி தொல்பழங்காலத்தில் கட்டுப்பாடற்ற பாலுறவு நிலவிய சமயத்தில் உலகளாவிய நிலையில் தாய்வழிச் சமுதாயமே நிலவியிருக்கும் என்றும், சொத்துரிமை தோற்றம் பெற்ற பின்புதான் தாய்வழிச் சமூகம், தந்தை வழிச் சமூகமாக மாறியது என்றும் கூறுகிறார். ஆதி பொதுஉடைமைச் சமுதாயத்தின் இறுதி நிலையில் தனியுடைமை முறை தோற்றம் பெற்றது. கிரேக்கம், ரோம், எகிப்து, பாபிலோன் போன்ற நாடுகள் தொன்மையான நாகரிக நாடுகள் என்றழைக்கப்படுகின்றன. இந்நாடுகளின் வளத்திற்கும், வளர்ச்சிக்கும் அடிமைகளின் உழைப்பே

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

மூலாதாரமாக அமைந்தது. மெசடோமியாவிற்கு அருகில் கி.மு 1792 -1750 வரை ஆண்ட ஹெமுமுராபி என்ற மன்னனால் பாபிலோனிய மக்களுக்கு வகுக்கப்பட்ட சட்டங்கள் அடங்கிய கல்வெட்டு ஒன்றைக் கண்டடைந்தனர். அதில் கடன் உள்ளவன் தன்னுடைய மனைவியையும், மகன் அல்லது மகளையும் மூன்று ஆண்டுகளுக்கு அடிமையாகக் கொடுக்க வேண்டும் என்று விதி குறிப்பிடப்பட்டுள்ளது. (ஆ. சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமைமுறை, ப.19.) உலகின் தொன்மையான நாகரீக நாடுகளில் நிலவிய அடிமை முறை தமிழகத்தைப் பொறுத்த வரை நிகழவில்லை. சாதிகளே இங்கு அடிமைமுறை தோற்றம் பெறுவதற்குக் காரணமாக அமைந்தது. இருப்பினும் கல்வெட்டுகள், இலக்கியங்கள், வெளிநாட்டு பயணியர் குறிப்புகள் இவற்றில் அடிமைகள் குறித்த தகவல்கள் கிடைக்கப்பெறுகின்றன.

**கொங்கு நாட்டில் அடிமைமுறை**

அடிமை வாணிபத்தில் ஈடுபட்ட போர்ச்சுகீசியர் குறித்து வெனான்சியஸ் என்னும் அறிஞர் பின்வருமாறு குறிப்பிடுகிறார். “ஆண், பெண் அடிமைகளை செம்மறி ஆடுகளைப் போல் வாங்கும் கொடிய பழக்கம் போர்ச்சுகீசியர்களிடம் இருந்தது. இளம் பெண்களை விலைக்கு வாங்கி அவர்கள் அனைவரையும் அனுபவித்து விட்டு, பின்னர் விற்று விடும் பழக்கம் போர்ச்சுகீசியர் பலரிடமும் இருந்தது. (Venantious Fernando.S., The Impact of the Portuguese Padroado on the Indian pearl Fishery coast , pg. 244)

நிக்கோலா வான்சிட்டா என்ற கத்தோலிக்கத் துறவி 1550 டிசம்பரில் சேசு சபையின் நிறுவனர் இக்னேயஸ் லயோலாவுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். அப்பாவி அடிமை இளம்பெண்களை அவர்களின் விருப்பத்திற்கு எதிராகச் சிறைபிடித்து அவர்களை அனுபவித்து விட்டு, இந்து மற்றும் இஸ்லாமிய வணிகர்களுக்கு விற்று விடும் வெறுக்கத்தக்க குற்றத்தை முத்துக் குளித்துறைப் போர்ச்சுக்கீசியர் மேற்கொண்டனர். (ஆ. சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமைமுறை, ப. 45) இதனை நோக்கின் தாய்வழிச் சமுதாயத்தில் கட்டுப்பாடற்ற பாலுறவில் ஈடுபட்டிருந்த போது தலைமைப் பொறுப்பை ஏற்ற பெண், சமுதாய மாற்றத்தால் அடிமையாக மாற்றப்பட்டு அதே புணர்ச்சிக்காக தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு இழிநிலையில் வைத்து பார்க்கப்படுகிறாள். ஆக சமுதாய மாற்றம், பொருளாதார மாற்றம், அரசியல் மாற்றம் என எம்மாற்றம் ஏற்படினும் பெண் தொடர்ச்சியாகப் புணர்ச்சிக்காக மட்டுமே உபயோகப்படுத்தப் படுகிறாள் என்பது புலனாகிறது.

**இலக்கியங்களில் பெண் குறித்த படிமம்**

சங்க இலக்கியங்களில் பெண் குறித்த படிமங்களை நோக்கும் போதும் பெண் பற்றி பெண் பேசிய மொழிகளும், ஆண் பேசிய மொழிகளும் பெண்ணின் உடலினை மையப்படுத்தியே பேசப்படுகிறது. முட்டுவேன் கொல், மோதுவேன் கொல் என்னும் ஔவையின் மொழிகளும், மாதவன் தன் வாய்ச்சுவையும், நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன் என்னும் ஆண்டாளின் மொழிகளும் கூட பெண்ணின் மனத்தை தாண்டி உடலினையே மையப்படுத்தும் நோக்கோடு பெண்ணிற்கான கற்பிதத்தை அவர்களையும் மீறி அவர்களின் உள்ளத்தில் பதிய வைத்தது. மேலும் இராமாயணம், மகாபாரதம் உள்ளிட்ட எல்லா புராணங்களும் பெண்ணின் பதிவிரதாத் தன்மையை கற்பு என்னும் வார்த்தையைக் கொண்டு அவளது உடலினையே மையப்படுத்தியது. பெண்ணின் உடலுக்கு கற்பு என்ற விலங்கு உருவாக்கப்பட்டதோடு அது காலங்காலமாகக் கடத்தப்படுவதும் நிகழ்ந்தது தான் அடிமைத்தன்மையின் உச்சம்.

**நாறிவரும் எச்சில்தனை நல்லமுது என்றும்**
**நண்ணுஞ்சளி நாசிதனை நற்குமிழ் என்றும்**
**கூறுவார்கள் புத்தியில்லாக் கூகை மாந்தர்**
**கோன் நிலையை அறியார் என்று ஆடாய் பாம்பே**

**(சித்தர் பாடல்கள், பாம்பாட்டிச் சித்தர் ப. 35)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

தெளிந்த ஞானம் பெற்றவர்கள் என்று நாம் கருதும் சித்தர்களும் கடவுளை அடைய வேண்டும் உடல் இச்சைக் கூடாது என்னும் ஞானத்தை கடத்துவதற்கு பதிலாக பெண்ணின் உடலை வஞ்சப் புகழ்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொண்டதை மறுக்க இயலாது.

**சிற்பக்கலைகளில் பெண்**

இலக்கிய வகைகளில் பெண்கள் தொடர்ந்து உடல் என்னும் பார்வையாலேயே பார்க்கப்படுவது ஒருபுறம் இருக்க நமது வரலாற்றினை உலகெங்கும் கடத்தும் கூறுகளாகச் செயல்படும் சிற்பங்கள் மற்றும் ஓவியங்கள் முதலியவற்றிலும் பெண் உடல் சித்தரிப்பே காணப்படுகிறது.

சிற்பத்தில் ஆணுக்குரிய உடலமைப்பு

- சிங்கத்தின் இடைபோன்று ஒருவனுக்கு இருந்தால் அவன் அரசனாவான்
- யானையின் தும்பிக்கை போன்ற புயங்கள் சிறந்தவை.
- யானையினுடையது போன்ற கண்களுள்ளவர்கள் மிகவும் பெருமை வாய்ந்தவர்கள்

பெண்ணுக்குரிய உடலமைப்பு அமையும் முறை

- தாமரைத் தண்டினுள்ளே இருக்கும் நூல் போல் மென்மையானதும் கொடி போன்றதுமான இடையினால் மனத்துக்கினிய தோற்றமளிப்பாள்.
- அன்னம் போன்ற சாயலுள்ளவள்

அதாவது வன்மையான விலங்குகளாகக் கருதப்படும் புலி, சிங்கம், யானை போன்றவற்றை ஆணுக்கும், மலர், கொடி, அன்னம் என மிருதுவான தோற்றமுடையவை எல்லாம் பெண்ணுக்கும் ஒப்புமைப்படுத்தப் படுகின்றன. (பெ. நிர்மலா, தமிழ்ப் பண்பாட்டில் பால் வேற்றுமைப் பதிவுகள், ப. 35)

இச்சிற்பங்கள் மூலம் பிரிவாற்றாமை, வெட்கம், அச்சம், சிருங்கால சேட்டைகள், எண்ணங்கள் மட்டுமே பெண்ணிற்குரியனவாகக் காட்டப்படுகின்றன. ஆணுக்கு ரௌத்திரம் போன்ற உணர்வுகள் காட்டப்படுகின்றன. காளி ரௌத்திரத்தோடு தொடர்புபடுத்தப் பட்டாலும் அவள் உக்கிரம் கொண்டவளாக ஊரின் எல்லையில் நிறுத்திவைக்கப்படுகிறாள். சாந்தசொரூபினியான பெண் மட்டுமே ஊருக்குள் வந்து பூசைகளை ஏற்றுக் கொள்கிறாள்.

**மதன நூல்களில் பெண்கள்**

> **அச்சமும் நாணமும் மடனும் முந்துறுதல்**
> **நிச்சமும் பெண்பாற் குரிய (தொல். பொருள்)**

என்று தொல்காப்பியர் பெண்ணிற்கு இலக்கணம் வகுத்தார். அதனை சிரசின் மேல் ஏற்றி இலக்கியங்களும், கலைகளும் புராணங்களும் தொடர்ந்து முன்னிருத்தி வருகின்றன.

> **ஆடவன் அந்த எண்ணத்துடன் தன்னை நெருங்கும் போது தானும் அதற்காக மனதில் ஏங்கியிருந்த போதிலும், இடங்கொடாமல் அவனிடமிருந்து விலகிச் செல்வாள். ஆனால் அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும் என்பது போல் ஆடவன் தொடர்ந்து முயன்றால் கடைசியில் அவள் இடங்கொடுத்து விடவே செய்வாள் இது இயல்பு.**
>
> **ஆணின் நிலையானது வேறு, அவனுக்கும் காம இச்சை எழுந்து ஒரு பெண்ணைச் சேர எண்ணும் பொழுது அது சரியா, தவறா என்றெல்லாம் சிந்தித்துப் பார்க்கிறான். ஒருக்கத்தைப் பற்றி எண்ணுகிறான். இப்படி சிந்தித்துப் பார்த்து முடிவு செய்யும் ஆண் மங்கை நல்லாள் எவ்வளவு மயக்கினாலும் தவறிவிட மாட்டான். (காமசூத்திரம் 112-113, முல்லை முத்தையா, 2000)**

இது போன்ற விடயங்கள் நமக்கு கூறவருவது என்ன? பெண் இயல்பாகவே நிலையான மனவலிமை அற்றவள் என்பதைத் தானே? ஆகவே, பின் தூங்கி முன் எழுவது, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, மற்றும் அன்பிலே தாசி, ஏவலிலே அடியாள், அழகிலே திருமகள்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

படுக்கையில் வேசி முதலான பல்வேறு பண்புகளை தமிழ்ச்சமூகம் இன்றுவரை மரபு என்னும் மனச்சிறையில் கருவூலமாக காத்துவருகிறது.

**வளர்ந்து வரும் சமூகம்**

புராணங்களும், கலைகளும், பண்பாடும் தனது பங்கிற்கு தனது கடமையை ஆற்றிய பிறகு வளர்ந்து வரும் சமூகமாவது பெண் கற்பிதத்தை மாற்ற முயலுமா என எண்ணின் அதுவும் பெண்ணை கேலிப்பொருளாகச் சித்தரிப்பது புலப்படும். தற்போதைய பெண்ணிய எழுத்தாளர்கள் எழுதி வரும் எழுத்துக்கள் எதை எதிர்கின்றன? சுகிர்தராணி, குட்டிரேவதி போன்ற இளம் எழுத்தாளர்கள் பதிவு செய்வதை எதை? பெண் உடலை ஆணால் மட்டும் தான் பதிவு செய்ய இயலுமா? என் உடலை நான் பேசுகிறேன் என தானே தன் உடலை அள்ளிக் காட்டுகிறார்கள். இதுதான் பெண்ணா?

மேலும், வெகுவேகமாக வளர்ச்சியை எட்டிவரும் ஊடகங்கள் தம் பங்குக்கு செய்து வரும் பணி என்ன? பெண்ணின் உடல் அன்றி ஒரு அணுவும் அசையாது என்பதை மெய்பிக்கும் பணியையா? ஆம் எனில் அது மிகையல்ல.

**முடிவுரை**

வரலாறு, சமூகம், மானிடவியல், இலக்கியங்கள், பண்பாடு, கலைகள் ஆகிய துறைகள் இதுகாலம் பெண் என்னும் கற்பிதத்தையும், சித்தரிப்பையுமே செய்து வந்திருக்கின்றன. உண்மையில் பெண் என்பவள் யார்? என்னும் கேள்விக்கான பதில் ஆணாதிக்கத்தின் பார்வையிலேயே கணிக்கப்பட்டுள்ளது என்பதை பல்வேறு உதாரணங்களோடு இக்கட்டுரை பேசுகிறது. ஆணின் கண் கொண்டு மூளைச் சலவை செய்யப்பட்ட இந்த விளக்கங்கள் இருக்கட்டும். உண்மையாகவே பெண் யார்? என்னும் கேள்விக்கான பதில் இன்றளவும் வெற்றிடமாகவே இருக்கிறது. அப்படியே விளக்கம் இருப்பினும் அவ்விளக்கம் உலகபெண்ணினத்திற்கே பொதுமையை வழங்குவதாக இருக்க வேண்டும் என்னும் விழைவோடு இக்கட்டுரை முற்று பெறுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. தொல். பொருள்.
2. புறநானூறு, என்.சி.பி.எச், 2004, சென்னை.
3. பெரியார் இன்றும் என்றும் - பெரியாரின் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள், விடியல், 2017.
4. ஆ.சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமைமுறை, காலச்சுவடு, 2005.
5. ஆ.சிவசிப்பிரமணியன், மந்திரமும் சடங்குகளும், காலச்சுவடு, 1988.
6. சித்தர் பாடல்கள், பாம்பாட்டிச் சித்தர், கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2014.
7. பெ.நிர்மலா, தமிழ்ப் பண்பாட்டில் பால் வேற்றுமைப் பதிவுகள், பல்கலைப் பதிப்பகம், சென்னை, 2009.
8. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 1990.
9. Dr. Margons Pre- historic Man, p.250.
10. Venantious Fernando.S., The Impact of the Portuguese Padroado on the Indian pearl Fishery coast, pg. 244.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**வித்யா, ம.** "'பெண்' கற்பிதத்தைப் பொதுமை செய்வோம்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 82-87.
டிஓஐ: 10.5281/zenodo.3628483.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# அறம் எதிர்நோக்கும் பாவேந்தர் அறம் கண்ட சீத்தலைச் சாத்தனார்
# Justice Foreseen by Paventhar Justice Seen by Sathanar

[1]**மா.விஜயலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[1]**M.Vijayalakshmi,** Ph.D. Research Scholar, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0002-8003-1522
[2]**முனைவர் அ.கோவிந்தராஜன்,** உதவிப்பேராசிரியர் (அ) இயக்குநர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்பலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[2]**Dr. A. Govindarajan,** Assistant Professor of Tamil & Director, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0002-1237-8962
**DOI: 10.5281/zenodo.3628487**

## Abstract

*Tamil Society is a one with rich cultural past to the present. The rational ideas of them are seen through many ages. It seems a great wonder that a merchant of Rice. Corn and Cereals proved himself a great poet and wrote a great epic 'Manimegalai'. It is the great Tamil poet Saathanar. His writings holds a social message with philanthrophic ideas. Hunger and poverty evades shyness and makes one to beg at the gates of others with his wife and children.This has been understood best by him on those times. Saathanar wrote 'Manimegalai' with the most important idea of erradicating hunger. Buddha preached on the evils of untouchability, To him there is no disparity as a chandala and a brahmin by birth.Only the 'Good Habits' and 'Behaviour' determine the individual. 'Manimegalai' is written on the Buddha's principles and emphasizes these ideas. All sorts of partialities lead people to become nuclear and evil. The social evils were condemned by the ancient Tamil writers and Sattanar also shows rationale to the society against the oppression of the Aryan way of partiality in all sides. Like him, Pavendhar Bharathidasan also shows the domination and partial laws thrusted on the Tamil people by the Aryan rulers. Both had the same view on social vices. Hence, the article focuses on a comparative mode to find out the sililarities, in poetic diction and the theme of solidarity in bringing compassion and justice.*

**Keywords:** Poet, Saathanar, Manimegalai, Buddha, Education

**முன்னுரை**

ஒரு தானிய வணிகன் பெருங்கவிஞனாய் விளங்கியது பெருங்காப்பியம் ஒன்றைப் படைத்தான் என்பதும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. மணிமேகலையைப் படைத்த சாத்தனாரே நம் வியப்பிற்குரிய பெருமகனார். பிடித்த கல்விப் பெரும்புணைப் போக்கி, நாணத்தை நீக்கி, மனைவியோடு பிறன் கடைவாயில் சென்று நிற்க வைக்கும் பசியின் அருமை சரியாகத் தானிய வணிகா்களுக்குத்தான் தெரியும். எனவேதான் பசிப்பிணியைப் போக்கும் முதன்மைக் கருத்தை மையமாக வைத்து மணிமேகலையைச் சாத்தனார் பாடியருளினார்.

சாதிப்பிரிவினை எதிர்த்து மக்கள் அனைவரும் சமம் என்று போதித்தவர் புத்தர். பிறப்பால் சண்டாளர்கள் என்றும் பிராமணர் என்றும் இருக்க முடியாது, ஒழுக்கமே மக்களுக்கு உயர்வு தாழ்வை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

உண்டாக்கும் என்று அவர் கூறினார். புத்தக் கோட்பாடுகளுக்காக எழுதப்பெற்ற மணிமேகலை இக்கருத்துக்களை வலியுறுத்துக்கிறது.

வேள்விக்குத் தானம் கொடுப்பது உயர்ந்தது என்றும் வேள்வி செய்வதால் தான் உலகம் நிலைபெற்று இருக்கிறது என்றும் கூறும் ஆரியக் கருத்துக்கு எதிராக,

**மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**

**(மணிமேகலை.பாத்திரம் பெற்ற காதை.11-11)**

என சாத்தனார் முழக்கமிடுகிறார்.

**ஆன்மகன் அசலன் மான்மகன் சிருங்கி,**
**புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்றும்**
**நரிமகன் அல்லனோ கேச கம்பளன்**
**ஓங்குயர் பெருஞ்சிறப்பு உரைத்தலும் உண்டால்**
**ஈங்கிவர் நுங்குலத்து இருடி கணங்கள்**

**(மணிமேகலை.ஆபுத்திரன் அறிவித்த காதை.13-11)**

என ஆபுத்திரனைப் பேச வைத்து, பிறப்பால் உயர்வு தாழ்வு பார்க்கும் ஆரியக் கொள்கைக்குச் சாட்டையடிக் கொடுக்கிறார் சாத்தனார்.

இரண்டாம் நூற்றாண்டில் தன்னிகரற்றக் கவிஞராக விளங்கியவர் சாத்தனார். இருபதாம் நூற்றாண்டில் தனிப்பெருங்கவிஞராகத் திகழ்ந்தவர் பாரதிதாசன். ஆரிய எதிர்ப்புக் கொள்கை, சாதி ஒழிப்புக் கொள்கை முதலானவற்றில் இருவரும் ஒற்றைக் கருத்தினைக் கொண்டிருந்தனர்.

சாத்தனாரின் மணிமேகலையை அடியொற்றி பாவேந்தர் மணிமேகலை வெண்பாவை இயற்றியுள்ளார். இந்த இரு நூல்களுக்குமிடையே காணப்படுகின்ற அறத்தை வேற்றுமைகளில் பிரித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

மணிமேகலை அகவல் யாப்பில் அமைந்தது. ‘விழாவறை காதை’ முதல் ‘பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை’ ஈறாக முப்பது காதைகளைக் கொண்டது. ஆனால் பாவேந்தரின் மணிமேகலை வெண்பா காதை பிரிவுகளின்றி 288 வெண்பாக்களால் அமைந்துள்ளது. ஓர் இன்னிசை வெண்பாவையும் மற்றவை நேரிசை வெண்பாவையும் பெற்றிருக்கிறது.

**காதையும் பாடற்பகுதியும் அமைந்துள்ள முறை**

மணிமேகலையில் அமைந்துள்ள பதிகம் மணிமேகலை வெண்பாவில் அமையப் பெறவில்லை. மணிமேகலையில் அமைந்துள்ள “விழாவறைக்காதை” யின் செய்திகள் பாவேந்தரின் மணிமேகலை வெண்பாவில் முதல் பன்னிரண்டு பாடல்களில் அமைந்துள்ளது.

ஊரலர் உரைத்த காதையின் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் 13 - ஆவது பாடலில் இருந்து 20 - ஆவது பாடல் வரை அமைந்துள்ளது. 21 - ஆவது பாடலில் இருந்து 31- ஆம் பாடல் வரை “மலர்வனம் புக்க காதை”யின் கருத்துக்கள் மணிமேகலை வெண்பாவில் இடம்பெற்றுள்ளன.

மணிமேகலையில் உள்ள “பளிங்கறை புக்க காதை” யின் நிகழ்ச்சிகள் 38 - ஆம் பாடலில் இருந்து 64 - ஆம் பாடல் வரை மணிமேகலை வெண்பாவில் தரப்பட்டுள்ளது.

65 - ஆம் பாடலில் இருந்து 75 - ஆம் பாடல் வரை “மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை” யின் கருத்துக்கள் மணிமேகலை வெண்பாவில் சித்தரிக்கப்பட்டுள்ளன.

புரட்சிக் கவிஞரின் மணிமேகலை வெண்பாவில் 76 - ஆம் பாடலில் இருந்து 83 - ஆம் பாடல் வரை “சக்கரவாளக் கோட்டம்” தரும் செய்தி இடம் பெற்றுள்ளது. 84 - ஆம் பாடலில் இருந்து 88 - ஆம் பாடல் வரை “துகில் எழுப்பிய காதை”யின் கருத்துக்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன.

“மணிபல்லவத்து துயறுற்ற காதை” கூறும் செய்திகள் 85 – 95 ஆம் பாடல்கள் வரை மணிமேகலை வெண்பாவில் அமைந்துள்ளது. “பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை” தரும் கருத்துக்கள் மணிமேகலை வெண்பாவில் முழுமையாக விடப்பட்டுள்ளது.

99 - ஆம் பாடலில் இருந்து 102 - ஆம் பாடல் வரை “மந்திரம் கொடுத்த காதை” யின் செய்திகள் வரையப்பட்டுள்ளன.

மேகலையில் அமைந்துள்ள “பாத்திரம் பெற்ற காதை” தரும் தகவல் மணிமேகலை வெண்பாவில் 103 - 117ஆம் பாடல் வரை சித்தரிக்கப்பட்டுள்ளது. மணிமேகலை வெண்பாவில் 118 - 119ஆம் பாடல்கள் “அறவாணர்ந்தொழுத காதை”யில் உள்ள கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

“ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை” “பாத்திர மரபு கூறிய காதை” கூறும் நிகழ்ச்சிகள் மணிமேகலை வெண்பாவில் 120 - ஆம் பாடலில் இருந்து 125 - ஆம் பாடல் வரை அமைக்கப்பட்டுள்ளன.

மணிமேகலை வெண்பா 126 – 129 ஆம் பாடல்கள் “பாத்திரம் கொண்டு பிச்சை புக்க காதை” வழங்கும் செய்திகளைத் தருகின்றன. “ஆதிரை பிச்சையிட்ட காதை” கூறும் கதை நிகழ்ச்சிகள் 130 – 131 ஆம் வெண்பாக்களில் தரப்பட்டுள்ளன.

134 - 147 வரை உள்ள வெண்பாக்கள் மேகலை கூறும் “உலக அறவி புக்க காதை” வழங்கும் கருத்துக்களைத் தருகின்றன.

“உதயகுமரன் அம்பலம் புக்க காதை”யில் வரும் கதைக்கூறுகள் மணிமேகலை வெண்பாவில் 148 - ஆம் பாடலிலிருந்து 170 - ஆம் பாடல் வரை சித்தரிக்கப்பட்டுள்ளன. பாவேந்தர் நூலில் 171 - ஆம் பாடலிலிருந்து 184 - ஆம் பாடல் வரை சாத்தனார் நூலின் சிறைக்கோட்டம் அறைக்கோட்டமாக்கிய காதையின் கருத்துக்கள் அமைந்துள்ளன.

மணிமேகலை வெண்பாவில் 185 - ஆம் பாடலிலிருந்து 206 - ஆம் பாடல் வரை மணிமேகலையின் உதய குமாரனைக் காஞ்சனன் வாளால் எறிந்த காதையின் கதை நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

“கந்திற் பாவை வருவதை உரைத்த காதை” கூறும் நிகழ்ச்சிகள் 207 மற்றும் 208ஆவது பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன.

மணிமேகலை வெண்பாவில் 209 முதல் 224 வரை “சிறை செய்த காதை” கூறும் தகவல்கள் இடம் பெற்றுள்ளன. மணிமேகலை வெண்பாவில் உள்ள 225 - ஆம் பாடலிலிருந்து 262 - ஆம் பாடல் வரை சிறை வீடு காதையின் செய்திகள் தரப்பட்டுள்ளன.

மணிமேகலையில் உள்ள “ஆபுத்திரன் நாடடைந்த காதை” தரும் தகவல்களை மணிமேகலை வெண்பாவில் உள்ள 263 - ஆம் பாட்டு முதல் 268 - ஆம் பாட்டு வரை அமைந்துள்ளன.

ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை, வஞ்சி மாநகர் புக்க காதை, “சமய கணக்கர் தம் திறம் கேட்ட காதை” “கச்சி மாநகர் புக்க காதை”, “தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை”, “பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை” ஆகிய ஆறு காதைகளின் நிகழ்ச்சிகள் மணிமேகலை வெண்பாவில் இடம் பெறவில்லை.

மணிமேகலை காப்பியத்திற்கும் பாவேந்தரின் மணிமேகலை வெண்பா விற்கும் இடையே நிறைய வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவை நீக்கல், சேர்த்தல், மாற்றல் எனும் மூவகையில் அமைந்துள்ளன.

**நீக்கல் (Removal)**

**பகுத்தறிவுக்குப் புறம்பானவற்றை நீக்கல்**

மணிமேகலையில் காணப்படுகின்ற பகுத்தறிவிற்கு ஒவ்வாத பலவற்றைப் பாவேந்தர் தம் மணிமேகலை வெண்பாவில் முற்றிலுமாக நீக்கியுள்ளார்.

மணிமேகலை கூறும் இந்திர விழா கொண்டாடுவதற்கான காரணம், தொடிதோட் செம்பியன் இந்திரனை வேண்டுதல், இந்திரன் இணங்குதல், 28 - நாள் விழா பற்றிய செய்திகள் ஆகியன மணிமேகலை வெண்பாவில் நீக்கப்பட்டு உள்ளன.

“ஊரலர் உரைத்த காதை” கூறும் மூவகைப் பத்தினிப் பெண்டிர் பற்றிய செய்தி ‘மலர்வனம் புக்க காதை’யில் வரும் சுதமதி தன் வரலாற்றைக் கூறுதல், இளவந்திகை வனம், அரசர்க்குரியது எனும் செய்தி உய்யவனத்தைப் பூதம் காத்தல், சம்பாவதி வனம், உவவனத்தில் கட்டப்பட்ட பளிங்கு மண்டபம், தாமரை பீடிகை, பித்தன் செயல், பேடிக்கூத்து, சுவர் ஓவியம் காணல், முருகன் விழா ஆகிய செய்திகள் மணிமேகலை வெண்பாவில் விடப்பட்டுள்ளன.

மணிமேகலா தெய்வம் சக்கரவாளா கோட்டக் கதை சொல்லல், சார்ங்கலன் சுடுகாடு சென்று அஞ்சி இறத்தல், அவன் தாய் சம்பாபதியிடம் தன் உயிர் கொண்டு மகன் உயிரை ‘திருப்பித்தா’ என வேண்டல், சம்பாபதி அனைத்து தெய்வத்தையும் அழைத்தல், கோதமை உயிர் விடல், சக்கரவாளக் கோட்டம் எனும் பெயர் வழங்கல் ஆகிய “சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை”யில் வரும் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் இடம்பெறவில்லை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 
Available at: www.ijtlls.com

"சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை" கூறும் சுடுகாட்டுக் காதை அமைப்பு வாயில்கள் காடு கிழவோள் கோயில், புதைக்கும் முறை, ஈமப் புறங்காடு, வெள்ளி மன்றம் முதலான மன்றங்கள் பெண் உறுப்புகளை விலங்குகள் தின்னல், பேய்மகள் பெண்ணின் தலையைப் பிய்த்துத் தின்னல் ஆகிய செய்திகளும் மணிமேகலா கூறிய கதைக்கு மக்கள் வாழ்க்கை இத்தகையது எனக் கூறலும் மணிமேகலை வெண்பாவில் தவிர்க்கப்பட்டுள்ளன.

சுதமதி உலகஅறவியை அடைதல், தெய்வப்பாவை அவளின் முற்பிறப்பையும், தாரை, வீரை, இலக்குமி போன்றோர் பிறப்பை இயம்பில், ஏழு நாள் கழித்து மணிமேகலை இந்நகர் வருவாள் என்று இயம்புதல் ஆகிய "துயில் எழுப்பிய காதை"யின் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் ஒதுக்கப்பட்டுள்ளன.

"துயில் எழுப்பிய காதை"யில் மணிமேகலைக்குப் பெயர் சூட்டிய சூழலும், மாதவி கனவும் பேசப்படுகின்றன. இவை மணிமேகலை வெண்பாவில் இடம்பெறவில்லை.

"மணிபல்லவத்து துயறுற்ற காதை" குறிப்பிடும் காதை" குறிப்பிடும் புத்த பீடிகை, பழம்பிறப்பை உணர்த்தும் தன்மையது. அங்குள்ள பறவை சிறகொலி செய்ய என்பதும் பாவேந்தரின் படைப்பில் விலக்கப்பட்டுள்ளது.

"பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை"யில் வரும் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் முற்றிலும் நீக்கப்பட்டுள்ளன.

"மந்திரம் கொடுத்த காதை"யில் இடம்பெற்றுள்ள மணிமேகலை தெய்வத்திடம் தன் கணவன் வரலாற்றை வினாவுதல், சாதுசக்கரனுக்கு உணவளித்தல், இராகுலன், தாரை, வீரை இப்பிறவியில் யாரென மணிமேகலை தெய்வம் கூறல், மணிமேகலை விண்வழி செல்வதற்கும், மணிமேகலா தெய்வம் மந்திரம் ஓதல் ஆகிய செய்திகள் மணிமேகலை வெண்பாவில் இடம்பெறவில்லை.

தீவதிலகை மணிப்பல்லவத்தைக் காத்து வருதல், அமுதசுரபி தோன்றும் நாள் மணிமேகலை புத்த பீடிகையைத் தொழுதல், அமுதசுரபி கிடைத்தல், முற்பிறப்பில் சாதுசக்கர முனிவனுக்கு உணவளித்ததன் விளைவே இப்பாத்திரம் கிடைத்தது என்று கூறல், விசுவாமித்திரன் நாயூன் தின்னல், மணிமேகலை வான்வழியாகச் செல்லுதல் ஆகிய பாத்திரம் பெற்ற காதையின் செய்திகள் புரட்சிக்கவிஞரின் படைப்பில் இடம்பெறவில்லை.

குடி மயக்கத்தால் வீரை இறக்க, தாரை நிலா முற்றத்தில் வீழ்ந்து இறந்த செய்தியும் புத்த ஞாயிறு தோன்றும்போது ஊரில் நடக்கும் இன்செயல்கள் பற்றிய குறிப்பும் மாதவி, சுதமதி பாத பங்கையை மலரை வணங்கியதால் வினை நீங்கி விட்டு நெறியைப் பெறுவர் எனும் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் விளக்கப்பட்டுள்ளன.

"உலக அறவி புக்க காதை" கூறும் மணிமேகலை உலக அறவியை அடைந்து மும்முறை வலம் வந்தபின் கந்திற் பாவையின், சம்பாவதியையும் வணங்கிய செய்தி மணிமேகலை வெண்பாவில் இடம்பெறவில்லை.

"உதய குமாரன் அம்பலம் புக்க காதை"யில் இடம்பெற்றுள்ள யாமத்தில் மணிமேகலா தெய்வம் வந்து தோன்றி அறிவுரை புகட்டியச் செய்தி பற்றி உதயகுமாரன் கூற்றும் அக்கூற்றைச் செவிமடுத்த சித்திராபதி, தேவர்கள், காமக்கள் மாந்தி மயங்கியமை பற்றியும், இந்திரன் ஆயிரம் கண்ணன் ஆனது பற்றியும், அங்கு வானவன் காமம் பற்றியும், எடுத்தியம்பலும், காயசண்டிகை உருக்கொள்வதற்கு முன் மணிமேகலை சம்பாபதியை வணங்குதல் ஆகிய கதைப் பகுதிகள் மணிமேகலை வெண்பாவில் ஒதுக்கபட்டுள்ளன.

ஓவியங்களில் இடம்பெற்றுள்ள தெய்வம் பேசல், உதயகுமாரன் வியப்பும், சிறைக்கோட்டத்தை அறக்கோட்டமாக்கிய காதையின் நிகழ்ச்சிகள், புரட்சிக் கவிஞரின் படைப்பில் விடப்பட்டுள்ளன.

"கந்திற்பாவை வருவது உரைத்த காதை"யில் உதயகுமாரன் வடிவத்தை நோக்கி மணிமேகலை புலம்பல், அவ்வுருவினை நோக்கிச் சென்ற மணிமேகலையைக் கந்திற் பாவை செல்லாதே எனத் தடுத்தல்.

மணிமேகலை தன் முற்பிறப்புக் கணவன் இத்தகு நிலைமை அடைவதற்குக் காரணம் கேட்டல், கந்திற்பாவை கூறுதல், தன்னால் மணிமேகலைக்கு நடக்கப்போவதை முன்னரே கந்திற்பாவை மொழிதல், கந்திற்பாவை தன் வரலாறு கூறுதல், மணிமேகலையின் அடுத்த பிறப்பைப் பற்றி மொழிதல், மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்திற்குத் தூக்கிச் சென்றதற்கானக்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

காரணம் கூறல், நாத்திகனை வஞ்சியில் எதிர்ப்பாய் என்று மணிமேகலையிடம் கூறல் ஆகிய செய்திகள் மணிமேகலை வெண்பாவில் விளக்கப்பட்டுள்ளன.

மாருதி எனும் பார்ப்பனத்தி சதுக்க பூதத்திடம் முறையிடுவதும், பூதம் தெய்வப் புலவர் சொல் ஓர்க எனக் கூறலும் மணிமேகலை வெண்பாவில் இடம்பெறவில்லை.

“சிறைவி காதை”யில் சீர்த்தியை நோக்கி மணிமேகலை கூறுவதாக அமைந்துள்ள செய்தி மணிமேகலை வெண்பாவில் சித்தரிக்கப்படவில்லை.

தேவர் கோன் சாபத்தால் ஊர்வசி மாதவியாகப் பிறந்தாள் என்பதும் இந்திரவிழா நடைபெறாவிட்டால் நகர் அழியும் என்பதும் மணிமேகலையை உதயகுமாரனின் கூற்று என்று ஊரார் கூறுவர் ஆகிய “ஆபுத்திரன் நாடடைந்த காதை”யின் செய்திகள் மணிமேகலை வெண்பாவில் அமையப்பெறவில்லை.

காஞ்சி மாநகர் புக்க காதையில் அமைந்துள்ள காஞ்சியை மணிமேகலை அடையும் முன்னரே மன்னர் எதிர்கொண்டு வரவேற்பான் எனும் தெய்வத்தின் கூற்றும், காஞ்சியில் மணிமேகலை புத்தபீடிகை கோமுகி பொய்கை ஆகியவற்றைக் காண்பாள் எனும் செய்தியும் மணிமேகலை வெண்பாவில் நீக்கப்பட்டுள்ளது.

**இயக்கக் கொள்கையால் விளைந்த நீக்கம்**

சிவபெருமான் முதலாக, பூத சதுக்கம் ஈறாக வழிபாடு செய்ய வேண்டுதல், சமயவாதிகள் பட்டி மண்டபம் ஏறுதல், தொடிகழற் கிள்ளியின் தம்பி இளங்கிள்ளி கட்டிய புத்தக் கோயிலைத் தரிசித்தல் ஆகியவற்றைக் கடவுள் மறுப்பு, சமய மறுப்பு எனும் தாம் சார்ந்த இயக்கக் கொள்கையால் நீக்கி மணிமேகலை வெண்பாவை பாவேந்தர் புனைந்துள்ளார்.

**தமிழர் நலம் கருதி நீக்கல்**

வாயிற்காப்போன் வாழ்த்துதலில் இடம்பெற்றுள்ள சோழ மன்னன், சேர பாண்டிய மன்னர்களைத் தோற்கடித்த செய்தி தமிழர் ஒற்றுமையை வலியுறுத்த வேண்டி மணிமேகலை வெண்பாவில் அமைக்கப்பெறவில்லை.

**2. சேர்த்தல் (Additions)**

பாவேந்தர், மணிமேகலை வெண்பாவில் கதைத் தொடர்புக்காகவும், கதைத் தெளிவிற்காகவும் மணிமேகலையில் இல்லாத புதியனவற்றைப் புனைந்துள்ளார்.

**தனிப்பார்வை**

கள் குடிப்போன் மணிமேகலையை நினைத்தல், மணிமேகலையின் துறவு கண்ட மக்களின் இரக்கம், மணிமேகலையைத் தேரில் ஏற்றி வரச் செல்லும் உதயகுமாரன் கண்களுக்கு வழியெல்லாம் மணிமேகலையின் தோற்றம், உதயகுமாரன் இறந்தவுடன் மன்னர் காட்டும் உணர்வு, மணிமேகலை ஆண் வேடம் பூணாமல் இயற்கையாகப் பெண் உருவுடன் காஞ்சி செல்லுதல், காஞ்சி மக்களின் நன்றி உணர்வு ஆகியன பாவேந்தரின் தனிப்பார்வையால் மணிமேகலை வெண்பாவில் சேர்க்கப்பட்டவையாகும்.

**கதைத்தெளிவு**

உதயகுமாரனை நாடி தன் மனஉணர்வுகள் செல்வதை உணர்ந்த மணிமேகலை, “கிணற்றில் விழுந்தான் என்ற ஒலியையும், அதிலிருந்து மீளத் துடிக்கின்றான் என்ற ஒலியும் ஒரே நேரத்தில் கேட்பன போல” என் மனம் அவன்பால் செல்ல விளைகின்றது எனக் குறிப்பிடும் உவமைப் பகுதி, பொன்னன் எனும் புதிய பாத்திரம், சீர்த்தியின் மகன் இறந்தது எனக்குத் துன்பம். என்னைச் சிறை வைத்தது எனக்கு மகிழ்ச்சி என மணிமேகலை கூறல், காஞ்சி மன்னனுக்கு மணிமேகலை வரவு குறித்து அறவணர் உரைத்தல், மணிமேகலையின் உருவழித்தோற்றத்தைக் கண்டு உதயகுமாரன் புலம்புதல், சித்திராபதி வருதல், அவன் காதல் உணர்விற்குத் தூபமிடுதல் ஆகியன மணிமேகலை வெண்பாவின் செய்திகள் மணிமேகலையில் இல்லாதவையாகும்.

அமுத சுரபியைக் கண்டு பிச்சையிட்டவர்கள் பின்பு அஃது இருக்கும் இடம் வந்து பிச்சையிடலானார்கள் என்றும் “ஈதல் அமுதசுரபிக்கு ஈதல் தான்” என்றும் “ஐயம் ஏற்கும் மணிமேகலை அறமே செய்கிறாள்” என்றும் மணிமேகலை வெண்பாவில் இடம்பெற்றுள்ளவை மூல நூலில் இல்லாதக் கருத்துகளாகும்.

**இருபதாம் நூற்றாண்டுப் பார்வை**

35 - ஆம் வெண்பாவில் முதலாளித்துவத்தைச் சாடுதல், 141 - ஆம் பாடலில் பெண்ணுரிமை வலியுறுத்தல் 181 - ஆம் பாடலில் கல்வி தான் எல்லோருக்கும் வேண்டும் என்று கூறுதல், 183 - ஆம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பாடலில் சிறைக் கூட்டத்தைக் கலைக்கூடமாக்குவது, 225 – 237 - ஆம் பாடல்களில் மணிமேகலையைச் சிறைப்படுத்த காவலாளி வருவதும், அரசுக்காவலர்களுக்கு மக்கள் எதிர்ப்புக்காட்டுதல், 264 - 267 ஆகிய பாடல்களில் வரும் சிறை மீண்ட செல்விக்கு மக்கள் வரவேற்பு, 274 - 276 ஆகிய பாடல் பகுதிகள் காட்டும் கட்டாயக்கல்வி சிறைக்கூடத்தை மாற்றுதல், புரட்சி, பொதுவுடமை ஆகியன இருபதாம் நூற்றாண்டில் புதிய கருத்து மாற்றத்தால் பாவேந்தர் பாடலில் இடம்பெற்றவையாகும்.

**இயக்கக்கொள்கையால் இணைந்தவை**

131 - ஆம் வெண்பாவில் தேவர் உலகம் சிறந்தது என்று கூறும் ஆரியர் வழக்கை இகழ்தலும், 124 - ஆம் பாடலில் ஆபுத்திரன் வரலாறு கூறும்போது பார்ப்பனரைச் சாடுதலும் தம் பார்ப்பன எதிர்ப்புக்கொள்கையை வலியுறுத்தும் நோக்கில் மணிமேகலை வெண்பாவில் பாவேந்தர் சேர்த்துள்ளார்.

**தமிழ் உணர்வை இணைத்தல்**

**மன்றப் புலவரெல்லாம் செந்தமிழில் பேர்வாழ்த்தி**
**நிற்பார் பெரிது (மணிமேகலை வெண்பா.பா:7)**
**நிறைகலி ஆர்கலியோ அண்ணல் மறைமலை சொல்**
**கேட்டாரால் நேர்கலியோ என்னும் நிலம் (மணிமேகலை வெண்பா.பா:147)**
**இன்பத் தமிழ்த்தாய் எம்மை (மணிமேகலை வெண்பா.பா:141)**
**முறை கண்டால் மூன்று தமிழ் கண்டாள் (மணிமேகலை வெண்பா.பா:178)**
**மாணவரின் வாய்க்குத் தமிழும் (மணிமேகலை வெண்பா.பா:180)**
**செந்தமிழைச் சேர்க்க இறை (மணிமேகலை வெண்பா.பா:182)**
**சாவை விலக்கித் தமிழ்த்தொண்டு செய்யேனா?**
**பிணங்கி இருந்த தமிழை எடுத்து. (மணிமேகலை வெண்பா.பா:257)**
**தன்னில் எழுந்த தமிழ்ப்பாட்டுச் சொல் மாற்றில்**
**பின்னி எழுந்த பிழைப்பாட்டும் (மணிமேகலை வெண்பா.பா:30)**
**தீவதிலகை நாவில் அமுதெடுத்தாள் அன்ன தமிழெடுத்தமாள்**
**(மணிமேகலை வெண்பா.பா:102)**
**தண்ணார் தமிழன்றோ சாருநெறி (மணிமேகலை வெண்பா.பா:264)**
**அருந்தமிழ் இல்லார் அறிவில்லார் (மணிமேகலை வெண்பா.பா:264)**
**வெள்ளத் தமிழின் இலக்கியம் வேண்டினோர்க்**
**குள்ளத் துணிவு வரும் (மணிமேகலை வெண்பா.பா:266)**

ஆகியன பாவேந்தரின் தமிழ் உணர்வால் மணிமேகலை வெண்பாவில் இடம்பெற்றுள்ளன.

**3. மாற்றம் (Change)**

மணிமேகலையில் உள்ள கதை நிகழ்ச்சிகள் பலவற்றை மணிமேகலை வெண்பாவில் மாற்றியமைக்கப்பட்டுள்ளது. காயக்சண்டிகை தன் கணவனைப் புகழ்வதாக மணிமேகலை கூறுகிறது. ஆனால் கணவனை இகழ்வதாக மணிமேகலை வெண்பாவில் மாற்றப்பட்டுள்ளது.

முற்பிறவியில் தன் கணவனாகிய இராகுலன் திருவடியைத் தொழுதலும் தகுதியுடையதாகும் என்று கருதி அவனை மணிமேகலை வணங்கினாள் என்று உதயகுமாரன் அம்பலம் புக்க காதை கூறுகிறது. ஆனால் மணிமேகலை உதயகுமாரனை எதிர் வணங்கி ஐயவோ என்று வணக்கம் செலுத்துவதாக மணிமேகலை வெண்பாவில் மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

**நிகழ்ச்சி விளக்க மாற்றம்**

காஞ்சனன் உதயகுமாரனை முதுகுப்புறமாகச் சென்று அவன் தோள்களை வெட்டியதாக மணிமேகலை கூறுகிறது. ஆனால் அவன் தோள்களை மணிமேகலை வெண்பா முதுகுப்புறமாகச் சென்று வீழ்த்தாமல் வெட்டியதாக மாற்றி மொழிகிறது.

**அறிவார்ந்த விளக்கம்**

மணிமேகலை உதயகுமாரனிடம் தன் மனம் சென்றது காமத்தின் ஆற்றலால் என்றால் கெடுக அதன் திறம் என்று மணிமேகலையில் கூறுவதாக அமைய உதயகுமாரனிடம் மணிமேகலையின் மனம் சென்றது குழந்தைத்தனமானது என்று அறிவார்ந்த வாதத்துடன் பாவேந்தர் மணிமேகலை வெண்பாவில் மாற்றி அமைத்துள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

பலர் உணவு பெறுவதன் மூலமாகவே அமுத சுரபியிலிருந்து எடுக்க எடுக்க உணவு குறையாமல் நிறைந்துள்ளது என்று அதன் தன்மைக்குப் பாவேந்தர் அறிவார்ந்த விளக்கம் கூறியுள்ளார்.

மணிமேகலை மந்திரத்தால் சிறையில் பசியின்றியிருந்தாள் என்று சாத்தனார் கூறுவதைச் சிறைக்காவலர்களும், பணிப்பெண்டிரும் பிறருக்குத்தெரியாமல் மறைத்துக் கொடுத்த உணவால் பசியின்றி மணற்கிழங்கு போல வாடாமல் இருந்தாள் என்று பாவேந்தர் மாற்றிக் கூறுகிறார்.

காயசண்டிகையின் யானைத்தீப் பசிக்கு முனிவரின் சாபமே என்று மணிமேகலை கூறுகிறது. ஆனால் ''மனநிறைவு இல்லாத நோய்'' என்று மணிமேகலை வெண்பா மாற்றிக் குறிப்பிடுகிறது.

மணிமேகலை மணிமேகலா தெய்வம் தழுவி எடுத்து வான் வழியாகத் தெற்கே சென்று கடல் சூழ்ந்த மணிபல்லவம் எனும் தீவினில் வைத்தது என்று மூலநூல் இயம்புகிறது. ஆனால் முதியவள் மணிமேகலை பலநாள் நடந்தும் நாவாயால் கடலைக் கடந்தும் மணிமேகலையைத் தூக்கிக்கொண்டு சென்றதாக மணிமேகலை வெண்பா கூறுகிறது.

**தமிழுணர்வு**

இந்திர விழாவைத் தனித்தமிழ் பார்வையால் பொன்னி விழா, ''காவிரி விழா'' என்று பாவேந்தர் மாற்றியுள்ளார்.

''விழாவறை காதை'' கூறும் சமயவாதிகளின் மன்றங்களைத் தமிழின் சிறப்பு மலரும் புலவர் மன்றங்களாக மணிமேகலை வெண்பாவில் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

உதயகுமாரன் அம்பலம்புக்க காதையில் பிறந்தோர் மூத்தலும் பிணிபட்டு இறத்தலும் மக்கள் யாக்கை இதுவென மணிமேகலை உதயகுமாரனுக்கு அறம் உரைக்கின்றாள். ஆனால் மணிமேகலை வெண்பாவில் தமிழ்மொழியின் பெருமைகளை மணிமேகலை உதயகுமாரனுக்கு உரைப்பதாக மாற்றப்பட்டுள்ளது.

**இயக்கக்கொள்கையால் மாற்றம்**

'காமனுக்கும் உள்ளம் நடுங்கச் செய்யும் மணிமேகலையை ஆடவர்கள் கண்டால் அகறலும் உண்டோ?' என்று சுதமதி மாதவியிடம் வினவுவதாக மணிமேகலையில் கூறப்பட்டுள்ளது. ஆனால் மணிமேகலை வெண்பாவில் ''கையேந்தும் கண்டால் உலகு'' என்று மாற்றம் பெற்றுள்ளது.

ஆபுத்திரன் வரலாற்றைப் பாவேந்தர் ''குறுகிய கொள்கையாரின் நரிவேலை'' என்று தமது பார்ப்பன எதிர்ப்புக் கொள்கை வெளிப்படுமாறு மாற்றியமைத்துள்ளார்.

**பாவேந்தரின் தனிப்பார்வை**

காஞ்சனன் உதயகுமாரனை வெட்டிக்கொன்ற செயல் தகவில் என்று மூலநூல் கூறுகிறது. பாரதிதாசன் தமது தனிப்பார்வையில் காஞ்சனனை நல்லவனாகக் காட்டியிருக்கிறார்.

**கதைத்தொடர்பு**

கந்திற்பாவை உரையாடல், மணிமேகலை மனக்கவலை நீங்கல், கதிரவன் எழல் ஆகியன ''கந்திற்பாவை வருவது உரைத்த காதையின்''யின் பகுதியில் கதிரவன் எழல் கதையுடன் தொடர்புப்படுத்தப்படாமல் அமைந்துள்ளது. ஆனால் மணிமேகலை வெண்பாவில் பொன்னுடைப்பூண்ட மன்னன் மகன் இறப்பு கண்டு மணிமேகலை அழுகின்றாள். தவத்துறையில் ஈடுபட்டவர் அழுதல் ஆகாது என்று எண்ணுகிறாள். அக்கருத்து சரிதான் என்று கூறுவது போலக் கதிரவன் எழுந்தான் என்று பாவேந்தர் பாடியிருப்பது கதைத்தொடர்பை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது.

**கதைமாற்றம்**

மணிமேகலை வஞ்சியிலிருந்து காஞ்சிக்குச் செல்வதாகச் சாத்தனார் கூறுகிறார். ஆனால் சிறை மீண்ட மணிமேகலை அறவணர், சுதமதி ஆகிய இருவரும் காஞ்சியில் இருப்பதை நேராகப் புகாரிலிருந்து காஞ்சிக்குச் சென்றதாகப் பாவேந்தர் பகர்கின்றார். அறவணர், சுதமதி, மாதவி மூவரும் காஞ்சியில் இருந்தனர் என்று மூலநூல் கூறுகிறது. ஆனால் மாதவியை நீக்கிவிட்டு அறவணர், சுதமதி இருவரும் காஞ்சியில் இருந்தனர் என்று மணிமேகலை வெண்பா கூறுகிறது.

காஞ்சி மாநகரிலிருந்து, வஞ்சிக்கு அறவணர், மணிமேகலை, சுதமதி மூவரும் செல்வதாகப் பாவேந்தர் மாற்றி இருப்பது குறிப்பிடத்தக்கதொரு கதை மாற்றம் ஆகும்.

**கதைச் சுருக்க மாற்றம்**

விழாவறைகாதையில் வள்ளுவன் முரசறையும் போது நகரை அழகுப்படுத்தும் விதத்தையும் கூறுகிறான். ஆனால் மணிமேகலை வெண்பாவில் அழகுப்படுத்தும் விதம் விடப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

மணிமேகலையில் உய்யாவனத்தின் வருணனை கூறப்படுகிறது. ஆனால் எட்டி என்பான் காதற்பரத்தையின்றித் தனித்து தெருவறைக்குள் இருப்பதாக மணிமேகலை வெண்பா குறிப்பிடுகிறது.

சமணப்பள்ளியில் தங்கியிருந்த சுதமதி பின் புத்தப்பள்ளிக்கு வந்த வரலாறு மணிமேகலையில் காணப்படுகிறது. ஆனால் மணிமேகலை வெண்பாவில் சமணப்பள்ளிச் செய்தி விலக்கப்பட்டு சுதமதியும் அவள் தந்தையும் சங்க தருமனால் புத்த பள்ளிக்குச் செல்வதாக அமைக்கப்பட்டுள்ளது.

மன்னர் மகனுக்கு மணிமேகலா தெய்வம் நேரடியாகக் கூறிய நீண்ட அறிவுரை பாவேந்தரின் படைப்பில் முதியவள் மணிமேகலை சுதமதியிடம் மன்னர் மகனுக்கு அறிவுரை கூறி வந்ததாக இயம்பி கதைப்போக்கை அமைத்துச் செய்தி சுருக்கப்பட்டுள்ளது.

மணிமேகலையில் ஆபுத்திரன் வரலாறு மிக விரிவாக்கக்கூறப்படுகிறது. மணிமேகலை வெண்பாவில் விரிவுப்படுத்தாமல் சிறப்பிடங்கள் மட்டும் காட்டப்பட்டுள்ளது. ஆதிரை இன்சொற்களோடு அமுதசுரபியில் அமுதிட்டதாக மணிமேகலை கூறுகிறது. ஆதிரை மணிமேகலையை வாழ்த்துவதாக மணிமேகலை வெண்பாவில் இருபாடல்கள் காணப்படுகின்றன.

சிறைசெய்காதை சுகந்தனின் இளைய மகன் மருதி என்பாளையும் மூத்த மகன் வணிகனின் மகள் விசாகையையும் விரும்பி அதனால் தந்தையின் வாளுக்கு இரையான நிகழ்ச்சியை மணிமேகலை விரித்துக்கூற அதனை மணிமேகலை வெண்பா ஒரே பாடலில் சுருக்கி அமைந்துள்ளது.

மணிமேகலையில் “செறிவன நல்லோர் சிலர் சூழ சித்திராபதி மன்னன் மகனைப் பார்க்கச் சென்றான்” என்று சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆனால் சித்திரபதி தனியாக வீட்டை விட்டு கூந்தல் சரியச் சென்றாள் என்று மணிமேகலை வெண்பா கூறுகிறது.

இவ்வாறு கதைச்சுருக்கத்திற்காக நிகழ்ச்சிகளைச் சுருக்கியும் மாற்றியும் மணிமேகலை வெண்பாவைப் புரட்சிப் பாவேந்தர் படைத்துள்ளார்.

**பகுத்தறிவுக்கு ஒவ்வாதனவற்றை மாற்றுதல்**

மணிமேகலா தெய்வம் நற்றவ முதியோனாகக் காட்டப்பட்டுள்ளது. தீவதிலகையிடம் மணிமேகலை தன் முற்பிறப்பு வரலாறு கூறுவதாக உள்ளதை மணிமேகலை வெண்பாவில் நீக்கப்பட்டு மணிமேகலை தன் வரலாற்றைத் தீவதிலகையிடம் கூறுவதாகப் படைப்பப்பட்டுள்ளது. அறவணஅடிகளின் திருவடியை மும்முறை வணங்கியதாக உள்ள செய்தி மணிமேகலை வெண்பாவில் மும்முறை வணங்கியதாக இடம்பெறவில்லை.

மணிமேகலை கலங்கி நிற்கும் மணிமேகலா தெய்வம் வானின்று இறங்கி வந்து புத்தபீடிகையை வணங்கிப்போற்றியது எனும் செய்தி பாவேந்தர் படைப்பில் முதியவள் மணிமேகலை நேரடியாக வந்து மணிமேகலையைத் தழுவிக்கொண்டாள் என்று மாற்றப்பட்டுள்ளது.

இவ்வாறு மணிமேகலை வெண்பாவில் பகுத்தறிவுக்கு ஒவ்வாத நிகழ்ச்சிகளைப் பாவேந்தர் மாற்றியமைத்துள்ளார்.

**அளவியற் பாங்கோடு அமைந்த மாற்றம்**

மன்னன் மணிமேகலையைக் கூப்பிட்டு அமுத சுரபி கிடைத்த விதம் பற்றி வினாவுதலும் அதற்கு மணிமேகலா தெய்வத்தின் அருளால் கிடைத்தது எனும் விடையும் ஆகிய செய்திகள் மணிமேகலையில் இருக்கிறது. மணிமேகலை வெண்பாவில் மன்னன் மணிமேகலையிடம் நாட்டின் நிலையைப்பற்றி வினவியதாக அமைந்துள்ளது.

சிறை மீண்ட மணிமேகலை உலக அறிவியை அடைந்து சம்பாதி, கந்திற்பாவையை வணங்கினாள் எனும் செய்தி மணிமேகலையில் உள்ளது. ஆனால், மணிமேகலை வெண்பாவில் சம்பாதி, கந்திற்பாவையை வணங்கிய செய்தி நீக்கப்பட்டு உலக அறவிக்குச் சென்றாள் என்று மட்டும் காணப்படுகிறது.

மணிமேகலையைக் கவரக் காஞ்சனன் எண்ணும் போது காயசண்டிகை விந்தரகடிகைக்குப் பலியானள் என்றும் நீ ஆராயாது கொன்றதால் அந்தப்பாவம் உன்னைப்பற்றும் என்றும் கந்திற்பாவை கூறும் செய்தி விடப்பட்டு மாறாக மணிமேகலை தன்னை நெருங்கி வந்த காஞ்சனை நோக்கி “விரும்பேல் விளம்புதல் கேள்” என்று உரைப்பதாகக் கதை வடிவமைக்கப்பட்டுள்ளது.

மணிமேகலையைச் சிறை விடுவிக்க சித்திராபதி இராசமாதேவியிடம் வருதல், அறவணர், சுதமதி, மாதவி ஆகியோர் சிறைமீட்க வருதல், அறவணர் அறவுரை பகர்தல் ஆகியன நீக்கப்பட்டு மனமாற்றம் அடைந்த மன்னியே மன்னனிடம் கோருதலும் அதன் பயனாக மணிமேகலை விடுதலை செய்யப்பட்டதாவும் சித்திரிக்கப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**பிற மாற்றங்கள்**

சமணத்துறவியைக் களிமகன் கள்குடிக்க அழைத்தான் என்பது வெளிப்படையாகக் குறிக்காமல் “உண்ணாநோன்பி” என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

சுதமதி கூறிய உடலின் நிலையற்ற தன்மையைப் பற்றிய செய்தி மணிமேகலை வெண்பாவில் அவ்வளவு விளக்கப்படவில்லை.

வயந்தமாலை சித்திராபதியிடம் கூறும்போது தான் உதயகுமரன் என் மீது காதல் கொண்டுள்ளதை அறிவேன் என்று சுதமதியிடம் மணிமேகலை கூறுகிறாள். ஆனால் மணிமேகலை வெண்பாவில் உதயகுமாரனின் தேரொலியைக் கூறுகிறாள். மணிமேகலை சுதமதியிடம் “உதயன் என் பேரில் விருப்புடையவன் என்பர் விளைவறிவேன்” என்று பெயரினைக் குறிப்பிடாமல் கூறுகிறாள்.

வசந்தமாலை பெயர் குறிப்பிடப்படாமல் வெறும் பாங்கி என்று மணிமேகலை வெண்பாவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**உவமைகள்-மாற்றலும் நீக்கலும்**

மணிமேகலை காணாமற்போன செய்தி கேட்டு மாதவி மாணிக்கத்தை இழக்க நாகம் போலவும் சுதமதி இன்னுயிர் இழந்த யாக்கை போலவும் வருந்தினர் என வரும் மணிமேகலையின் உவமைகளை நீக்கி “கன்றைப்பிரிந்தால் வருந்தாக ஆ, பெண்ணைப்பிரிந்தால் வருந்தாக பெற்ற மனம்” என உவமைகளை மாற்றிப்படைக்கப்பட்டுள்ளது மணிமேகலை வெண்பா.

“அறநெறியில் ஈட்டியோர் பொருள் வழங்குந்தோறும் குறையாமல் வளர்வது போல” எனும் உவமை மணிமேகலை வெண்பாவில் “இலம் நிறைந்தார்க்கெல்லாம் மனம் நிறைந்ததென்ன கலம் நிறைந்த போனது கண்டு” என்று மாற்றம் பெற்றுள்ளது.

யூகி என்பாள் வேற்றுரு கொண்டு நகரில் நுழையும்போது பற்பலர் சூழ்ந்தனர். அதுபோல மணிமேகலையை மக்கள் சூழ்ந்தனர் எனும் புராண உவமையை நீக்கி தங்கப்படிவும் தரையில் வரக்கண்டார். அங்கப்படியே சூழ்ந்தனர் என்று மாற்றியமைத்துள்ளார் பாவேந்தர்.

“மாமணி ஓங்கு திரைப்பெருங்கடல் வீழ்ந்தோர் போன்று” மாதவி மணிமேகலையை விடுத்து வயந்தமாலை நடந்தாள் என்பது மணிமேகலை உவமை இது சிறிது மாற்றம் செய்யப்பட்டு “கைமேல் இருந்த மணியை இழந்தவள் போல்” என்று கூறப்பட்டுள்ளது.

உதயகுமரன் மணிமேகலை எப்படிப்பட்டவள் என்று கேட்டதற்கு “முருகன் போன்ற உன் அழகை உண்ண மாட்டேன்: காமனை வென்றவள்” என்று சுதமதி கூறும் புராண உவமையைப் பாவேந்தர் விலக்கியுள்ளார்.

“நாடக அரங்கில் நடிக்கும் கூத்தியர் கொள்ளும் கோலம் போல ஈண்டு வேறு வகையான கோலம் கொண்டனர்” என்று அறவணர் மாந்தர் கொள்ளும் பல்பிறவி பற்றிக் கூறும் உவமை மணிமேகலை வெண்பாவில் நீக்கப்பட்டுள்ளது.

மணிமேகலை பிச்சைப் பாத்திரம் எடுத்த செய்தி கேட்ட சித்திராபதி “புண்ணில் வேல் பாய்ச்சியது போல துயருற்றாள்” என்னும் உவமை மணிமேகலை வெண்பாவில் விடப்பட்டுள்ளது.

உதய குமாரன் வாளால் எறிந்த காதையில் வரும் “முன் செய்த நல்வினைப் பயனால் உறுதியுடைய நற்பிறப்பின் அடைந்தமை போல” என்னும் உவமை. பாவேந்தர் படைப்பில் இடம் பெறவில்லை.

ஆபுத்திரன் நாடு அடைந்த காதையில் இடம் பெற்றுள்ள “தெளிந்த நீரினையுடைய குளம் புழுதி படிந்தால் கலங்குதற் போல மகளைப் பிரிந்த மாதவி கலங்கினாள்” என்று மணிமேகலை குறிக்கும் உவமை மணிமேகலை வெண்பாவில் விலக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு மணிமேகலையில் உள்ள பல்வேறு உவமைகள் மணிமேகலை வெண்பாவில் மாற்றும் நீக்கமும் பெற்றுள்ளன.

**நிறைவுரை**

பாவேந்தர் பாரதிதாசன் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர் இயற்றிய மணிமேகலை எனும் காப்பியத்தில் கொண்ட கருத்தியல் ஈடுபாட்டால் மணிமேகலை வெண்பா எனும் நூலை படைத்தார்.

பாவேந்தர் பாரதிதாசன் மூல நூலான மணிமேகலையின் கதையமைப்பு, செய்திகள், கருத்துகள், உவமைகள் முதலியவற்றில் காலத்திற்கேற்பத் திருத்தங்கள் செய்துள்ளார். ஆயினும்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

மணிமேகலையின் அடிப்படைக் கதைத் தளத்தினை ஒட்டியே இந்நூலை யாத்துள்ளதால் இதனை மீள்புனைவு எனக் கருதலாம்.

**பார்வை நூல்கள்**

1. வேங்கடசாமி நாட்டார். ந.மு. *மணிமேகலை*, துரைசாமிப்பிள்ளை.சு.ஔவை, சாரதா பதிப்பகம், சென்னை.
2. சாத்தனார். *மணிமேகலை,* சாரதா பதிப்பகம், சென்னை.
3. பாவேந்தர். *மணிமேகலை வெண்பா,* சாரதா பதிப்பகம், சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**விஜயலெட்சுமி, மா.**, [2]**கோவிந்தராஜன், அ.** "அறம் எதிர்நோக்கும் பாவேந்தர் அறம் கண்ட சீத்தலைச் சாத்தனார்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 88-97. டிஓஐ: 10.5281/zenodo.3628487.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Vijayalakshmi, M.,** [2]**Govindarajan, A.** "Justice Foreseen by Paventhar Justice Seen by Sathanar." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 88-97. DOI: 10.5281/zenodo.3628487.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

# திருவண்ணாமலை மாவட்டம் உழவுத் தொழிற்சாற் கலைச்சொற்கள் - கருவிகள், நெல் பயிர்

## Thiruvannamalai District Tillage industry Glossary - Tools, Paddy Crop

[1]**சி.விஜயன்,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[1]**C.Vijayan,** Ph.D.Research Scholar, Department of Tamil, Thiruvalluvar University, Vellore- 632 115.
ORCiD: https://orcid.org/0000-0002-9581-0166
[2]**முனைவர் ம.செந்தில்குமார்,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[2]**Dr.M.Senthilkumar,** Associate Professor, Department of Tamil, Thiruvalluvar University, Vellore – 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-0760-8046
**DOI: 10.5281/zenodo.3628506**

## Abstract

*The economy of our society is completely based on our Agriculture. The most vital occupation of agriculture (plowing) is seen from the ancient Tamil society. Valluvar has been an authority for recommendation of agriculture for the common good of the society and nature. In TamilNadu, the occupational names are widely give for those do the jobs, hence, 'farming' means 'ulave seithal'. 'Ulavu seibavar' are called as 'ulavar' and many of the tools are also related to the names of farming work (Ulave Tholil). In fact, agriculture is very important, today's agricultural land are grabbed by land mafias and corrupt the lands with industrial waste so the growth of agro goods get slowing down due to the proliferation of many new machines, chemicals and multi-storey buildings both in urban and rural areas. Thus, all the terminology of agriculture disappears. Hence, this study focuses on the Thiruvannamalai District tillage occupation and the terminology of agriculture and the disappearance of paddy crop.*

**Keywords:** Tillage Industry, Tools, Glossary, Paddy and Crops

நமது நாட்டின் பொருளாதாரம் விவசாயம் ஆகும். தமிழர் பண்டைய காலத்தில் இருந்து வந்த மிக முக்கியமான தொழில் விவசாயமாகக் (உழவு) காணப்படுகிறது. இதற்காக வள்ளுவரே ஒரு அதிகாரத்தை படைத்துள்ளார். உழவுத் தொழிலே ஒரு நாட்டின் பொருளாதரத்தை உயர்த்தும் என்பதை வள்ளுவர்,

**சுழன்று ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை (குறள் 1031)**

என்ற குறளில் உழவின் இன்றியமையாமையை கூறியுள்ளார்.

விவசாயம் செய்பவர்களை இடத்திற்கு ஏற்றவாறு பெயர்களை குறிப்பிட்டு அழைக்கின்றனர். ஓரிடத்தில் வேளாளர் என்றும் மற்ற இடங்களில் பள்ளர்கள், மல்லர்கள், உழவர்கள் என்றும் குறிப்பிடுகின்றனர். விவசாயம் முக்கியமானதாக இருந்தாலும் இன்றைய கால வளர்ச்சியின் காரணமாக பல புதிய புதிய இயந்திரங்களும், இராசாயனப் பொருட்களும், பல மாடி கட்டிடங்களும், பெருகி வந்துள்ளதால் விவசாயம் குறைந்து கொண்டே வருகின்றன. இதனால் விவசாயத்தில் காணப்படும் அனைத்து கலைச்சொற்களும் மறைந்து கொண்டே வருகின்றன. அந்த வகையில் விவசாயத்தில் மறைந்து வரும் கருவிகள், நெல் பயிர் ஆகிய கலைச்சொற்களைப் பற்றி ஆய்வதே இவ்வாய்வு அமைகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**கலைச்சொல் விளக்கம்**

கலைச்சொல் என்பது ஏதாவது ஒரு அறிவுத்துறையில் பயன்படக்கூடிய சிறப்புச் சொற் தொகுதியைக் குறிக்கும். ஒவ்வொரு துறைக்குள்ளும் ஒரு கலைச்சொல்லுக்கு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட குறிப்பான பொருள்கள் இருக்கக் கூடும். இவை பொது வழக்கில் உள்ள பொருள்களோடு ஒத்திருக்க வேண்டியது இல்லை. ஒரு குறிப்பிடத்தக்க காலம் பயிலப்பட்டு வரும்போது அத்துறையில் காணப்படும் இத்தகைய சிறப்புச் சொற்கள் செறிவான பொருளை உணர்த்துவனவாக வளர்ச்சியடைகின்றன. இவ்வாறான சிறப்புச் சொற்தொகுதியின் பெறுமதி ஒவ்வொரு சொல்லிலும், ஒரு குறிப்பிட்ட அளவு தகவலைப் பொதித்து வைத்திருப்பதில்லை. இதையே "க்ரியா தமிழ் அகராதி கலைச்சொற்களை ஒரு துறையில் உள்ள கருத்துக்களை அல்லது கருத்துத் தொகுப்புகளைக் குறிக்கப் பயன்படுத்தும் (பொதுப் பொருளில் வழங்காத) அந்த துறைக்கே உரிய சொல் என்று வரையறுக்கிறது".

**கலைச்சொற்களின் வகைகள்**

கலைச்சொற்களின் வகைகள் பொறுத்த வரையில் ஒவ்வொரு துறையிலும் கலைச்சொற்கள் காணப்படுகின்றன. அந்த வகையில் கலைச்சொற்களின் வகைகளாக பல துறைகள் அமைந்துள்ளன. துறைகளின் வரிசையே கலைச்சொற்களின் வகைகள் கூறப்படுகின்றன. அவைகள்:

1. வேளாண்மைக் கலைச்சொற்கள்
2. தொழில்நுட்பக் கலைச்சொற்கள்
3. புள்ளிவிவரக் கலைச்சொற்கள்
4. அமைப்பியல் கலைச்சொற்கள்
5. தாவரவியல் கலைச்சொற்கள்
6. வேதிப் பொறியியல் கலைச்சொற்கள்
7. மண்ணியியல் கலைச்சொற்கள்
8. கணிணித்துறைக் கலைச்சொற்கள்
9. இயற்பியல் கலைச்சொற்கள்
10. சட்டம் பற்றிய கலைச்சொற்கள்
11. நிதி பற்றிய கலைச்சொற்கள்
12. புவியியல் கலைச்சொற்கள்
13. உளவியல் கலைச்சொற்கள்

போன்ற கலைச்சொற்கள் குறிப்பிடப்படுகின்றன. இவைகள் மட்டும் இல்லாமல் இன்னும் நிறைய வகைகள் காணப்படுகின்றன.

**கலைச்சொல்லியலின் தந்தை**

கலைச்சொல் என்ற கருவியை உருவாக்குவதன் மூலமாக மட்டுமே அறிவியல் தொழிலின் செய்தித் தொடர்புகளை மேம்படுத்த முடியும் என்பதை உலகிற்கு உணர்த்தியவர் பேராசிரியர் யூஜின் ஊஸ்டர் ஆவர். இவர் 1898 இல் ஆய்டிரியா நாட்டில் பிறந்தவர். மின்பொறியியல் பட்டம் பெற்றவர். இவர் தமது குடும்ப நிறுவனமான ஊஸ்டர் கம்பெனியின் மேலாண்மைப் பொறுப்பேற்றிருந்தார். அப்பணியுடன், கலைச்சொல் ஆய்விலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார்.

**கலைச்சொல் தகவல் மையம்**

ஊஸ்டரின் இடைவிடாத உழைப்பின் பயனாக 'பன்னாட்டுக்கலைச்சொல் தகவல் மையம்' (INFOTERM - International Information Center for Terminology) என்ற அமைப்பு நிறுவப்பட்டது. இது கலைச்சொல் செயல்பாடுகளுக்கான பன்னாட்டு ஒருங்கமைப்புக் குழுவின் (ICCTA - International Co - ordination Committee for Terminological Activities) கீழ் செயல்பட்டது.

**ஒரு ஆங்கிலச் சொல்லுக்கு பல தமிழ் கலைச்சொற்கள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

ஒரு குறிப்பிட்ட பொருள் தரும் ஆங்கிலச் சொல்லுக்கு ஈடாகப் பல தமிழ்க் கலைச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ‘Alternating Current’ என்பது ஆடலோட்டம், இருதிசை மின்னோட்டம், மாறோட்ட மின்சாரம், மாறுதிசை மின்னோட்டம் ஆகிய சொற்களும் ‘acceleration’ என்பதற்குக் கதிவேகம், முடுக்கம், வேகவளர்ச்சி முதலிய சொற்களும் ஆக்கப்பட்டுள்ளன. பிறமொழிக் கலைச்சொல் ஒன்றிற்குப் பல தமிழ்ச் சொற்கள் ஆக்கப்பட்டிருப்பினும் ஏற்ற சொற்களே நிலைத்து நிற்கும் பேற்றை அடைகின்றன.

**பல ஆங்கிலச் சொற்களுக்கு ஒரே தமிழ்ச்சொல்**

பல ஆங்கிலச் சொற்கள் ஒரே தமிழ் சொல்லால் விளக்கப்படும் நிலையையும் ஆராய வேண்டும். உதாரணமாக, ‘buoy’, ‘float’ ஆகிய இரு சொற்களும் மிதவை என்ற ஒரே சொல்லாலேயே குறிப்பிடப்படுகின்றன. தமிழ் மொழி ஏனைய மொழிகளைவிடச் சொல்வளத்தில் சிறிதும் குறைந்ததன்று. இதற்கு நிகண்டுகளே சிறந்த எடுத்துக்காட்டு, நிகண்டுகளில் பல பொருள் ஒரு சொல்லும் ஒரு பொருள் பல சொற்களும் தொகுக்கப் பெற்றுள்ளன.

**உழவுத் தொழிற்சாற் கலைச்சொற்கள் & கருவிகள் சார்ந்த கலைச்சொற்கள்**

விவசாயத்தில் ஈடுபட்ட காலத்தில் இருந்து சிறுவிவசாயிகள் அல்லது பெருவிவசாயிகள் அவர்களின் பொருளாதர வசதிக்கேற்ப வயலை உழுவதற்கு கருவிகளை உபயோகப்படுத்தினர். சிறுவிவசாயிகள் தங்களது வேலையைக் குறைப்பதற்கும் கருவிகளை உபயோப்படுத்தி வருகின்றனர். நிலத்தை தயார்படுத்த உபயோகிக்கும் உழவுக் கருவிகள் இடத்திற்கு ஏற்றாற்போல் மாறுபட்டு காணப்படுகின்றன. உழவுக் கருவிகளின் சொற்களும் மாவட்டத்திற்கு மாவட்டம் மாறுபட்டு காணப்படுகின்றன. அந்த வகையில் திருவண்ணாமலை மாவட்டத்தில் காணலாகும் உழவுத்தொழில் கருவிகளின் கலைச்சொற்களை ஆய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக:

1. கலப்பை - கலப்ப
2. மண்வெட்டி - மமுட்டி, மம்டி,
3. பரம்புபலகை - பரம்பு, பெரம்பு, கொடிஞ்சல்
4. சட்டக்கலப்பை - பட்டலர் கலப்ப
5. பவர்டில்லர் - கைவண்டி, ட்ரேக்டர், சின்னவண்டி
6. டிரேக்டர் - ட்ரேக்டர்
7. ஆயில் இஞ்சின் - மிசின்
8. கத்தி - கொடுவா, கரும்பு கத்தி, கோரைக் கத்தி
9. அரிவாள் - அருவா, அரப்பருவா
10. களைக்கொத்தி - களக்கட்டு, களுக்கிட்டு
11. கடப்பாறை - கடப்பாற

போன்ற கலைச்சொற்கள் காணப்படுகின்றன. மேலும் கோடாரி, படி, மரக்கால், முரம், துடைப்பம், கூடை ஆகிய கருவிகளுக்கும் கலைச்சொற்கள் காணப்படுகின்றன.

**பயிர்கள் சார்ந்த கலைச்சொற்கள்**

பயிர் எனப்படுவது செடியை வளர்த்து, அதன் மகசூலுக்காக முற்றிய நிலையில் அறுவடை செய்யப்படுகின்ற ஒரு உயிராகும். மேலும் பயிரின் வெளிக்குணங்கள் உள்தோற்றம், வினையியல் மற்றும் அதுவரைத் தேவையான சுற்றுப்புறம் இவைகளை கொண்டு அமைந்திருக்கும் பயிர்கள். பயிர்களில் பல வகையான பயிர்கள் காணப்படுகின்றன. பல பயிர்கள் இருந்தாலும் திருவண்ணாமலை மாவட்டத்தில் பயிரிடப்படும் நெல் பயிரின் கலைச்சொற்களைப் பற்றியும் ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக, நன்செய் நிலப் பயிர்கள், புன்செய் நிலப் பயிர்கள் என்பதை அறிய முடிகிறது.

**நன்செய் நிலப் பயிர்கள்**

நெல், கரும்பு, வாழை, வெற்றிலை போன்ற பயிற்கள்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**புன்செய் நிலப் பயிர்கள்**

கம்பு, சோளம், பருத்தி, நிலக்கடலை, கேழ்வரகு போன்ற பயிற்கள்.

**நெல் பயிர்**

1. நிலம் - கரம்பு நிலம், புழுதி நிலம்
2. நாற்றாங்கால் - நாத்தாங்கால்
3. நாற்று - நாத்து
4. நாற்று பிடுங்குதல் - நாத்து எடுத்தல், நாத்து பரித்தல், நாத்து புடுங்குதல்
5. நாற்று முடி - நாத்து முடி, நாத்து முடிச்சு
6. வரப்பு - வருப்பு, மொர்ச்சி
7. சேற்று வரப்பு - சேத்து வருப்பு, சாத்து வருப்பு
8. உரம் - ஒரம்
9. யூரியா - ஊரியா

போன்ற கலைச்சொற்கள் நெற்ப்பயிர் விளைகின்ற காலகட்டத்தில் கூறுகின்றனர் விவசாய பெருமக்கள். இதே போன்று மற்ற பயிர்களிலும் அதிகமான கலைச்சொற்கள் காணப்படுகின்றன.

இந்த ஆய்வின் மூலம் கலைச்சொற்கள் என்ன என்பதை அறிய முடிகிறது. உழவுத் தொழிலில் காணப்படும் கருவிகள் பற்றிய கலைச்சொற்கலையும், பயிற்களில் நெல் பயிர் பற்றிய கலைச்சொற்கலையும் அறிய முடிகிறது. மேலும் உழவுத் தொழிலில் பல்வேறு கலைச்சொற்கள் பற்றியும் அறிய சிறப்பாக அமைகின்றன.

**பார்வை நூல்கள்**

1. *திருக்குறள் தெளிவுரை*, பேராசிரியர் அ.மாணிக்கம், தென்றல் நிலையம், சிதம்பரம்.
2. *கலைச்சொல்லியல்*, டாக்டர். இராதாசெல்லப்பன், தாமரை பப்ளிகேன்ஸ்(பி) லிட், 2006.
3. *க்ரியா தமிழ் அகராதி.*

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**விஜயன், சி.**, [2]**செந்தில்குமார், ம.** "திருவண்ணாமலை மாவட்டம் உழவுத் தொழிற்சாற் கலைச்சொற்கள் - கருவிகள், நெல் பயிர்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 98-102.
டிஓஐ: 10.5281/zenodo.3628506.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Vijayan, C.,** [2]**Senthil Kumar, M.** "J Thiruvannamalai District Tillage industry Glossary- Tools, Paddy Crop." *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 2, no. 2, January 2020, pp. 98-102. DOI: 10.5281/zenodo.3628506.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# பாரதிதாசன் படைப்புகளில் சங்க இலக்கியப் பதிவுகள்
# Sangam Literary Records in the Works of Bharathidasan

[1]**இரா. வைதேகி,** முனைவர் பட்ட ஆய்வாளர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[1]**R.Vaithegi,** Ph.D. Research Scholar, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0003-2245-8154
[2]**முனைவர் அ.கோவிந்தராஜன்,** உதவிப்பேராசிரியர் (அ) இயக்குநர், பாரதிதாசன் பல்பலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[2]**Dr. A. Govindarajan,** Assistant Professor of Tamil & Director, Bharathidasan Research Centre,
Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0002-1237-8962
**DOI: 10.5281/zenodo.3628512**

## Abstract

*The Sangam Literature is the ancient the treasury of Tamil literature. The Tamil tradition and legends link it to three Literary Era around Madurai. They were patronized by the Pandian Kings and the valour of the triumvirs are portrayed in the Sangam Literature. The Sangam age has been calculated as The first Sangam over 4,440 years back, the second over 3,700 years back, and the third over 1,850 years back before the start of the Gregorian era. Bharathidasan, a 21st century Tamil patriotic poet with a firebrand love for Sangam Literature has recorded the traces and virtues of the age –old tradition in his poems. It is also an acceptable fact that in his poems, Bharathidasan has recorded some changes and newness in estimating the existing order of his times nad strongly persuaded to adopt the new principles that hinder the development and social status of the modern Tamil world. Hence, the paper tries to cull down the facts of the Sangam Literature and the trails of them in Bharathidasan's works.*

**Keywords:** Ancient Tamils, Tradition and Legends, Sangam Literature.

இலக்கியம் சமுதாயத்தை நெறிப்படுத்துவதுதான் இலக்காகக் கொண்டது. ஏறத்தாழக் கி.பி.200 முதல் 300 வரையிலான காலத்தில் தொகுக்கப்பெற்றதாக எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களைச் சங்க இலக்கியங்கள் என்பர். இவைதாம் தமிழின் தொன்மை இலக்கியங்களாக காணப்படுகின்றன. பின்வந்த தமிழ் இலக்கியங்களில் இவற்றின் செல்வாக்கும் (INFLUENCE) தாக்கமும் (IMPACT) மறு உருவாக்கங்களும் தொடர்ந்தன. இருபதாம் நூற்றாண்டிலும் இப்போக்குத் தொடர்வதற்குப் பாரதிதாசன் படைப்புகள் சான்றாக அமைகின்றன.

**இயற்கை**

ஆதிகாலம் தொட்டு இன்றுவரை மனித வாழ்வோடு இயற்கை தவிர்க்கவியலாத இணக்கமான உறவைக் கொண்டு திகழ்கிறது. மனித குல வரலாறு என்பது இயற்கையை வியப்பது, புரிந்துகொள்வது, அடக்கியாள்வது என்ற பல்வேறு நிலைகளிலும் இயற்கையை மையமாகக் கொண்டு இயங்கி வருகிறது. மனிதர்களுடைய வரலாறு என்பதே இயற்கை வரலாற்றின் உண்மையான பின்புலமாக அமையப்பெற்ற பகுதியாகும். இயற்கை இன்றளவும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

வரையறைக்குள் அல்லது கட்டுப்பாட்டிற்கும் அடக்கிவிட முடியாதவாறு எல்லையற்ற ஆற்றலுடையதாகவே விளங்குகிறது.

கிழக்குத் திசையில் பெரிய அலைகளையுடைய கடலின் மீது பலரும் வணங்கக் கூடியதாகவும், யாவரும் போற்ற புகழக்கூடியதாகிய ஞாயிறு சுடர்விட்டு உதிக்கின்றதை மதுரை மருதன் இளநாகனார் கூறுவதை,

**முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி**
**ஏமுற விளங்கிய சுடர் (நற்:பா.283.வரி.6-7)**

என்று நற்றிணைப்பாடலின் வழியாகக் கதிரவனின் தோற்றத்தைக் குறிப்பிடுகின்றார்.

பத்துப்பாட்டில், உலகில் வாழும் உயிர்கள் எல்லாம் மகிழும்படி, வலம்வரக்கூடிய ஞாயிற்றை பற்பல சமயத்தவரும் புகழ்கின்ற கீழ்கடலிடத்தே கிழக்குத்திசையில் உதிக்கின்றதை,

**உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு (திருமுருகு:வரி.1-2)**

என்று கதிரவனைச் சிறப்பித்துக் காட்டுகிறார் நக்கீரர். மேலும் இதேக் கருத்தை பாரதிதாசன் தன் கவிதையில் பதிவுசெய்கிறார்.

தம் கவிதைகயில் ஞாயிற்றை, உலக உயிர்களின் துயிலினை நீக்கி உணர்வடையச் செய்யத் தோன்றுகிறது என்றும் செஞ்சூரியனின் ஒளிக்கதிரால் உலகினைச் ஒளிச் சுடரால் ஒளிரச் செய்கிறது. வானம் காலைச் சூரியனின் ஒளியினால் பொன்னிறமாகக் காட்சியளிக்கின்றது என குறிப்பிடுகிறார் பாரதிதாசன்.

மேலும், கதிரவன் ஒளிர்க்கீற்றால் மலர்கள் மலர்ந்தன, சோலைகள் செழித்தன, ஒவ்வொரு நாளும் புதியவனாக சூரியன் உதிக்கின்றதையும் தைப்பொங்கல் நாளுக்கு அவனே முதல்வனாகவும் ஒளியை விரித்து உலகமக்கள் வாழ்வை விளைத்தப்படி கடலின் மேலே எழுவதையும் தம் கவிதையின் மூலமாகக் கூறுவதை,

**சிரித்தபடி புறப்பட்டான்! அவன் சிரிக்கச்**
**சிரித்தனவே மலரெல்லாம்! சோலையெல்லாம்!**
**ஒருத்தன் அவன்! அன்றன் றுபுதியன்!**
**உவகைதரும் தைப்பொங்கல் நாளைச் செய்தான்!**
**விரித்தபடி புறப்பட்டான் ஒளியைÉ வாழ்வை**
**விளைத்தபடி எழுந்திட்டான் கடலின் மேலே!" (பொ.வா.கு.மு.தொ.ப.410)**

இதைப்போன்று சங்க இலக்கியத்தில் இயற்கையைப் பற்றி பாரதிதாசன் படைப்புகளில் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

**கற்பனை**

வாழ்வில் இன்பம் தரக் கூடியது கலை. வாழ வேண்டும் என்ற ஒரு பிடிப்பை தரக் கூடியதும் அதுவே. அக் கலை ஓவியம், இசை, சிற்பம், நடனம், கவிதை எனப் பல வகைகளாய் உள்ளது. சிறந்தக் கலைகளில் ஒன்று கவிதைக் கலையாகும். ஏனெனில் சோகத்தால் தாக்கப்பட்டவனும், வாழ்வில் அலுத்துப் போனவனும் தஞ்சம் புகுவது கவிதையில் தான். அங்கே தான் நிரந்தரமான சுகமும் நிம்மதியும் கிடைக்கப் பெறுகிறது.

கற்பனை செய்வதில் மனம் சுகம் பெற்று நல்ல கற்பனையில் மனம் நயமுள்ள கவிதையைப் படைக்கப்பெற்று மனம் நல்ல கற்பனையென்று மகிழ்ச்சியடைகின்றது.

நாரையின் பிடியிலிருந்து விலகிய இறால் மீன் நீரருகேயுள்ள தாழை மொட்டைக் கண்டு நாரையென்று நினைத்து அஞ்சுகின்றதை,

**கருங்கால் குருகின் கோள் உய்ந்து,போகிய**
**முடங்கு புற இறவின் மோவாய் ஏற்றை**
**ஏறிதிரை தொகுத்த எக்கர் நெடுங் கோட்டுத்**
**துறுகடல் தலைய தோடுபொதி தாழை (நற்.பா.211.வரி:4-7)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

என்ற பாடல் வரிகள் மூலம் கோட்டியூர் நல்லந்தையார் கூறுகின்றார்.

தூண்டிலில் இருந்த இரையைக் கவ்வித் தப்பிய வாளை மீன், நீந்துகின்ற இடமெல்லாம் நீரருகே வளர்ந்த பிரம்பச் செடியன் நிழல் வளைந்து தெளிவதைக் கண்டு, தூண்டிலோ என நடுங்குவதை,

**நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண் கொளீஇ**
**கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்ப**
**பொதி இரை கதுவிய பேழ்வாய் வாளை**
**நீர் நணிப் பிரம்பின் நடுங்கு நிழல் வெரூஉம் (பெரும்.வரிகள்:285–288)**

என்ற பாடல் வரிகள் மூலம் உருத்திரங்கண்ணனார் கூறுவதாக அமைகின்றன. இதனைப் போன்று, பாவேந்தர் தன் கவிதையில் ஆலமரத்தின் கிளையில் பாம்பு தொங்கிக் கொண்டிருந்தது. அதை ஆலமரத்தின் விழுது என்று எண்ணிக் குரங்கு தொட்டுவிட்டுத் தவறுதலாக விளக்கினைத் தொட்ட பிள்ளை சூடு கண்டு எப்படி வெடுக்கென உதறுமோ, அதுபோல உதறிவிட்டுக் கிளைதோறும் தாவித்தாவித் சென்று கீழே உள்ள விழுதை யெல்லாம் ஒளிப் பாம்புகளென்று கருதி, உச்சிக்கிளைக்கு போனதும் தன் வாலையும் பாம்போ என்று எண்ணிப் அஞ்சுமாம். இது அச்சத்தின் உச்சி நிலையை காணமுடிகின்றன. இதனை,

**கிளையினிற் பாம்பு தொங்க**
**விழுதென்று குரங்கு தொட்ட**
**விளக்கினைத் தொட்ட பிள்ளை**
**வெடுக்கெனக் குதித்ததைப்போல்**
**கிளைதோறும் குதித்துத் தாவிக்**
**கீழுள்ள விழுதை யெல்லாம்**
**ஒளிப் பாம்பாய் எண்ணி எண்ணி**
**உச்சிபோய்த் தன்வால் பார்க்கும் (அ.சி:ப.64)**

என்ற இப்பாடலில் படைத்துக் களிப்பினைத் தந்துள்ளார் பாவேந்தர்.

**நடை**

இலக்கியங்கள் காலங்களைக் கடந்தும் கருத்துக்களைக் கடந்தும் இன்றும் ஏற்றமும் எழிலும் பெற்றுத் திகழ்வதற்குக் காரணம் அவ்விலக்கியங்கள் பெற்றிருக்கின்ற பல்வேறு தனிச் சிறப்பியல்புகளேயாகும். கூறும் கருத்தால் மட்டும் அவை கவின் பெற்றுத் திகழவில்லை உணர்த்தும் திறத்தாலும் அவை ஒளிபெற்றும், உயிர்பெற்றும் திகழ்கின்றன. இலக்கிய உணர்வு கூறும் பொருளில் இல்லை, உணர்த்தும் திறத்தில் உண்டு. ஒவ்வொரு கவிஞனும் தனக்கென்று ஒரு நடையைக் கொண்டிருப்பார். அதைக் கொண்டே தம் இலக்கியங்களைப் படைத்திருப்பர். அப்படிப்பட்ட நடையை சங்க இலக்கிய நடை மற்றும் பாரதிதாசன் நடையைப் பற்றி ஒப்பிட்டு ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

தெய்வம் உறையும் ஆலமரத்தில் பெரிய கிளைகளில் பழுத்த பழங்களை நேற்று உண்டோம் என்று கருதாது பின்பும் அங்குப் பறவைக் கூட்டம் செல்வதை,

**கடவுள் ஆலத்துத் தடவுச் சினைப் பல்பழம்**
**நெருநல் உண்டனம் என்னாது, பின்னும்**
**செலவு ஆனாவே, பலி கொள் புள்ளினம்**
**அனையர் வாழியோ இரவலர்É அவரைப் (புறம்.பா.199.வரி:1-4)**

என்று பாடல் வரிகள் மூலம் பெரும்பதுமனார் குறிப்பிடுகின்றார்.

பழுமரம் உள்ள இடத்தைத் தேடிச் சென்று, அவற்றின் பழத்தை உண்ணுவதே தொழிலாக உடைய பறவைகள் கூட்டங்கள் வந்து செல்வதை,

**பழும் தேர் வாழ்க்கைப் பறவை (மது.கா.வரி:576)**

என்ற பாடல் வரி மூலம் மாங்குடி மருதனார் கூறுகின்றார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பறவைகள் பழுத்த மரத்தை நாடிச் சென்று உண்ணுவதை,

**பழுமரம் தேரும் பறவை (பெரும்.வரி:19)**

என்ற பாடல் வரி மூலம் உணர்த்துகின்றார் உருத்திரங்கண்ணனார்.

ஆலமரத்தின் அடிப்பகுதி யானை போன்று காட்சி அளிக்கின்றது. ஆலமரத்தின் ஆயிரம் கிளைகள் வானில் பரவிக் கிடக்கிறது. கிளைகளில் உள்ள காய்கள், பழங்கள் அனைத்திற்கும் வெயில் படாத அளவிற்கு அதன் இலைகள் நமது கைகளைப் போன்று காய்கள் மீது வெயில் படாது இருக்குமாறு காக்கின்றன என்று ஆலமரத்தைப் பற்றி

**ஆயிரம் கிளைகள் கொண்ட**
**அடிமரம் பெரிய யானை!**
**போயின மிலார்கள் வானில்**
**பொலிந்தன பவளக் காய்கள்**
**காயினை நிழலாற் காக்கும்**
**இலையெலாம், உள்ளங் கைகள்!**
**ஆற ஊர் அடுங்கும் நீழல்**
**ஆலிடைக் காணலாகும். (அ.சி.ப:60)**

பாரதிதாசன் இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**பெண்கள்**

சங்க இலக்கியத்தில் காதல், வீரம் இரண்டையும் சங்கப் புலவர்கள் பாடியிருக்கின்றனர். சங்ககாலப் பாடல்கள் பண்பாட்டை அடிப்படையாக அமைந்துள்ளது. சங்க இலக்கியங்களில் மகளிர் சார்ந்த குறிப்புகள் நிறைந்திருக்கின்றன. சங்க கால மனிதர்களின் வாழ்வியலில் அகவாழ்க்கையும், புறவாழ்க்கையும் கலந்து இருக்கின்றன. அவற்றில் பண்பாடு, நாகரீகம், அன்பு செலுத்துதல், விருந்தோம்பல் முதலியன பண்புகளில் தங்களை இணைத்துக் கொண்டனர். பாரதிதாசன் படைப்புகளில் காணப்படுகின்ற மகளிர் சாயல்களும் சங்க இலக்கியப் பாடல்களோடு ஒத்து இருக்கின்றன.

என் தாயும், நின் தாயும் என்ன உறவினர்? என் தந்தையும், நின் தந்தையும் எம்முறையில் உறவுடையார்? யானும், நீயும் எக்குடிவழியைச் சார்ந்தவராக அறிதல் கூடும்? செம்மண் நிலத்தில் பெய்யும் மழை போல மண்ணையும், நீரையும் எவ்வாறு பிரிக்க முடியாதோ அவ்வாறு நம்முடைய நெஞ்சங்கள் அன்பால் தாமாகவே கலந்தது. இதனை,

**யாயும் ஞாயும் யார் ஆகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே (குறுந்.பா:40)**

என்ற பாடல் வரிகள் மூலம் செம்புலப்பெயல்நீரார் குறிப்பிடுகிறார்.

இப்பிறப்பு மாறி, மறுபிறப்பு வருவதாயினும், நீயே என் கணவன் உன் மனம் ஒத்தவள் நானே என்பதை,

**இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் எம் கணவனை**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே (குறுந்.பா.49.வரி:4-6)**

என்ற பாடல் வரிகளில் அம்மூவனார் எடுத்துக்காட்டுகிறார்.

**ஆற்றின் வாரார் ஆயினும், ஆற்ற**
**ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கு என**
**மான் அமர் நோக்கம் கலங்கிக் கையற்று**
**ஆனாச் சிறுமையின் இவளும் தேம்பும் (குறிஞ்சி.பா:வரிகள்:23-26)**

என்ற வரிகளில் கபிலர் சிறந்த இலக்கணங்களையுடைய முத்தானும், மாணிகத்தானும், பொன்னாலும் பொருந்தியவாறு செய்யப் பெற்ற அணிகலன்கள், அணிந்த தலைவி.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அறத்தொடு நின்ற பின் தலைவற்கு மணம் செய்து கொடுக்க நம் பெற்றோர் உடன்படவில்லையாயினும், நம் உயிர் நீங்கும் வரை இவ் வருத்தத்தைப் பொறுத்துக் கொண்டு, நமக்கு மறுப்பிறப்பினும் இணைய வேண்டும் என்று தலைவி எண்ணுவதைக் கூறுகிறார்.

**என் தாய் யாரோ!**
**உன் தாய் யாரோ! - பெண்ணே**
**என் தந்தை உன்தந்தை உறவினர் அல்லரே**
**இன்றிங் கேஉனை எவ்வா றடைந்தேன்?**
**நீ என்னை எவ்வா றறிந்தாய்? - நாம்**
**செம்மண் நிலமும் பெய்த மழையும் போல்**
**சேர்ந்தோம் அடடா இன்பம் ஆர்ந்தோம் (இசை.முழு தொ.ப.398.வரி:1-7)**

இப்பாடலில் பாரதிதாசன் சங்க இலக்கியத்தின் மீதுக் கொண்ட காதலை உணர்த்துகின்றது.

சங்க இலக்கியத்தின் மீது காதல் கொண்ட 21நூற்றாண்டின் கவிஞரான பாரதிதாசன் தம் கவிதைகளில் அச்சாயலைப் பதிவு செய்துள்ளார். அச்சாயலைப் பதிவு செய்த பாரதிதாசன் சில மாற்றங்களையும் நவீன உலகின் புதுமையையும், சமூக நிலையையும் தம் கவிதையில் பதியவைத்துள்ளார்.

**துணைநூல் பட்டியல்**

1. மாணிக்க வாசகன். ஞா. *பத்துப்பாட்டு*, உமா பதிப்பகம், 171, பவளக்காரத் தெரு, மண்ணடி, சென்னை- 01.
2. சாமிநாதர் ஐயர். உ.வே, *குறுந்தொகை*, வேங்கடாசலம் பிள்ளை, ரா. திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட். 522, டி.டி.கே. சாலை, சென்னை- 18.
3. நாராயணசாமி ஐயர், அ. *நற்றிணை*, கழக வெளியீடு, சென்னை- 18.
4. பாலசுப்பிரமணியன், கு.வெ. *புறநானூறு*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை - 98.
5. பாரதிதாசன், *அழகின் சிரிப்பு*, கௌரா பதிப்பகம், சென்னை.
6. சுரதா கல்லாடன். *கவிஞர் பாரதிதாசன் கவிதைகள் முழுத்தொகுப்புகள்*, (தொ.ஆ) மணிவாசகர் பதிப்பகம், சிங்காரத் தெரு, சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**வைதேகி, இரா.** [2]**அ.கோவிந்தராஜன்.** “பாரதிதாசன் படைப்புகளில் சங்க இலக்கியப் பதிவுகள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 103-108. டிஓஐ: 10.5281/zenodo.3628512.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Vaideki, R.,** [2]**Govindarajan, A.** “Sangam Literary Records in the Works of Bharathidasan.” *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 103-108. DOI: 10.5281/zenodo.3628512.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

## சங்ககால மக்களின் வாழ்வியல்
## Social Life of the People of Sangam Period

[1]**சி.யுவராஜ்,** முனைவர் பட்ட ஆய்வாளர், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[1]**C. Yuvaraj.** Ph.D. Research Scholar, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0001-8496-1420
[2]**முனைவர் அ.கோவிந்தராஜன்,** உதவிப்பேராசிரியர் (ம) இயக்குநர், பாரதிதாசன் பல்பலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.
[2]**Dr. A. Govindarajan,** Assistant Professor of Tamil & Director, Bharathidasan Research Centre, Bharathidasan University, Trichy- 24.
**ORCiD:** https://orcid.org/0000-0002-1237-8962
**DOI: 10.5281/zenodo.3628525**

## Abstract

*Literature is the medium like a mirror that reflects human life. It paves a way for life to be lived in a decent way. By utilizing language as it's medium, Literature helps man to live with humanity. Literature is born when if portrays human lives of beautiful people. From Sangam Period onwards it has been a cultural heritage that emanicipated Tamil people. It is the Golden Age of Tamil Society. The Sangam people had organized their lifestyle in accordance with their own technology, sense of beauty and their lands according to the weather conditions. Hence, the study evinces the basic traits of the Sangam people, food, clothing, education, service, faith, culture and civilization which have existed in those times.*

**Keywords:** Social Life, Sangam Period, Culture, Civilization.

### முன்னுரை

இலக்கியம் என்பது மனித வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடி. இது வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது. மொழியை ஊடகமாகக் கொண்டு விளங்குகிறது. இலக்கியம் மனிதனை, மனித நேயப் பண்புகளுடன் வாழ வழிவகை செய்கின்றது. மனித வாழ்க்கையை அழகாகச் சொல்லும் போது இலக்கியம் பிறக்கின்றது. சங்க கால மக்கள் தொழில் நுட்பத்துடனும் அழகியல் உணர்வுடனும், நிலத்தில் நிலவும் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்றவாறு வாழ்க்கை முறையை அமைத்திருந்தனர். அத்தகைய எளிய மக்களின் உணவு, உடை, கல்வி, ஈகை முதலியன ஆய்வதாக இக்கட்டுரையின் நோக்கமாக முயலப்படுகிறது.

### உணவு முறைகள்

சங்க கால மக்களின் பண்பாடுகளில், உணவுப் பொருட்களும், அவர்கள் உட்கொள்ளும் உணவு முறைகளும் முக்கியப்பங்கு பெறுகின்றன. அவர்கள் வாழும் நிலத்தின் தன்மைக்கு ஏற்பவும் பருவ கால மாற்றத்திற்கு ஏற்றவாறும், அவர்கள் செய்யும் உற்பத்தி முறைகளுக்கு ஏற்றவாறும் உணவு அமைகின்றது. சங்க இலக்கியம் உணவு என்பது 'நிலத்தொடு நீரே' என்று குறிப்பிடுகிறது. பழந்தமிழர்கள் இயற்கையாகக் கிடைக்கப் பெற்ற தாவரங்களையும், உயிரினங்களையும் உணவுப் பொருட்களாகப் பயன்படுத்தினர். அவர்கள் உட்கொள்ளும் உணவுப் பொருட்கள் உடல் நலத்திற்கு ஏற்றவையாக இருந்தன.

இயற்கை விளை பொருட்களைச் சுவைபட சமைப்பதிலும், உண்பதிலும் ஆர்வம் காட்டினர். சமைப்பதை 'அடுதல்' என்றும், சமையல் செய்யும் இடத்தினை 'அட்டில்' என்றும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அழைத்தனர். உணவுப் பொருட்களை, நீரில் அவித்தல், வறுத்தல், சுடுதல், வற்றலாக்குதல், எண்ணெயில் பொரித்தல் போன்ற முறைகளைக் கையாண்டனர்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் தேன், கிழங்கு, பன்றியின் இறைச்சி போன்ற உணவுகளை ஓலையால் செய்யப்பட்ட வட்டிலில் இட்டு உட்கொண்டுள்ளனர்.

**கான்உறை வாழக்கை, கதநாய், வேட்டுவன்**
**மான்தசை சொரிந்த வட்டியும் (புறம்.33:1-2)**

என்ற புறப்பாடலின் வழி இதனை அறியலாம். மேலும், மலைப் பகுதியில் வாழ்ந்த குறவர்கள் உடும்பு, மான், பன்றி ஆகியவற்றின் இறைச்சியையும் உணவாக உட்கொண்டனர். தேன், கள்ளுடன் பலாக் கொட்டையின் மாவும் அவற்றில் பாலும் சேர்த்து மூங்கில் குழாய்களில் இட்டு முதிர வைத்து உண்டனர் என்றும், இவர்கள் இறைச்சியின் பொரியலையும், சிறிய தினைச் சோற்றையும் உணவாக உண்டனர் என்றும் மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. இதனை,

**கிழவர் போலக் கேளாது கெழீ**
**சேட்புலம்பு அகல இனிய கூறி**
**பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**
**குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவீா் (மலைபடு:166-170)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். மேலும்,

**இருங்காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த**
**அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு**
**கவைத்தாள் அலவன் கவலையொடு பெறுகுவிர் (சிறுபாண்:193 - 195)**

என்று சிறுபாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றது. 'விருந்தில்லா உணவு மருந்து என்பதற்கு ஏற்ப' மாண் அரிசி சோற்றையும், வெண் சோற்றையும் விருந்தினர்க்குப் படைத்து மகிழ்ந்துள்ளனர்.

முல்லை நிலத்து மக்கள் ஆடு மாடுகளை மேய்த்துப் பால் கறந்து அதன் மூலம் பெறப்பட்ட உணவுப் பொருட்களை உணவாக உட்கொண்டனர். அவர்களின் உணவுப் பொருட்கள் பெரும்பாலும் சிறு தானியங்களாக இருந்தன. அவற்றுடன் பால், வெண்ணெய், தயிர் போன்ற பால் உணவுப் பொருட்களையும் உணவுகளாக உட்கொண்டனர். குறிஞ்சி நில மக்களைப் போல் தினையையும் உணவாகப் பயன்படுத்தி வந்துள்ளனர். அவ்வாறு அவர்கள் பயன்படுத்தும் தினைகள் நண்டின் குஞ்சுகளைப் போல் காட்சி தந்தன என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இதனை,

**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்**
**இருங் கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன**
**பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவீர் (பெரும்: 166 - 168)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

சங்க கால நிலப்பிரிவு மக்களிடையே மிகுந்த செல்வ வளம் பெற்றவர்கள் மருத நில மக்கள் ஆவர். மருத நிலம் நீர் வளம் மிகுந்த வளமான நிலம் என்பதன் காரணமாகத்தான் மருத நில மக்கள் பெரும்பான்மையோர் வறுமை என்பதனை அறியாதவர்களாகவும், பசியால் வாடாதவர்களாகவும் வாழ்ந்துள்ளனர்.

**ஆடைகள்**

மனித சமுதாயத்திற்கு ஆடை மிக இன்றியமையாததாகத் திகழ்கிறது. ஏனென்றால், மனிதனின் மானத்தை மறைக்கும் கருவி ஆடை. இதனை, 'ஆடை இல்லா மனிதன் அரை மனிதன்' என்ற பழமொழி மூலம் அறியலாம். ஆடைகள் மனிதனின் பண்பையும், அவன் பெற்றுள்ள பொருளாதாரச் சிறப்பினையும் பிரதிபலிப்பனவாக உள்ளன. சங்க காலத்தில் ஆடையை:

**உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை,**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

> **படம், படாம், பூங்கரை நிலம், உத்தரீயம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர்வை, சிதவல், வார், மெய்ப்பை, மெய்ம்மறை, பட்டகம், நூல், பக்குடுக்கை (தமிழர் ஆடைகள்.ப:20)**

எனப் பலவாறு அழைத்துள்ளனர். சட்டையைக் குறிப்பிடும் பொதுச் சொற்களாக உடை, ஆடை என்ற சொற்கள் விளங்கின. **"சங்க காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த தழை, உடை என்பவற்றுடன் தொடர்புடைய நாருடைகள் இருந்து வந்தன" (தமிழர் ஆடைகள்.ப:23)** என்று கு. பகவதி குறிப்பிடுகிறார். இவ்வுடைகள் இன்றைய கதர் ஆடைகளுக்கு இணையானவையாகும். பழந்தமிழரின் பண்பாட்டுக் கருவூலமாகத் திகழும் தொல்காப்பியம் ஆடையை 'உடை' என்று குறிப்பிடுகிறது. அன்று முதல் இன்று வரை இச்சொல் வழக்கில் இருந்து வருகிறது. 'உடு' என்னும் வேர்ச் சொல்லில் இருந்து தோன்றியது உடை. **உடைபெயாத் துடுத்தல் (தொல்.மெய்.நூ:14)** என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

உடை என்பது உடம்பைச் சுற்றி உடுத்தப்படும் உடையைக் குறிக்கின்றது. ஆடை என்பது **"உடம்பை அடுத்து இருப்பதால் ஆடை என்று அழைக்கப்படுகிறது" (தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள்)**. நாகரீகம் வளராத அக்காலத்தில் மரத்தின் பட்டைகள், நார்கள், இலைகள் விலங்குகளின் தோல் போன்றவற்றை உடலை மறைக்கும் ஆடைகளாகப் பயன்படுத்தினர்.

> **தழையுடை அமைக்க, நெய்தல், ஞாழல், ஆம்பல், குவளை,செயலை, நொச்சி போன்றவற்றின் தழைகள் பயன்படுத்தப்பட்டன (தமிழர் ஆடைகள்: 28).**

நிலத்திற்கேற்ப இத்தழை ஆடைகள் மாறுபட்டு இருந்தன.

> **உடுக்கும் தழைதந் தனனேயாம் யாம்அ.்.து**
> **உடுப்பின் யாய் அஞ்சுதுமே (நற்.359:4-5)**

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் மூலம் அறியலாம். மேலும், 'மரல்நார்உடுக்கை மலை உறை குறவர்' என்றும் நற்றிணை குறிப்பிடுகிறது.நாகரீகத்தில் சற்று முன்னேற்றம் அடைந்த மனிதன் ஆடை செய்வதற்காகப்பருத்தியை நடவு செய்து அதில் இருந்து தங்களுக்குத் தேவையான ஆடைவகைகளை வடிவமைத்துக் கொண்டான். சங்க காலத்தில் பருத்திபயிரிட்டதற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

> **பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇக்**
> **காஞ்சியின் அகத்துக் கரும்புருத்தி ஆக்கும்**
> **தீம்புனல் ஊர (அகம்.156:5-7)**

என்றும்,

> **கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்**
> **தாழி முதல் கலித்த கோழிலைப் பருத்தி (அகம்.129:6-7)**

என்றும் அகநானூறு குறிப்பிடுகிறது. மேலும், பருத்தி பயிரிடப்பட்டு முற்றிமுதிர்ந்து வெடித்துப் பஞ்சு வெளிப்பட்டபோது அவற்றைக் கொய்து வீட்டில்பாதுகாத்து வைத்திருந்தனர் என்பதை,

> **கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த**
> **மூடைப் பண்டம் மிடைநிறைந்து அன்ன (புறம்.393:12-13)**

என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

**கல்வி**

உலக உயிரினங்களில் தலை சிறந்த இனம் மனித இனம். ஏனென்றால் நல்லது, கெட்டது என்று வகை பிரித்துப் பார்க்கும் பகுத்தறியும் குணம் படைத்தவன் மனிதன். மனிதனின் அறிவின் வளர்ச்சிக்கு முதன்மையானதும், அடிப்படையானதும் கல்வி. விலங்கு நிலையில் இருக்கும் மனிதனைப் பகுத்தறியும் தன்மைக்குப் பக்குவப்படுத்துவது கல்வி. கல்வியானது கற்பவரின் சிந்தனையைத் தூண்ட வேண்டும். தன்னம்பிக்கை, ஆளுமை, சேவை,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

மனித நேயம் போன்றவற்றைத் தர வேண்டும். அத்தகைய கல்வியை மனித இனம் கசடறக் கற்க வேண்டும். ஆதலால்தான் வள்ளுவர்,

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்கு தக (குறள்: 391)**

என்று கல்வியின் பெருமையை உலகிற்குப் பறைசாட்டுகிறார். கல்வியின்பெருமை பற்றி விவேகானந்தர் குறிப்பிடும்போது ஒவ்வொரு மனிதனுள்ளும்தெய்வீகத் தன்மையும், பூரணத்துவமும் மறைந்துள்ளது. அதனை, வெளியேகொண்டு வர வேண்டும் என்றால் அதற்குக் கல்வியே சிறந்த வழியாகும்என்று குறிப்பிடுகிறார்.

கல்வியானது ஒரு கால எல்லைக்குள் அடங்குவது அன்று. அது எல்லையற்ற பரப்புடையது. கல்வியை ஒருவன் வாழ்நாள் முழுவதும் கற்கலாம். அது சாதி வேறுபாட்டைக் களையக் கூடிய கருவியாகச் செயல்படவல்லது. அது அறிவுக்கடலைத் திறக்கும் சாவி. ஆதலால்தான் ஆரியப் படைகடந்த பாண்டிய நெருஞ்செழியன்,

**உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே (புறம்.183:1-2)**

என்று குறிப்பிடுகின்றான். அத்தகைய கல்வியைப் பிச்சை எடுத்தாவது கற்றல் வேண்டும் என்று குறிப்பிடுகிறான். ஆதலால்தான் கற்றவனைத் தாய் பிறரினும் விரும்புவாள் என்றும், அறிவுடையோன் வழியில் அரசும் செல்லும் என்றும் வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்ப்பால் ஒருவன் கல்வி கற்றதினால் மேற்பாலொருவன் அவன்கண் படுமே என்றும் சங்கச் சான்றோர்கள் குறிப்பிடுகின்றனர்.

**குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து**
**நல்லமய் ாம் என்னும் நடுவு நிலைமையால்**
**கல்வி அழகே அழகு (நாவடியார்: 131)**

என்று நாலடியார் கல்வியின் சிறப்பினைக் குறிப்பிடுகிறது. மேலும், ஒரு முறை கல்வியானது பின் ஏழு பிறப்பிலும் தொடர்ந்து வந்து நன்மை பயக்கும். இதனை,

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்**
**கெழுமையும் ஏமாப் புடைத்து (குறள்: 389)**

என்ற குறள் மூலம் அறிலயாம். மேற்கண்ட சான்றுகள் மூலம் கல்வியின் பெருமை, கற்றவரின் இயல்பு, அவர்கள் ஒழுக வேண்டிய முறை ஆகியவற்றை அறியலாம்.

**கலை**

கலை என்பதற்கு கவின் கலை, நுண் கலை, நற்கலை, அழகுக்கலை என பலப் பெயர்கள் உண்டு. மேலும், சிற்பம், ஓவியம், இசை,நடனம், நாடகம் போன்றவை தமிழரின் அழகுக் கலையில் முக்கியப் பங்குபெறுவன ஆகும். பண்டைத் தமிழர்கள் ஆயக்கலைகள் அறுபத்து நான்குஎன்று குறிப்பிடுகின்றனர். இதனை,

**ஆயக் கலைகள் அறுபத்து நான்கினையும் (மணி..3 - 120)**

என்று மணிமேகலை குறிப்பிடுகிறது. தமிழர்களின் கட்டிடக் கலையின் சிறப்பினைக் கோவில், அரண்மனை,மதில், வீடுகள் ஆகியவற்றின் வழியே அறியலாம்.

வானுயர்ந்த கட்டிடங்கள் இடம் பெற்ற பகுதியை நகர் என்றுஅழைத்தனர். கோயில் கட்டிடங்கள் 'சுடுமண் ஓங்கிய நெடுநகர்' எனஅழைக்கப்பட்டது. கோயில் கட்டிடங்கள் எழுப்புவதற்கு முன் நல்ல நாள் குறித்து, திசைகளையும், திசைத் தெய்வங்களையும் வணங்கி நூல் கொண்டு அடையாளப்படுத்தி அதன் பின்னரே கட்டிட இலக்கண நூற்படி அமைத்தனர் என்பதை,

**நூல்அறிவு புலவர் நுண்ணிதின் கயிறுஇட்டு**
**தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி**
**பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்பமனை வகுத்து (நெடுநல்.76-77)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

என்று நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. கட்டிடங்கள் தொழில் முறையில் சிறந்தவர்களால் வடிவமைக்கப்பட்டுக் கட்டப் பெற்றன என்பதை,

**அயில்திணி நெடுங்கதவு அமைத்து துடைத்து அணிகொண்ட**
**எயில் இடுகளிறே போல்இடுமணல் நெடுங்கோட்டை (கலி.135)**

என்று கலித்தொகையும், **"விண்பொர நிவந்த வேயா மாடத்து" (பெரும் - 348)** என்று பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. சிற்பக் கலைகளில் தெய்வங்களின் உருவங்கள் பெரும்பாலும் வடிவமைக்கப்பெற்று இருந்தன. அத்தெய்வ உருவங்கள் கல், மரம் ஆகியவற்றினால் செய்யப் பெற்றிருந்தன என்பதை,

**மண்ணிலும் கல்லினும் மரத்தினும் சுவரினும்**
**கண்ணிய தெய்வம் காட்டுநர் வகுக்க (மணி:130- 131)**

என்று மணிமேகலை குறிப்பிடுகிறது.

**விருந்தோம்பல்**

பண்டைத் தமிழரிடம் விருந்தோம்பல் பண்பாடு சிறப்பாக அமையப் பெற்றிருந்தது. இப்பண்பாடு தமிழரின் இல்லற வாழ்க்கையை அளக்க உதவும் அளவு கோலாகவும் விளங்குகின்றது.

தங்களின் இல்லத்திற்கு விருந்தினர் தினந்தோறும் வந்துகொண்டு இருக்க வேண்டும் என்று விருந்தை எதிர்நோக்கும் தமிழ் மக்கள் அன்று இருந்தனர். இரவு பகல் என்று பாராமல் எப்பொழுதும் விருந்தினர் வரவை எதிர்நோக்கி இருந்தனர்.

**அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல் இயற் குறுமகள (நற்.142:9-11)**

தங்கள் வீட்டில் உணவுப் பொருள்கள் குறைவாக இருந்தாலும்அவற்றைப் பற்றிக் கவலை கொள்ளாமல், வரும் விருந்தினர்களின் மனம்கோணாமல் விருந்து படைக்கும் இயல்பினராய் தமிழர்கள் விளங்கினர்என்பதை,

**…உள்ளது**
**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**
**நீள்நெடும் பந்தர் ஊன்முறை ஊட்டும்**
**இற்பொலி மகடூஉப் போல (புறம்.331:6-9)**

என்ற புறப்பாடல் வழி அறியலாம். அதியமானின் விருந்தோம்பல் பண்பினை ஔவை குறிப்பிடும்போது அவனைத் தேடி வருவோர்கள் ஒரு நாள் சென்றாலும், அதற்கு அடுத்த நாள் சென்றாலும், அவருடன் பலரை அழைத்துக் கொண்டு சென்றாலும் முதல் நாள் எத்தகைய முகமலர்ச்சியுடன் வரவேற்றானோ, அதே முகமலர்ச்சியோடு எல்லா நாளிலும் வரவேற்று உபசரிப்பான் என்று குறிப்பிடுகிறார். இதனை,

**ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலாம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ (புறம்.101:1-3)**

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம். பொருநர் ஆற்றுப்படை கரிகால்பெருவளத்தானின் விருந்தோம்பல் பண்பைக் குறிப்பிடும்போது தம்மை நாடிவந்த கலைஞர்கள் பசி என்னும் பெரும் துன்பத்தில் இருப்பதைக் கண்டுஅவர்களுக்குச் சுவையான உணவை வழங்கி உடன் செம்மறியாட்டின்கறியையும் முகம் மலரக் கொடுத்து விருந்தோம்பினான் என்று குறிப்பிடுகிறது. இதனை,

**துராஅய் துற்றிய துருவைஅம் புழுக்கின்**
**பராஅரை வேவை பருகுஎனத் தண்டி**
**காழின் சுட்ட கோழ்ஊண் கொழுங்குறை**
**ஊழின் ஊழின் வாயடி வயது ஒற்றி (பொருநர். 103-106)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.இவ்வாறு சங்க கால மக்களிடையே விருந்தோம்பல் பண்பு சிறப்புறஅமைந்திருந்தது.

**ஈகை**

ஈகை என்பது பொருள் உடையவர்கள், இல்லாதவர்களுக்குவழங்குவது. இது எவ்வித எதிர்பார்ப்பும், திரும்பப் பெறும் தன்மையும் அற்றது. உலகத்தாற் போற்றும் அறங்களில் முதன்மை இடம் பெறுவது.அறங்களில் சிறந்தது. மனித நேயத்தின் அடிப்படையாகத் திகழ்வது ஈகைப் பண்பு.

**செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்போம் எனினே தப்புந பலவே (புறம்.189:7-8)**

பிறருக்குக் கொடுத்துத் தானும் உண்டு வாழ்வதே வாழ்க்கை. ஈகைகுணம் தனி மனிதச் சிந்தனையில் தோன்றிச் சமுதாயப் பயனுடையதாகஅமைகின்றது. வறுமையில் வாடும் மக்களுக்குத் தம்மால் இயன்றஉதவிகளைச் செய்யும்போது அச்செயல் உயர்ந்ததாகக் கருதப்படுகிறது.ஆதலால்தான் உலக இன்பங்களில் ஈகை இன்பம் உயர்ந்ததாக உலகத்தார் போற்றுகின்றனர். இதனை வள்ளுவர்,

**ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு (குறள்: 231)**

என்று குறிப்பிடுகிறார். மேலும்,

**எத்துணை ஆயினும் ஈதல் நன்றுஎன**
**மறுமை நோக்கின்றோ அன்றே**
**பிறர்வறுமை நோக்கின்று அவன்**
**கை வண்மையே (புறம்.141:13-16)**

என்ற புறப்பாடல் அடிகள் ஈதல் தன்மையைப் பறைசாற்றுகின்றன.வறுமையில் வாடும் புலவரான பெருஞ்சித்திரனார் தான் பெற்று வந்தபொருளைத் தன் மனைவியிடம் கொடுத்து அதனைத் தம் சுற்றத்தார்க்கும்பகிர்ந்தளிக்கச் சொல்கிறார். இதுதான் ஈகையின் பண்பு. இதனை:

**இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே (புறம்.163:5-7)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். பாரி என்னும் ஒப்பற்ற வள்ளல்இவ்வுலகில் மாரிக்கு இணையாக ஈகை குணம் கொண்டவன் என்று புறம்குறிப்பிடுகின்றது. இதனை,

**...அறம் பூண்டு**
**பாரியும், பரிசிலர் இரப்பின்**
**வாரேன் என்னான் அவர்வரை யன்னே (புறம்.108:4-6)**
**பாரி ஒருவனும் அல்லன்**
**மாரியும் உண்டுஈண்டு உலகு புரப்பதுவே (புறம்.107:3-4)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

பாரி சாதாரண வள்ளல் அன்று. அவன் மனிதர்களுக்கு மட்டும் ஈயும்தன்மை கொண்டவன் அல்ல. ஓரறிவு கொண்ட தாவரத்திற்கும் ஈயும் தன்மைகொண்டவன். ஆதலால்தான் பாரி வரலாற்றில் சாகா வரம் பெற்றுத்திகழ்கின்றான். பற்றுகள் அற்றுக் காணப்படும் முல்லைக் கொடிக்குப்பற்றாகத் தன் தேரினையே ஈகையாகக் கொடுத்தவன் பாரி என்று *சிறுபாணாற்றுப்படை* குறிப்பிடுகிறது. இதனை,

**சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**
**பிறங்கு வெள்அருவி வீழும் சாரல்**
**பறம்பிற் கோமான் பாரி (சிறுபாண்:89 - 91)**

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**தொகுப்புரை**

பழந்தமிழர்கள் இயற்கையுடன் இயைந்த வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். தாம் வாழும் வாழ்க்கையை ஒரு கலை நயத்துடன் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதையும் இத்தகைய அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைவது கல்வி. சிறப்பு வாய்ந்த இக்கல்வியைச் சங்ககாலத் தமிழர்கள் பெற்றிருந்தனர் என்பதை இவ்வியலின் மூலம் அறியவும், பண்பாடுகளில் சிறந்ததாகக் கருதப்படும் பண்பாடு விருந்தினர்களை உபசரிப்பது. தம்மை நாடி வரும் விருந்தினர்களை இன்முகம் கொண்டுவரவேற்று அவர்களின் நிலையறிந்து விருந்தோம்பி இன்முகத்துடன் வழியனுப்பி வைத்துள்ளனர் என்பதை இக்கட்டுரையின் நோக்கமாக முயலப்பட்டுள்ளது.

**நூல் பட்டியல்**


1. மாணிக்க வாசகன். ஞா. *பத்துப்பாட்டு.* உமா பதிப்பகம், 171, பவளக்காரத் தெரு, மண்ணடி, சென்னை - 01.
2. வேங்கடசாமி நாட்டார், ந.மு, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட். 522, டி.டி.கே. சாலை, சென்னை - 18.
3. இளம்பூரணம் (உ.ஆ), *தொல்காப்பியம்,* கழக வெளியீடு, சென்னை - 18.
4. நச்சினார்க்கினியர் (உ.ஆ). *கலித்தொகை,* கழக வெளியீடு, சென்னை - 18.
5. நாராயணசாமி ஐயர், அ. *நற்றிணை,* கழக வெளியீடு, சென்னை - 18.
6. பாலசுப்பிரமணியன், கு.வெ. *புறநானூறு,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை - 98.
7. மாணிக்க வாசகன். ஞா. *மணிமேகலை,* உமா பதிப்பகம், 171, பவளக்காரத் தெரு, மண்ணடி, சென்னை - 01.
8. திருவள்ளுவர். *திருக்குறள்,* கழக வெளியீடு, சென்னை – 18.


**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**யுவராஜ், சி., இரா.** [2]**அ.கோவிந்தராஜன்.** “சங்ககால மக்களின் வாழ்வியல்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 109-116. டிஓஐ: 10.5281/zenodo.3628525.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Yuvaraj, C.,** [2]**Govindarajan, A.** “Social Life of the People of Sangam Period.” *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 2, no. 2, January 2020, pp. 109-116. DOI: 10.5281/zenodo.3628525.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies



A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# அகநானூற்றில் - உளவியல் நோக்கில் தலைவி
# In *Aganaanooru* - The Beloved in Psychological Perspective

[1]**ப.ராகசுதா,** முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[1]**B. Ragasudha**, Ph.D. Research Scholar, Thiruvalluvar University, Vellore- 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-4729-2584
[2]**முனைவர் ம.செந்தில்குமார்,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[2]**Dr.M.Senthilkumar,** Associate Professor, Department of Tamil, Thiruvalluvar University, Vellore – 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-0760-8046
**DOI: 10.5281/zenodo.3628530**

## Abstract

*In Tamil Literature, Sangam Literature holds its zenith portraying the life style of the classic Tamil People. The Sangam Period is considered to be the virtuos society upholding social order and noble values. It is a treasure of ancient cultural traditions. It depicts the internal and external actions of man. The life of the Lover and beloved has been a famous theme in this literature because life without a man and woman and their love becomes futile; Sangam works shows them visually while reading through them. So, most of the Sangam Songs deals with the cocial life. Love is the common theme in it. Woman and her love has been pertrayrd in a chaste manner. 'Aganaanooru', a Sangam literary work portrays the life and longings of the beloved and tells us of her passion and emotions on her lover. Hence, the mind of the beloved is the main objective of the article and contemplates on the state of the beloved in psychological perspective.*

**Keywords:** *Aganaanooru*, Beloved in Sangam Literature, Psychological Perspective.

சங்கத் தமிழர்களின் தொன்மையான பண்பட்ட மரபு சார்ந்த அறிவு முறைகளையும், மனிதனின் அகம், புறம் சார்ந்த வகைமைகளில் ஆவணப்படுத்தி வைத்திருக்கும் கலைப்பெட்டகம் சங்க இலக்கியங்கள். தமிழர்களின் அக உணர்வுகளையும் வீர உணர்வுகளையும் உள்ளடக்கி உவப்பன சங்க இலக்கியங்கள். தமிழரின் தனி அடையாளம் சங்க இலக்கியம். செம்மொழியாக தமிழ் திகழ்வதற்கு இவ்விலக்கியங்கள் தான் காரணமாக அமைகின்றன. தலைவன், தலைவி உள்ளத்து வேட்கையின் இயல்புகளையும், உளவியல் பாங்கினையும் எடுத்து ஆராய்வதே இக்கட்டுரையின் பொருண்மைகளாக அமைகிறது.

**உளவியல் நோக்கில் தமிழ் இலக்கியம்**

உளவியல் பற்றிய சிந்தனைகள் ஆரம்ப காலத்தில் தத்துவவாதிகளான சாக்ரடீஸ், அரிஸ்டாட்டில் போன்ற அறிஞர்களிடம் தோன்றியதாக வரலாறு கூறுகிறது. தத்துவ கருத்துகளுக்கு இணையான உளவியல் சிந்தனைகள் சங்கத் தமிழ் இலக்கியங்களில் பரவிக்கிடக்கின்றன. தமிழில் உளவியல் சிந்தனையை கூறியவர் திருவள்ளுவர்,

**அடுத்ததுகாட்டும் பளிங்கு போல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம் (குறள். 706)**

குறிப்பறிதல் எனும் அதிகாரத்தில் உளவியல் கோட்பாட்டு சிந்தனைப் பற்றி திருவள்ளுவர் கூறியிருப்பது வியக்கத்தக்கது. உள்ளத்திற்கும், புலனுக்கும் உள்ள குறிப்பும் அதனால் ஏற்படுகின்ற உளவியல் சிந்தனையும் காண இயல்கிறது. உளவியல் கோட்பாட்டாளர்கள்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அகத்தை சார்ந்து புறமும், புறத்தைச் சார்ந்து அகமும் செயல்படுகிறது என்று குறிப்பிடுகின்றனர். இத்தகைய ஆய்வுக்கு முன்னரே தமிழர் தாம் அனுபவித்த வாழ்வியல் நெறிகளை கொண்டு உளவியல் பகுப்பு முறையை இலக்கியத்தில் வெளிப்படுத்தியுள்ளனர். தலைவியின் களவு, கற்பு என்ற இரண்டு பாகுபாட்டு நெறிகளும் உளவியல் மற்றும் வாழ்வியல் இயல்புகளை உரைக்கின்றன.

**களவு**

தலை மக்கள் இருவரும் பிறர் அறியா வண்ணம் கூடி காதல் இன்பத்தினை அனுபவிப்பது களவு ஒழுக்கமாகும். இக்களவு வாழ்க்கையில் தலைவி தன் உள்ளத்தின் உணர்வுகளை பரிமாறிக் கொள்கிறாள். களவு வாழ்க்கையில் தலைவி தன் உள்ளத்தின் எழுச்சியினை செய்கையின் வாயிலாக குறிப்பின் மூலம் வெளிப்படுத்துவாள் என்பதனை தொல்காப்பியர்,

**அச்சமும் நாணும் மடனும் முந்துறத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப (தொல்.பொருள்.96)**
**காமம் சொல்லா நாட்டம் இன்மையின்**
**ஏமுற இரண்டும் உள என மொழிப (தொல்-107)**

இந்த நூற்பாக்கள் மூலமாக அச்சம், நாணம், மடன் என்ற மூன்று பண்புகளும் தலைவிக்குரியவை. இவற்றை உள்ளத்தின் வாயிலாக காதல் உணர்வை உணர்த்துவாள். இவற்றைத்தவிர மாறாக நேரடியாக உணர்த்தமாட்டாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளதை காணமுடிகிறது.

**தலைவியின் உள கோட்பாடு**

தலைவியின் உள்ளத்தின் இயல்புகளை சங்க இலக்கியங்கள் இவ்வாறாக விளம்புவதை காணலாம்.

**கேழல் பேழ்வாய் ஏற்றை**
**பலா அமல் அடுக்கும் புலாறு ஈர்க்கும்**
**கழை நரல கல்பின் ஆங்கண் (அகம். 8)**

தலைவியின் மனதில் தோன்றிய ஆளுமை பண்பை பெருங்குன்றூர் கிழார் எடுத்து காட்டுகிறார். தலைவன் களவொழுக்கம் கொண்டு பல நாள் செல்கிறான். அதனை தலைவி தலைவனுக்கு நயமாக எடுத்து உணர்த்துவதை காணலாம். தன்னுடைய தொல்குடிக்கு தலைவனின் செயல் தன்னுடைய ஆளுமை பண்பினால் வெளிப்படுத்துவதை காணலாம்.

**தலைவியின் பகுப்பாய்வுத் திறன்**

மனித இனத்தின் அடிப்படையான உணர்ச்சியாக பாலுணர்வு செயல்படுகிறது. பாலுணர்ச்சியானது தன் போக்கில் செயல்படாமல் சமுதாய கோட்பாட்டுக்கு ஏற்ப செயல்படாமல் சமுதாய கட்டாயத்தின் அடிப்படையில் சமுதாயத்தில் பண்பாடு, நாகரீகம், மரபு போன்ற பொதுமை கூறுகளை மையமாகக் கொண்டு செயல்படுகிறது. தலைவியின் உளபாங்கானது தனக்கு துன்பம் நேர்ந்த காலத்தில் உதவி செய்த தோழியை புகழ்ந்து உரைப்பதின் வாயிலாக அறிந்துக் கொள்ளலாம்.

**நீடலர் ஆசிவருவர் வல்லென**
**கங்குல் உயவுத்துணை ஆசிய**
**துஞ்சாது உறைவி இவள்உவந்ததுவே (அகம். 298)**

இப்பாடலில் தலைவி தலைவனுடன் கூடி இன்பமாய் இருக்கும் சமயத்தில் தோழியின் நினைவினை தலைவனிடம் கூறுகிறாள். இதனையே வள்ளுவர்,

**காலத்தினாற் செய்த உதவி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது (திருக், 102)**

தக்க சமயத்தில் உதவி புரிந்தவர் அவர் செய்த உதவி சிறிதாக இருந்தாலும் அது உலகை விட பெரியதாக கருத வேண்டும் என்று கூறுகிறார். தலைவிக்கு தலைவன் தான்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

முக்கியமானவனாக இருப்பினும் அவனினும் மேலாக தோழியின் செயலை புகழ்ந்துரைப்பதின் வாயிலாக தலைவியின் உளபாங்கு புலனாகிறது.

**களவும் - கற்பும்**

களவுக் கூட்டத்திற்குப் பின் தலைவன் தலைவியை முறைப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம் கற்பு வாழ்க்கையாகும். சொன்ன சொல் தவறாதிருத்தல், மனம் ஒரே நிலையில் நிற்றல் போன்ற நிலைகளை கற்புக்கு இலக்கணமாக கூறலாம். தமிழரின் பண்பாட்டுக் கூறாக உணர்வாக கற்பு நெறி போற்றிப் புகழப்படுகிறது. ஒரு பெண் கற்புடன் இருப்பாள் எனில் இவ்வுலகத்தையே எறிக்கும் ஆற்றல் அவளிடம் உண்டு என்பதனை தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. பெண் கற்போடு இருப்பதை விட வேறு அப்பெண்ணுக்கு அணி செய்யும் வேறு எதுவும் இல்லை என்று வள்ளுவர் கூறுகிறார்.

**பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பெனும்**
**திண்மை உண்டாகப் பெறின் குறள் (குறள். 54)**

என்று பெண்மையை போற்றியுள்ளார்.

**கற்பெனப்படுவது கரணமொடு புணரக்**
**கொளற்கு மரபின் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே (தொல். 1088)**

தலைவியை மணம் செய்து கொள்ள தகுதியுடைய மரபினை உடைய தலைவன், தலைவியை கொடுப்பதற்கு உரிய மரபினை உடையோர் கொடுப்ப மணம் செய்து இல்வாழ்க்கை நடத்துவதற்கு கற்பு வாழ்வு என்று குறிப்பிடுகிறார்.

**பொற்பெமை சிறப்பின் கற்புஎனப் படுவது**
**மகிழ்வும் ஊடலும், ஊடல் உணர்த்தலும்**
**பிரிவும் பிறவும் மருவியது ஆகும் (அகப்பொருள்.200)**

கற்பு பொலிவினைத் தருகின்ற ஒரு பெண்ணுக்கு மேலும் அழகு சேர்க்கின்ற ஒளிர் ஆபர குணமாக சித்தரிக்கப்படுகிறது. அத்தகைய கற்பு வாழ்க்கை இருவீட்டாரின் உயர் பண்பினை எடுத்தியம்பும். உள்ள மகிழ்வு, கூடுவதற்கு இன்னும் சிறப்பு சேர்க்க ஊடல், அவ்வூடலை உணர்தல், தலைவன் பிரிவு அவற்றுடன் பொருந்தியதுதான் கற்பு. கற்பு எனப்படுவது உடலுடன் தொடர்பு உடையது அன்று மனதளவில் கட்டுப்பாட்டுடன் இருப்பது கற்பின் தன்மையாகும்.

**ஆளுமைக் கோட்பாடு**

ஆளுமை குணத்திற்கு பல்வேறு காரணம் குறிப்பிட்டு உள்ளனர். மனிதனின் ஆளுமை தன்மை எல்லையற்றது. ஒரு மனிதனின் ஆளுமை தன்மை பல்வேறு சூழ்நிலை காரணிகளால் உருவாக்கப்படுபவைகள். அவை அந்த சூழலுக்கேற்ப மாறுபாட்டினை கொண்டு அந்த மனிதனின் ஆளுமை குணத்தை வெளிப்படுத்தும் தன்மை கொண்டது. மூரே என்பவர் பிறப்பிலிருந்து இறப்பு வரை உள்ளத்தின் இயக்கங்களும் செயல்களும் தொடரியலாக நடத்தைகள் வடிவில் வெளிப்படுத்துகின்ற கட்டமைப்புதான் ஆளுமை என்கிறார். கற்பு வாழ்வில் தலைவனை புறநிலையாக கொண்டு தலைவிக்கு ஆளுமைப் பண்பு வளர்கிறது. தலைவன் பரத்தையோடு சென்று நீராட்டு அயர்ந்து மீண்டு வரும் தலைவனிடம் தலைவி ஊடல் கொண்டு தலைவன் தன்னை பொய்யாக புகழ்வதை,

**இளமை சென்று தவத் தொல்ல.்.தே**
**இனிமை எவன்செய்வது பொய்ம்மொழிமெக்கே (அகம். 6)**

என்னும் வரிகளில் தலைவியின் ஆளுமை குணம் வெளிப்பட்டு உண்மைத் தன்மையினை தலைவி உணர்வதை காணலாம்.

**தலைவியின் அன்பு பரிமாணங்கள்**

தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான் பிரிவினை ஆற்றாத தலைவி உடல் மெலிந்தாள். அதனை கண்ணுற்ற தோழி ஆற்றுதல் சொல்லும் போது தலைவி தலைவியை இவ்வாறாக புகழ்கிறாள்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**புலம்பெயர்ந்து உறைதல் செல்லாது இலங்குதலை**
**விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும் (அகம்.241)**

வெம்மை பொருந்திய காட்டிலேயே வருத்தமுற வைக்கும் வெப்பம் மிகுதி வெப்பத்தின் விளைவாக மழையின்றி அருவிகள் அற்று போயின. மான்களும் வெப்பக்கதிரை நீரென கருதி அருந்த ஓடும். தலைவன் அத்தகைய இடத்தைக் கடந்து சென்றுள்ளார் என்று தலைவி வருத்தம் கொள்கிறாள். தலைவன் பால் தலைவி வைத்துள்ள அன்பின் வெளிப்பாடு புலனாகிறது.

இரவுக்குறிக்கண் வரும் தலைவன் பல துன்பங்களுக்கு ஆளாகி வருத்தமுற நேரிடும் என்று அஞ்சிய தலைவி,

**இருள் கிழிப்பது போல் மின்னி, வானம்**
**துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள் (அகம். 72)**

இருளை கிழிப்பது போல் மின்னி வானம் மழை பொழிந்தது. சிதைந்த புற்றின் கண் மின்மினி பூச்சிகள் கிளந்து எழும்பும் அவற்றின் வெளிச்சத்தின் விலங்குகள் வேட்டையாடும். அத்தகைய அரிய காட்டினிடத்தே தலைவன் இரவின் கண் வந்து தலைவியை காண வருதல் அச்சம் தரும் ஒன்றாகும். எனவே தலைவன் அச்சமுற நேரிடும் என்று தலைவி தோழிக்கு கூறுகிறாள். இது தலைவன்பால் உள்ள அன்பின் வெளிப்பாடு.

களவு ஒழுக்கத்தில் தலைவியை காண வரும் தலைவனின் செயல்கள் மற்றும் தலைவன் வரும் அறத்தின் தன்மையை கண்டு தலைவி வருத்தம் கொள்வாள்.

**நெஞ்சுடம் படுதலின் ஒன்று புரிந்து அடங்கி**
**இரவின் வரு இடும்பை நீங்க (அகம்.312)**

தலைவியின் வருத்தம் தலைவன் வரும் வழியை நினைத்து வருத்தம் கொள்கிறது. இதன் விளைவாக அதனை தலைவி தன் நினைவாக எண்ணுகிறாள்.

சங்க இலக்கியத்தின் பாடுபொருளின் இருகண்களாய் இருப்பது அகம், புறம் ஆகும். அகத்தில் களவு, கற்பு இரண்டு ஒழுக்கங்களை புலவர்கள் கருத்தாக்கமாகக் கொண்டு இலக்கியங்களை இயற்றியுள்ளனர். அவர்களின் கருத்தாக்கங்களில் களவு வாழ்க்கையானது கற்பு வாழ்வுக்கு வழி செய்வனவாக அமைகிறது. தமிழகப் பெண்களின் பண்பாட்டு ஒழுக்கத்தின் ஒரு கூறாக விளங்குவது கற்பு ஆகும். அக்கற்பு காலங்களில் தலைவியானவள் தலைவனின் பிரிவு ஆற்றாமையே எண்ணி வருந்துவதை காணமுடிகிறது. தலைவியின் பிரிவு ஆற்றாமைக்கு சுற்றுச் சூழலும் குறிப்பிடத்தக்க புறக்காரணியாக அமைகிறது.

தலைவியின் பிரிவு துயருக்கு மிகைக்கூருணர்ச்சி ஆளுமை குணம், பொருமுக உணர்வுகள், நனவு மனத்தின் ஆளுமை போன்றவை அடிப்படையாய் அமைந்து தலைவியை நெறிப்படுத்தும் உணர்வுகளாக திகழ்கிறது.

தலைமகள் பண்பாடு முறையில் பரத்தையை வெறுத்தாலும், உளவியல் அடிப்படையில் நோக்கும் போது பரத்தையர் வாழ்வினை தலைவி உணர்ந்து தலைவன் செல்லும் பரத்தையை தனது உடன்பிறப்பாக எண்ணி இருப்பதும், அவள் தன்னைப் போன்ற பெண்மகள் என்று தலைவி உணர்ந்து இருப்பதை அறிய முடிகிறது.

**பார்வை நூல்கள்**


1. முனைவர் வி. நாகராசன், *சங்க இலக்கியம் - குறுந்தொகை*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
2. நாகூர் ரூமி. *சிக்மண்ட் ஃப்ராய்ட்*,
3. *தமிழ்க்காதல்*, வ.சுப. மாணிக்கனார், சாரதா பதிப்பகம்.
4. *திருக்குறள்*, பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம்.
5. *தொல்காப்பியம்*, இளம்பூரணர் உரை.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

6. *அகநானூறு மூலமும் உரையும்*, உரையாசிரியர் முனைவர் இரா.செயபால்
7. *தொல்காப்பியம் காட்டும் வாழ்வியல்*, பேரா.ந.சுப்புரெட்டியார், சென்னை.
8. *இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்*, டாக்டர் செ.சாரதாம்பாள்.
9. *தொல்காப்பியத்தில் கூற்றுக்கோட்பாடு*, இரா.ஈஸ்வரி
10. *அகப்பொருள் கோட்பாடு*, சிலம்பு நா.செல்வராசு

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**ராகசுதா, ப., இரா.** [2]**செந்தில்குமார், ம.** "அகநானூற்றில் - உளவியல் நோக்கில் தலைவி." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 117-121. டிஓஐ: 10.5281/zenodo.3628530.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Ragasudha, B.,** [2]**Senthil Kumar, M.** "In *Aganaanooru* - The Beloved in Psychological Perspective." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 117-121. DOI: 10.5281/zenodo.3628530.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# பெருங்குளம் கிராமப்புறக் கோயில் வழிபாடும் மற்றும் திருவிழாக்களும் - ஒரு சிறப்புப் பார்வை

# Temple Worship and Festivals of Perungulam Village - A Special Study

[1]**அ.ராதா,** முனைவர் பட்ட ஆய்வாளர், வரலாற்றுத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3
[1]**A. Radha,** Ph.D. Research Scholar, Department of History, Alagappa University, Karaikudi-3
ORCiD: https://orcid.org/0000-0002-1319-7514
[2]**முனைவர் கா.பரந்தாமன்,** உதவிப் பேராசிரியர், வரலாற்றுத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி-3
[2] **Dr. K. Paranthaman**, Assistant Professor of History, Department of History, Alagappa University, Karaikudi-3
ORCiD: https://orcid.org/0000-0002-9837-9260
**DOI: 10.5281/zenodo.3628534**

## Abstract

*Tamilnadu, a state very known for legendary Temples has many temples apart from them. Lots of Shiva Temples, Vishnu Temples, Amman temples, Ganesa temples and Murugan temples are there in cities as well as in villages in all parts of the state. In most of the Amman temples, festivals occur in the Tamil month of Aadi and Chitthirai. In Thoothukudi District, at perunkulam village you can see most of the small Amman temples have the celebration mode in the month Aadi. The first phase is the announcement of celebrations, this is normally done by hoisting a holy flag in a post (Kodimaram in Tamil- made up of wood) which is located in the entrance of a temple opposite to the main shrine. It is the traditional ceremony called as 'kodiyetruthal' (raising the flag) or 'satruthal' (announcement) or 'Kappukattuthal'. After this ceremony, no one in the village should not consume non-vegegetarian foods and no one should leave the village till the festival is over. The next phase is festival celebrations with the procession of Godess normally in the midnight around the village with traditional music and dance (Karakam, Devarattam-folk dance). It shows the religious belief and the ritual of the tamil people. Hence, the paper studies on the in and around Temples and the Worship and Festivals practiced in Perungulam Village with a Special focus.*

**Keywords:** Perungulam Villages, Village Temple, Worhip, Festival.

**முன்னுரை**

சிறுதெய்வம் தமிழ்ச் சமூகத்தில் பெரும்பாலான மக்களால் வழிபடப்பெறும் தெய்வமாகும். சிறுதெய்வங்களை வழிபடும் மரபும் அதற்கான சூழலும் அச்சமூக மக்களின் உளம்சார்ந்த ஒன்றாகவே இருந்து வந்தது. தங்களோடு வாழ்ந்தவர்கள் இறந்து போன பின்பு அவர்களின் நினைவை மனப்பதிவின் வழியே சுமப்பதைக் காட்டிலும் அந்நினைவுகளை மீள் உருவாக்கம் செய்யவும் அச்சமூகத்தை ஒருங்கிணைக்கவும் சிறுதெய்வங்கள் பெரிதும் துணையாக நிற்கின்றன. அந்த வகையில் பெருங்குளம் கிராமத்தில் காணப்படுகின்ற சிறுதெய்வங்கள் பற்றிய தரவுகள் மூலம் இக்கிராம மக்களின் வழிபாட்டு முறைகள் மற்றும் தொன்மை மரபுகளையும் நாட்டுப்புறச் சிறுதெய்வங்கள் ஒவ்வொரு சமூகத்திற்கும் ஏன் தேவையாக இருக்கின்றன என்பதனையும் வழிபாட்டு முறைகளையும் ஆவணப்படுத்துவது முக்கிய நோக்கமாக அமைகிறது. இவ்வாய்வுக்கு களப்பணியே அடிப்படையாக

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

அமைந்துள்ளது. களப்பணியினை முதன்மையாகக் கொண்டு களப்பணியில் கண்டுணர்ந்தவற்றை, அறிஞர் கருத்துக்களோடு இயைபுப்படுத்திக் காட்டுவது முக்கிய நோக்கமாகும். மேலும் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ள இவ்வூர் தூத்துக்குடி மாவட்டம் ஸ்ரீவைகுண்டம் தாலுக்காவின் மேற்கில் 10கி.மீ. தொலைவிலும், ஏரல் கிழக்குப்புறத்தில் 5கி.மீ தொலைவிலும், சாயர்புரம் வடக்குப்புறத்தில் 7கி.மீ தொலைவிலும், மணவாளக்குறிஞ்சி தெற்குப்புறத்தில் 3கி.மீ தொலைவிலும் இச்சிற்றூர் அமைந்துள்ளது. இவ்வூரில் தன்விலைப்புதுார் ஆலடி நடுவூர் ஊராயி போன்ற ஊர்களின் சிறுதெய்வ கோயில்களில் நடைபெறும் வழிபாடும் மற்றும் திருவிழாக்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு களப்பணித் தரவுகளோடு விளக்கப்படுகின்றன.

நாடோடியாக வாழ்ந்த மக்கள் நிரந்தரமாக ஓரிடம் தங்கி, வேளாண்மை செய்தனர். வேளாண் குடிகளாக மாறியதும் நிலத்தை பெண்கடவுளாக கருதி வழிபட்டுள்ளனர். மேலும் சிந்துசமவெளியில் கிடைத்த முத்திரை வடிவத்தையும், குப்தர்காலச் சுடுமண் வடிவம் ஒன்றையும் இதற்கான சான்றுகளாக அறிஞர்கள் முன் வைக்கின்றனர். இந்த முத்திரையில் பெண்ணொருவரின் பிறப்புறுப்பிலிருந்து செடியொன்று முளைத்து வருவதாகக் காட்டப்பட்டுள்ளது. சுடுமண் வடிவத்தில் பெண்ணின் கழுத்திலிருந்து தாமரை முளைத்துள்ளது என்று அறிஞர்கள் கூற்றாக இரா.கலைக்கோவன் கூறுகின்றார். இவை இரண்டுமே பெண்ணின் தாய்மைப் பண்பையும் வளமைப் பண்பையும் உணர்த்துவதாக உள்ளன. பூமி விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும், பெண் குழந்தையைப் பெறும் சக்திக்கும் தொடர்பு உண்டு என்று தொல்குடி மக்கள் கருதினர். இதன் அடிப்படையில் பெண்ணின் தாய்மைப் பண்பை போற்றும் விதமாக தாய்த்தெய்வ வழிபாடு தோன்றியது எனலாம். இவ்வாறு அறிஞர்களின் கூற்றுகளுக்கு ஏற்பத் இக்கிராமத்தில் சிறுதெய்வங்களை வளமையான குறியீடாக வைத்து மக்கள் வழிபட்டனர் என்பதையும் அறியமுடிகிறது.

**மாரியம்மன்**

பழந்தமிழர்கள் மழை பெய்யாவிட்டால் மாரியம்மனை வேண்டி விழா எடுப்பர். மழை மிகுதியாகப் பெய்தாலும், அது நிற்கும்படி தெய்வத்தை வேண்டிக் கொள்வர். இவ்வழக்கமானது தமிழ் மக்களிடம் இருந்துள்ளது. இதனை, "மலைவான் கொள்கென உயிர்ப்பலி துாஉய் மாரி ஆன்று, மழைமக்கு உயர்க எனக், கடவுள் பேணிய குறவா மாக்கள், பெயல்கண் மாறிய உவகையர்" எனும் புறநானூற்றுப் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. மலையிலே மேகங்கள் சூழ்ந்து மழை பெய்கவென்று உயிர்ப்பலி கொடுத்து வணங்குவர். அதனால் மிகுதியாக மழை பெய்யும். அந்த மழை நிற்க வேண்டும், மேகங்கள் மேலே போய்விட வேண்டும் என்று தெய்வத்தை வேண்டுவர். அதனால் மழை பெய்யாமல் நின்று விடும். இதனைப் போன்றே இன்றும் இக்கிராம மக்கள் மழைத் தெய்வமாக மாரியம்மனை வழிபடுகின்றனர்.

மழை பெய்யாத வறட்சிக் காலங்களில் வீடுவீடாகச் சென்று அரிசி, வெல்லம், மற்றும் சர்க்கரை போன்ற பொருட்களைப் பெற்று வருவர். அவ்வாறு பெற்று வரும் பொருட்களைக் கொண்டு நீர்நிலைகளின் அருகில் பொங்கல் வைத்து வழிபட்டு மாரியம்மனை வேண்டுகின்றனர். இந்திர விழாக்காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள பெண்கள், நாட்டிலுள்ள பசி, நோய், பகைகள் ஒழிய வேண்டும். மழையும், செல்வமும் பெருக வேண்டும் என்று பூசையிட்டு வேண்டிக் கொள்வர். இதனை, "பசியும், பிணியும், பகையும், நீங்கி வசியும், வளனும், சுரக்க எனவாழ்த்தி மாந்தர்க் கோலத்து வலவயின் உரைக்கும் மூதிற் பெண்டிர் ஓதையின் பெயர" எனும் சிலப்பதிகார அடிகள் தமிழ் மக்கள் தெய்வத்தை வழிபட்ட காரணத்தைக் கூறுகின்றன. பசியில்லாமல் வாழ, நோயின்றி வாழ, பகைவர் பயம் குன்றி வாழ, மழைபெய்து செல்வவளம் பெறத் தெய்வத்தை வேண்டினர். பண்டைய தமிழகத்தில் மழைக்காகத் தெய்வங்களை வேண்டினர். இவ்வழக்கம் இன்றும் பெருங்குளம் கிராமத்தில் உள்ளதைக் காணமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**காளியம்மன்**

தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் வழிபாடே தாய்த்தெய்வ வழிபாடாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. போருக்குச் செல்வோர் கொற்றவையின் பெருமைகளைக் கூறி வழிபட்டுச் செல்வர். அவ்வாறு வழிபட்டுச் செல்லுதலே கொற்றவை வழிபாடாகும். இக்கொற்றவைத் தெய்வமே நாட்டுப்புறங்களில் காளியம்மனாக வழங்கப்படுகிறது.

கொற்றவைத் தெய்வம் எப்படி இருந்தது என்பதனை சிலப்பதிகாரம் "பாம்பின் வடிவிலமைந்த தங்க நாணல் கட்டப்பட்ட நெடிய சடை, சடையில் பிறைநிலவெனப் பன்றியின் தந்தம், உடன் வெள்ளிய மலரிதழ்கள், நெற்றியில் இமைக்காத கண், பவழம் போல் வாயும், வெண்சிரிப்பும் கொண்டவள். கழுத்தில் புலிப்பல் தாலி, மார்பகங்களைப் பாம்புக் கச்சால் மறைத்தவள், வளைகள் அணிந்த கைகளில் சூலமும் வளைக்கப்பட்ட வில்லும், வெற்றியையுடைய வாளும், சங்கும், சக்கரமும், தாமரையும் கொண்டவள். யானைத்தோல் போர்த்தவள், இடையில் புலித்தோல், சிங்கத்தோல் உடுத்தவள், கால்களில் இடப்புறம் சிலம்பும், வலப்புறம் கழலும் அணிந்தவள். கை வாளால் மகிடனை அழித்து அவன் தலைமீது நின்றவள்" என்று கூறுகின்றது.

**வழிபாடுகளும் நம்பிக்கைகளும்**

பண்டைய மக்கள் தன்னைச்சுற்றி நடைபெறக்கூடிய செயல்களுக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் இருந்தனர். பிறகு உய்த்தறிதலின் மூலமாக ஒவ்வொன்றிற்கும் காரணங்களைக் கண்டுபிடித்தனர். அதற்குப் பரிகாரங்களையும், நேர்த்திக் கடன்களையும் செய்தனர். அவை காலப்போக்கில் நம்பிக்கைகளாக மாற்றம் பெற்றன. மக்கள் கொண்ட நம்பிக்கைகள் பழக்கவழக்கங்களால் சடங்குகளாக மாற்றம் பெற்றுள்ளன. இவற்றில் நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் மிகுந்த தொடர்புடையவைகளாக உள்ளன. மக்களால் வழிவழியாகப் பின்பற்றப்பட்டவையே நம்பிக்கை எனப்படுகிறது. மக்களின் தன்னல உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் பெரும்பாலும் மக்களிடம் தோன்றும் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை. மக்களின் அன்றாட வாழ்வியல் செயல்களிலிருந்து அனைத்துக் கூறுகளிலும் நம்பிக்கைகள் இடம்பெற்றுள்ளன. இந்நம்பிக்கைகளையும் இதனைத் தொடர்ந்த வழிபாடுகளையும் பெருங்குளம் பகுதிகளில் உள்ள அனைத்துச் சிறுதெய்வக் கோயில்களும் வளர்ப்பனவாக உள்ளன.

இக்கிராமங்களில் உள்ள மாரியம்மன், காளியம்மன், பச்சையம்மன் போன்ற தெய்வங்கள் ஒவ்வொரு இடத்திலும் வெவ்வேறு விதமான வடிவங்களில் காணப்படுகின்றன. இத்தெய்வங்களை மக்கள் தங்கள் குறைதீர்க்கும் தெய்வங்களாக நம்புகின்றனர். ஊரைக் காப்பதற்காக காளியம்மனையும், மழைக்காக மாரியம்மனையும், பயிர் பசுமைக்காக பச்சையம்மனையும், பயிர்களை பாதுகாக்க முனியப்பன், வேடியப்பன், கருப்பர், அய்யனார் போன்ற தெய்வங்களையும் வழிபடுகின்றனர்.

இச்சிறுதெய்வ வழிபாடுகளுக்கான பூசைகள் மக்களின் நம்பிக்கை அடிப்படையிலேயே நிகழ்த்தப்படுகின்றன. கோயில்களில் அவரவர் விருப்பத்திற்கேற்ப அபிசேகம் செய்தல், சந்தனக் காப்புச் சார்த்துதல், பூக்கேட்டுப் பார்த்தல், திருமணம் பேசுதல், காதணி விழா நடத்துதல், முடியெடுத்தல், உண்டியலில் காணிக்கை செலுத்துதல், வேல், வெண்கல மணி செய்து வைத்தல் போன்ற பலவகையான நம்பிக்கைகள் மக்களிடம் பரவியிருப்பதைக் காண முடிகின்றது.

**உயிர்ப்பலியிடுதல்**

பழங்காலத்திலேயே தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிட்டு வணங்கும் வழக்கம் மிகுதியாக இருந்துள்ளது. வேதகாலத்தில் பலியிடுவது உண்மையான பக்திக்கு அடையாளமாக் கருதப்பட்டது. பலிகொடுத்தல் என்பது சிறுதெய்வ வழிபாட்டுக் கூறுகளில் ஒன்றாகும். தெய்வத்தின் கடும் சீற்றத்தை நீக்குவதற்காக ஏற்படுத்தப் பெற்ற முறையாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

உயிர்ப்பலி ஒன்றே இறைவனின் கோபத்தைத் தணிக்கும் என்று மக்கள் நம்பினர். இதனை, "அணங்குஅறி கழங்கின் கோட்டம் காட்டி, வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து," எனும் நற்றிணைப பாடலடிகள் மூலம் உணரலாம். இவ்வகையான பலியிடுதலை இக்கிராம மக்கள் குலதெய்வ வழிபாடு, பொதுத்தெய்வ வழிபாடு ஆகிய வழிபாடுகளில் பின்பற்றுகின்றனர். பொதுவாகப் பலியிடுதலை ஒருவகையான நேர்த்திக்கடனாகக் கடைப்பிடிக்கின்றனர்.

மாரியம்மன், காளியம்மன், முனியப்பன், வெள்ளையப்பன், போத்துவீரன், கருப்பர், அய்யனார் போன்ற தெய்வங்களுக்குக் கிடாய்வெட்டு என்ற சடங்கினைத் திருவிழாக்காலங்களில் நடத்துகின்றனர். இந்தக் கிடாய் வெட்டு என்பது ஒரே வெட்டில் ஆட்டுக்கிடாயின் தலையினைத் துண்டிப்பதாகும். துண்டிக்கப்பட்ட கிடாயின் இரத்தத்தை எடுத்து அத்தெய்வத்தின் நெற்றியில் திலகமிட்டு வழிபடுகின்றனர். முனியப்பன் கோயில்களில் முப்பூசை என்ற பெயரில் ஆட்டுக்கிடாய், சேவல், பன்றி என மூன்று உயிரிணங்களையும் பலியிடுகின்றனர். மேலும் புறநானூற்றுப் பாடலடிகள் மூலம் கடவுளுக்குப் புலால் உணவைத்தான் பண்டையத் தமிழர் படைத்துள்ளனர். அவ்வுணவை வைத்துப் பூசைசெய்வது தான் தெய்வத்திற்கு விருப்பமானது என்பதையும் இலக்கியங்களில் உணரமுடிகின்றது. "வாடாப்பூவின் இமையா நாட்டத்து நாற்ற உணவின் உருக்கெழு பெரியோர்க்கு மாற்று அருமரபின் உயர்பலி கொடுமோர் அந்தி விழாவில் தூரியம் கறங்க" விழாவில் பலி என்பது வழிபாட்டு முறைகளில் ஒன்று. விழாக் கொண்டாட்டத்தின் போது ஆடுகளைப் பலியிட்டு ஊருக்கு விருந்து கொடுத்ததற்கானப் பதிவுகள் பல உள்ளன. ஆனால் விழா இல்லாத நாட்களிலும் விருந்து கொடுத்ததை, "விழவுவின்று ஆயினும் படுபதம் பிழையாது, மைஊன் மொசித்த ஒக்கலொடு" என்ற புறநானூற்றுப் பாடலடிகள் கூறுவதைப் போன்று இன்று திருவிழாக்காலங்களில் அல்லது சிறப்புமிக்க நாட்களில் உறவினர்களை அழைத்து ஆடுவெட்டி விருந்து கொடுக்கும் வழக்கத்தை அறியமுடிகிறது.

தேர் இழுத்தலும் அலகு குத்துதலும் தனக்கு ஏற்பட்ட விபத்தின் காரணமாகவும், தன்னைச் சார்ந்தவர்கள் நோய்வாய்ப்பட்டாலோ, அதனை நீக்குதல் பொருட்டு தெய்வத்திடம் வேண்டுதல்களை வைக்கின்றனர். நோய் உள்ளவர்கள் தெய்வத்திற்குப் பூந்தேர், வாகனத்தேர் இழுக்கின்றனர். இதனைப்போன்று ஆண், பெண் என இருபாலரும் சிறிய அளவிளான வேலாயுதத்தை நாக்கிலும், 5 அடி நீளம் முதல் 18 அடி நீளம் வரை உள்ள வேலாயுதத்தை வாயிலும் குத்தி நேர்த்திக்கடனைச் செலுத்துகின்றனர். இதற்கு அலகு குத்துதல் என்று பெயர். இந்நேர்த்திக்கடன் அனைத்து ஊர்களிலும் உள்ள மாரியம்மன், காளியம்மன் மற்றும் நடுவூர் காணியம்மன் திருவிழாவில் நடைபெறுகின்றது. இந்நிகழ்வுகள் இக்கிராமத்தில் உள்ள மாரியம்மன் கோயில் திருவிழாக்களில் நடைபெறும் ஒரு முக்கிய நிகழ்வாக அமைகின்றது. இவ்வாறு தங்கள் உடல் உறுப்புகளை வருத்தி வேண்டிக்கொள்வதால் தாங்கள் நினைத்த காரியம் கைக்கூடுவதுடன் தெய்வம் மனமிறங்கி நன்மை செய்யும் என்ற நம்பிக்கையை வைத்துள்ளனர்.

**திருமணம் தொடர்பான நம்பிக்கை**

அம்மன் தெய்வங்களை வழிபட்டால் திருமணத்தடை நீங்கி விரைவில் திருமணம் நடைபெறுவதாக இக்கிராம மக்கள் நம்புகின்றனர். இத்தெய்வக் கோயில்களில் உள்ள தலவிருட்ச மரங்களில் சிறிய மஞ்சள் நூலில் மஞ்சள் கிழங்கைக் கட்டி வழிபட்டுச் செல்கின்றனர். அம்மனின் பெயர்களைக் காகிதத்தில் 108, 1008 முறை எழுதி அவற்றை மாலையாகத் தொடுத்தும் அம்மனுக்கு அணிவித்து தங்களது வேண்டுதல்களை வைக்கின்றனர். மேலும் தொட்டில் கட்டுதல் என்ற சடங்கின் மூலம் அரசமரத்தை அபிசேகம் செய்தல் தெய்வத்திடம் தங்கள் வேண்டுதல்கள் நிறைவேறவும், துன்பங்கள் தீர்ந்து நன்மையடையவும் நேர்த்திக் கடன்களைச் செலுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

இதன் அடிப்படையில் அபிசேகம் செய்ய விரும்புபவர்கள் பூசைக்குத் தேவையான பொருட்களைப் பூசாரியிடம் கொடுத்து அபிசேகம் செய்யுமாறு கூறி வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டின் மூலம் தாங்கள் நினைத்த காரியம் நன்றாக நிறைவேறும் என இக்கிராம மக்கள் நம்புகின்றனர்.

**வேளாண்மை நம்பிக்கைகள்**

மரபு வழியாக ஒவ்வொரு தொழிலிலும் பல நம்பிக்கைகள் காலங்காலமாகத் தொடர்ந்து வருகின்றன. வேளாண்மைத் தொழிலுக்கும் பெருங்குளம் கிராம மக்களுக்கும் சிறுதெய்வங்களுக்கும் இடையே உள்ள உறவு நிலையானது. விதை விதைப்பிற்குத் தேவையான மழைப்பொழிவைப் பெற மாரியம்மனையும், பயிர் பசுமையடைய பச்சையம்மைனையும், அப்பயிர் எவ்வித சேதமும் இன்றி பாதுகாப்பாக வளர வேடியப்பன், முனியப்பன் போன்ற காவல் தெய்வங்களையும் வழிபடுகின்றனர்.இவ்வழிபாட்டின் மூலம் பயிர்களின் விளைச்சல், நோய் மற்றும் இயற்கையினால் பாதிப்பு அடையாமலிருக்கவும், விளைச்சல் பெருகவும் இத்தெய்வங்களை வழிபடுகின்றனர்.

தானியப்பயிர்கள் அறுவடை செய்யும் நிலையில் (நெல், வாழை, பருத்தி, நிலக்கடலை, கரும்பு) விளைபொருட்களை அப்பகுதியில் உள்ள தெய்வத்திற்கு அல்லது அவர்களது குலதெய்வத்திற்குப் படைத்து வீட்டிற்கு எடுத்துச்செல்வர். சில இடங்களில் வேண்டிக்கொண்ட தெய்வத்தை நினைத்து கூம்புவடிவில் பிடிமண் பிடித்து வைத்து அதற்குப் பூசை செய்து வழிபடுவர். அப்பொழுது வழிபாட்டிற்குரிய பூ, பழம், கற்பூரம், தேங்காய், பத்தி போன்ற பூசைப் பொருட்களுடன் அரிசி, அவல் கலந்தும் வழிபடுவர். வழிபடும் தெய்வம் இரத்தப்பலி பெறுபவையாக இருந்தால் சேவல் பலிகொடுத்தும் வழிபடுவர்.

அறுவடை செய்த தானியத்தில் கோயிலில் சென்று படைப்பதற்காக ஒரு குறிப்பிட்ட அளவு தானியத்தை எடுத்து வீட்டில் உள்ள பூசையறையில் வைப்பர். இத்தானியத்தைத் திருவிழாக்களின் போது காணிக்கையாகச் செலுத்துவர். காணிக்கை செலுத்திய பிறகு அத்தானியத்தில் இருந்து ஒருபிடி மீண்டும் எடுத்துச்சென்று வீட்டிலுள்ள விதை தானியத்தில் கலந்து வைப்பர். அந்த தானியம் விதைக்கப்படும் போது விளைச்சல் அதிக அளவில் கிடைக்கும் என நம்புகின்றனர்.

மேலும் வேளாண்மைத் தொழில் செழிப்பதற்கு முக்கிய காரணமாக இருக்கும் கால்நடைகளின் பெருக்கமும் இன்றியமையாததாகின்றது. தாங்கள் வளர்க்கும் கால்நடைகள் பெருகுவதற்கும், நோய், இறப்பு போன்றவற்றிலிருந்து காப்பதற்கும் இத்தெய்வங்களை வழிபடுகின்றனர். அத்தெய்வங்களுக்கு நேர்த்திக்கடனாக விழாக்களின் போது சேவல், ஆடு போன்றவற்றைப் பலியிடுகின்றனர். இவ்வாறு தெய்வங்களுக்குப் (முனியப்பன், காளியம்மன்) பலிதருவதன் மூலம் இத்தெய்வங்களின் அருள் கிடைக்கும் என்று நம்பிக்கை வைத்துள்ளனர்.

**திருவிழாக்கள்**

ஆண்டு முழுவதும் உழைத்துத் தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் மகிழ்ச்சியோடு இருக்க வைப்பதற்காகத் திருவிழாக்களைக் கொண்டாடுகின்றனர். இவ்விழாக்கள் மக்களின் பொருளாதார வசதிக்கேற்ப அமைகின்றன. இவ்விழாக்களின் மூலமாக நாட்டுப்புறத் தெய்வங்களின் வழிபாட்டுக் கூறுகள் நம்பிக்கைள், சடங்குகள் மற்றும் அம்மக்களின் பண்பாட்டுக்கூறுகள் ஆகியன நன்கு புலப்படுகின்றன. மக்கள் தங்களின் கவலைகளை மறந்து உற்சாகமாக இருப்பதற்காகவே திருவிழாக்களைக் கொண்டாடி வருகின்றனர். பசியும், பிணியும், பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்கப் பண்டைத் தமிழர்கள் திருவிழாக்களைக் கொண்டாடியதாகச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் குறிப்பிடுகின்றன.

திருவிழா “விழா என்னும் திறந்த வாசல் வழியே தான் நம் நாட்டு மக்களை அறிந்து கொள்ள முடியும்” என்கிறார் தாகூர். மனித சமுதாயம் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்திருந்த போதிலும் அனைத்துச் சமுதாய மக்களும் ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்கள்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

ஆகும். விழா என்பது வழிபாட்டின் இறுதிநிலை. நாள்தோறும் நாம் தெய்வத்தை வணங்கினாலும் சிறப்பு வழிபாடாக இருப்பது விழா. உறவுகள் ஒன்றிணையவும், ஊர்மக்கள் அனைவரும் மகிழ்வைக் கொண்டாடவும் விழாக்களே முதன்மையாக அமைகின்றன. இன்று மக்களின் பண்பாட்டிணை அடையாளப்படுத்துவது விழாக்களாகும். அந்த விழாக்கள் தான் அன்று முதல் இன்றுவரை மனித சமூகத்தை உயிர்ப்போடு வைத்திருப்பது மட்டுமல்லாமல் ஓர் சமூகப் பின்னிணைப்பையும் உருவாக்கித் தருகின்றன. இத்திருவிழாக்களின் மூலம் மக்களின் சமுதாய ஒற்றுமையையும், பண்பாட்டு வளர்ச்சியையும் காணமுடிகின்றது. இதனை,

“மணிஅரை யாத்து மறுகின் ஆடும் உள்ளி விழவின் அன்ன” “முந்நீர் விழவின் நெடியோன்”, “அந்தி விழாவில் தூரியம் கரங்க” என்ற சங்கப்பாடலடிகள் மூலம் உணரமுடிகின்றது. சங்கப்பாடல்கள் விழாவினை விழவு, விழா, சாறு என்று வகைப்படுத்திய போதும் விழா என்ற சொல்லே பெருகி நிற்கின்றது என்பதன் மூலம் பழந்தமிழர் விழாவிற்குக் கொடுத்த முக்கியத்துவத்தை உணரமுடிகின்றது. விழாக்களைக் காண சாரைச்சாரையாய் ஊர்ந்து செல்லும் எறும்புகளைப் போல மக்களும் திருவிழாவினைக்காண ஒன்று கூடுவதை இயல்பாகக் காணமுடிகின்றது. ஊர்விட்டு ஊர்ச்சென்று மக்கள் விழாவினைக் கண்டுகழித்தனர் என்பதனை, “மூதூர் விழவுக்காணூ உப்பெயரும்” எனும் பதிற்றுப்பத்துப் பாடலடி உணர்த்துகின்றது.

விழாக்காலத்தில் மக்கள் எங்கிருந்தாலும் அவர்களுடைய சொந்த ஊருக்கு விழாக்கொண்டாட வருவார்கள் என்பதை, “சென்மோ, பெரும! எம் விழவுடை நாட்டு” எனும் புறநானூற்றுப் பாடலடி உணர்த்துகின்றது. மக்கள் அனைவரும் தம் சொந்தஊரில் சிறுதெய்வங்களுக்குத் திருவிழாக்கள் நடத்தும்போது வந்துவிடுகின்றனர். அவ்வாறு கூடும்போது உறவுகள் அனைத்தும் ஒன்றினையவும், ஒற்றுமை உணர்வு மேம்படவும் விழாக்கள் உறுதுணை செய்கின்றன. மேலும் மக்கள் மகிழ்வோடும் ஆரவாரத்தோடும் விழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்ததை நற்றிணைப் பாடலடிகள் உணர்த்துகின்றது.

இத்திருவிழாக்கள் சாமிகும்பிடுதல் என்னும் பெயரில் கிராமங்கள் தோறும் நடைபெறுகின்றன. இத்திருவிழாக்களில் அம்மனின் அருள் வெளிப்படுவதுடன், மக்களின் செயல்கள் ஒவ்வொன்றும் முக்கியமான வாழ்வியல் குறிக்கோள்களை உள்ளடக்கியவையாக உள்ளன எனலாம். திருவிழாக்கள் உழைக்கும் மக்களின் வாழ்வியல் துன்பத்தைப் போக்கி இன்பத்தையும் மகிழ்ச்சியையும் தரும் வகையில் அமைகின்றன. தம்மை வாழவைக்கும் தெய்வங்களுக்குச் சிறப்புச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் தாம் வழிபடும் தெய்வங்களுக்கு விழாக்களை எடுக்கின்றனர திருவிழாக்காலங்களில் ஏழைப்பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வுகளும் சமுதாயப் பாகுபாடும் முதன்மை பெறுவதில்லை. கிராமமக்கள் அனைவரும் ஒன்றுக்கூடிக் கிராமத்தின் நன்மைக்காகத் தெய்வங்களுக்கு விழா எடுத்துச் சிறப்புச் செய்வது மக்களின் மனங்களின் இயல்பாக அமைகின்றது.

விழா நடைபெறும் காலமும் நாட்களும் இக்கிராமத்தில் பெரும்பாலும் சித்திரை, வைகாசி மாதங்களில் மாரியம்மன் கோயில்களில் திருவிழா நடைபெறுகின்றது. இம்மாதத்தில் வயல் வேலைகள் முடிந்து ஓய்வாக இருப்பதால் இம்மாதத்தை விழா நடத்துவதற்காகத் தேர்ந்தெடுத்துள்ளனர். மேலும் சில கிராமங்களில் தங்களின் வசதிக்கேற்ப ஆனிமாதம், ஆவணி மாதம் என வைத்துள்ளனர். ஒவ்வொரு ஆவணி மாதமும் கிராமப்புரங்களில் இரவு நேரத்தையே விழா நிகழ்ச்சிகள் நடத்துவதற்குத் தேர்ந்தெடுத்துள்ளனர். மேலும் மக்கள் கோடை காலத்தில் திறந்தவெளியில் மகிழ்வுடன் இரவுப்பொழுதைக் கழிப்பதற்கு ஏற்ற வகையில் கோடைக்காலமான சித்திரை மாதத்தைத் தேர்ந்தெடுத்துள்ளனர். விழாக்கள் சிற்றூர்கள் முதல் பேரூர் வரை கொண்டாடப்பட்டன.

கிராமப்புறங்களில் பொதுவாக மூன்று நாட்கள் முதல் ஏழு நாட்கள் வரை திருவிழா கொண்டாடுகின்றனர். செவ்வாய்க்கிழமை நாட்களில் கூழ்ஊற்றுதல், புதன்கிழமை மாவிளக்கு மற்றும் பலியிடுதல் நடைபெறுகிறது. வியாழக்கிழமை தேர்த்திருவிழாவும் மஞ்சள் நீராட்டு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

விழாவும் நடைபெறுகின்றன. இந்த விழா நிகழ்வுகளும், நாட்களும் ஊருக்கு ஊர் வேறுபடுகின்றன. திருவிழா நிகழ்வுகள் திருவிழா நடைபெறும் நாட்கள் ஊருக்கு ஊர் மாறுபட்டாலும் வழிபாட்டு முறைகளில் பெரிதளவு வேறுபாடு இருப்பதாய்த் தெரியவில்லை. கோயிலுக்குப் புதியதாகச் சிலை செய்யப்பட்டிருந்தால் அவற்றிற்கு கண் திறப்பது, கண் திறந்த சிலைக்கு வழிபாடு செய்தல், பொங்கல் வைத்துப் படையலிடுதல், கூழ்ஊற்றுதல், மாவிளக்கு வைத்தல், முளைப்பாரி எடுத்தல், நேர்த்திக்கடன் செலுத்துதல், அலகு குத்துதல், பூந்தேர் இழுத்தல், மாறுவேடம் அணிதல், அக்னிச்சட்டி எடுத்தல், பூமிதித்தல் ஆகிய நிகழ்வுகள் அனைத்துக் கிராமச் சிறுதெய்வக் கோயில்களிலும் நடைபெறுகின்றன.

**முடிவுரை**

கோயில் பண்பாடுகளில் பெருங்குளம் கிராமப்புற சிறுதெய்வக் கோயில்களின் திருவிழாக்களும் வழிபாடுகளும் கிராம மக்களிடையே ஓர் உறவுப் பாலமாக அமைந்து கிராமியப் பண்பாட்டை வளர்க்கின்ற கருவியாக விளங்குகின்றன. சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற திருவிழாக்கள் மக்களின் மறுபக்கத்தைக் காட்டுகிற வெளிப்பாடாகத் தோன்றுகின்றன. கிராம மக்கள் தாங்கள் வணங்கும் தெய்வ வழிபாட்டு விழாக்களுக்குத் தங்கள் உறவினர்களை அழைத்துவந்து விருந்தோம்பல் செய்கின்றனர். அதே போல அவர்கள் ஊரில் நடைபெறும் தெய்வ விழாக்களுக்கு இவர்கள் சென்று விருந்து உண்டு உறவைப் பலப்படுத்துகின்றனர். இப்பண்பாட்டு மரபை இன்றும் இக்கிராம மக்களிடையே காணமுடிகின்றது. கோயில் விழாக்களின் மூலம் அன்பு, பண்பு, பழக்கவழக்கம், மனிதநேய உணர்வு, மகிழ்ச்சியைப் பகிர்ந்துகொள்ளும் பரந்த சிந்தனை முதலிய பல்வேறு பண்பாட்டுக் கூறுகளைக் காணமுடிகின்றது. இத்தகைய பண்பாட்டைச் சிறுதெய்வ விழாக்கள் உருவாக்கித் தருகின்றன. அந்த மரபை இன்றும் இக்கிராம மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர் என்பதுக் குறிப்பிடத்தக்கது.

**அடிக்குறிப்புகள்**

1. முனைவர் செ.சாந்தி, முனைவர் கா.பரந்தாமன், ஞா.புர்ணிமாதிலகம், ரா.ராதா, முனைவர் ஆறு. சரவணக்குமார். "ஆவுடையார்கோயில் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் - ஒரு வரலாற்றுப் பார்வை." *Journal of Modern Thamizh Research* Volume- 7, Issue-1, Page 762-776, Raja Publication,Trichy-2019.
2. முனைவர் செ.சாந்தி. "ஆவுடையார்கோயில் வட்டாரக் கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்* E-ISSN: 2581-7140 Vol. 2: Issue - 1, July 2019, P 83-91, Publication, www.ijtlls.com
3. நா.பாலுசாமி, *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி* - 1, ப.எ:719.
4. ந.ப.துரைசாமி, *தருமபுரி பாறை ஓவியங்களில் சிந்துவெளி எழுத்துக்கள்*, ப.எ:18.
5. நா.பாலுசாமி, *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி* – 9, ப.எ:720. ப.எ:658.
6. தி.சுப்பிரமணியன், *தமிழகத்தொல்லியலும் வரலாறும்* ப.எ:192.
7. *புறநானூறு,* பா.எ:192 வரி:1. 390 வரி:11. பா.எ :97 வரி:18. பா.எ:99 வரி:2. பா.எ:9 வரி:10. பா.எ:381 வரி:5.
8. *தொல்காப்பியம்,* நச்சினார்க்கினியர் உரை, புறத்திரட்டுப்பாடல் :1429. நூ.எ:62
9. *பதிற்றுப்பத்து,* பா.எ:78 வரி:8,9. பா.எ:81 வரி:19-23
10. நா.மாக்சியகாந்தி, *தமிழக வரலாற்றில் அதியர் மரபு*, ப.எ:120.
11. *அகநானூறு*, பா.எ:368 வரி:17-18. பா.எ:345 வரி:4.
12. *நற்றிணை*, பா.எ:200 வரி:1.
13. *சிலப்பதிகாரம்*, கடலாடு காதை, வரி:123-125.

14. சி.எஸ்.தேவ்நாத், *உலகமுக்கிய மதங்களும் அவை சொல்லும் உண்மைகளும்* ப.எ:39.
15. *பரிபாடல்*, பா.எ:11 வரி:100.
16. *திருமுருகாற்றுப்படை*, வரி:256.
17. *கலிங்கத்துப்பரணி.* பா.எ:111,112.
18. க.கைலாசபதி, *பண்டையத்தமிழர் வாழ்வும் வழிபாடு*, ப.எ:32
19. கு.சாரதாம்பாள், *கோவை நகர தாய்த்தெய்வ வழிபாட்டு முறைகள்*, ப.எ:14
20. ஆ.கருப்பாயி, *நாட்டுப்புறச் சிறுதெய்வ வழிபாட்டு மரபுகள்*, ப.எ:18.
21. மு.நளினி, *பெண்தெய்வ வழிபாடு தோற்றமும் வளர்ச்சியும்*, ப.எ:11.
22. பி.எல்.சாமி, *தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு*, ப.எ:83.



**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

[1]**ராதா, அ.,** [2]**பரந்தாமன், கா.** "பெருங்குளம் கிராமப்புறக் கோயில் வழிபாடும் மற்றும் திருவிழாக்களும் - ஒரு சிறப்புப் பார்வை." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 122-129. டிஓஐ: 10.5281/zenodo.3628534.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

[1]**Radha, A.,** [2]**Paranthaman, K.** "Temple Worship and Festivals of Perungulam Village - A Special Study." *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 2, no. 2, January 2020, pp. 122-129. DOI: 10.5281/zenodo.3628534.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement: இல்லை**/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# பாலைக்கலி பாதை
# Desert Passage

[1]ல.கு.சு.இராஜ்குமார், முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[1]**L.K.S.Rajkumar**, Research Scholar, Department of Tamil, Thiruvalluvar University, Vellore - 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-3819-8959
[2]முனைவர் ம.செந்தில்குமார், இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்- 632115.
[2]**Dr.M.Senthilkumar,** Associate Professor, Department of Tamil, Thiruvalluvar University, Vellore – 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-0760-8046
**DOI: 10.5281/zenodo.3628543**

## Abstract

*The Tamil people had termed their lands according to their ecological existence. They have named their lands as Kurinji, Mullai, Marutham, Neithal and Palai are the five geographical areas according to its ecological infrastructure. Palai is one of the five lands with distinct type of people who are indulging in robbery and murder. The Sangam poetries has evidences much more on these themes. 'Kalithokai' is one of the Sangam Literature evinces the life of the lover-beloved in terms of the lover's voyage of business over the Palai lands. The fear of the beloved and the consoling nature of the lover can be seen evidently in 'Kalithokai'. Hence, the paper tries to bring forth the details of the domestic life of the Sangam couple and the lover's pass through the Palai.*

**Keywords:** Palai, Tamil type of Land, Desert Passage

தமிழர் தாம் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கேற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வகுத்து வைத்துள்ளனர். இதில் பாலைக்கென தனி நிலம் இல்லை என்றும் குறிஞ்சியும் முல்லையும் திரிந்து பாலையென வழுங்கப்படுகிறது. வேனிற் காலத்தில் தலைவன் பொருளீட்டத் தலைவியை பிரிந்து செல்லும் பாதையின் தன்மையை தோழி தலைவனுக்கு கூறி உரக்கத்தில் தலைவியை விட்டு சற்று தள்ளிச் செல்லும் பிரிவைக் கூட தாங்கிக் கொள்ளாத தலைவியை நீ பிரிந்து சென்றாள் அவள் உயிர் தாங்காள் என்று தலைவனை செலவழுங்கல் செய்தல். பிரிவுத்துன்பம் தவிர்க்க தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு கூறும் தலைவிக்கு தலைவன் பாதையின் தன்மைகளை எடுத்தியம்பும் பாதையின் காட்சிகளை கலித்தொகையின் பாலைக்கலி பாடல்கள் வழியே ஆராய்வதே இக்கட்டுரை.

பாலைப் பாடிய பெருங்கடுங்கோ 35 பாடல்களை கலித்தொகையில் பாடியுள்ளார். பொருள்வாயிற் பிரிவு என்ற பொருண்மையில் தலைவன் வேனிற்காலத்தில் பொருளீட்டத் தலைவியைப் பிரிந்து பாலை நில (வழி) பாதையில் செல்லும் தன்மையைக் குறிப்பதாகும். இச்செய்தி கேட்ட தோழி பாலைக்கலியில் 29 பாடல்களில் தலைவனை நோக்கி கூறுவதாக பாடல் அமைந்துள்ளது. 4 பாடல்கள் தலைவி தலைவனிடத்தில் தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. 1 பாடல் உடன்போக்கில் தலைவனுடன் சென்ற தலைவியை தேடிச் செல்லும் செவிலித் தாய் வழியில் கண்டோரிடம் கேட்பதாகப் பாடல் அமைந்துள்ளது. 1 பாடல் தலைவியின் துன்ப நிலையை தலைவனுக்க பாணன் தூது பேசுவதாக பாடப்பட்டுள்ளது.

பாதை என்னும் சொல்லுக்கு வழி என்பது பொருள். வழிப்பாதை என்று குறிப்பிடும் வழக்கமும் உள்ளது. வழியில் இருக்கக் கூடிய சாலை முதலான போக்குவரத்து வசதியினை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

வழிப்பாதை என்னும் இந்தச்சொல் குறிக்கிறது எனலாம். ஷபாதை' ஒற்றையடி வழி, மிதவை, துன்பம் எனக் கழகத் தமிழகராதி பொருள் தருகிறது. (ப.665)

**பாதை**

பாலை நிலத்தில் வேனிற்காலம் நண்பகல் வேளையில் பிரிவெழுக்கம் நிகழும், பாலை நிலம் என்பது முல்லை குறிஞ்சி நிலங்களிலுள்ள மரஞ்செடி கொடிகளின் வளம் வெயிலால் உலர்ந்து, அந்நிலங்களை விட்டுப் பிரிந்த வறண்ட தன்மையைக் குறிப்பதாகும். நீர் இன்மையால் பசுமையின்றி மரங்கள் வறட்சியை அடைந்தன. நிழல் இல்லாமை, பசியால் வாடியலையும் கொடிய விலங்குகள் இருத்தல் அவ்வழிச் செல்வோர்க்குத் துன்பத்தை தரும். பிரிந்திருக்கும் தலைவிக்கு அருளுணர்வு பிறத்தற்கு ஏதுவாகிறது. பிரிந்து போகின்றவனைப் பற்றிக் கூறும் அனைத்துமே பாலையாகும்.

மாசி முதல் ஆடியீராக உள்ள ஆறு மாதமும் - பின்பனி, இளவேனில், முதுவேனில் - மழையின்றி இருக்கும் அதனால் இந்த காலம் அயலூர்க்குச் செல்வதற்கு ஏற்ற காலமாகும். வேறிடத்திற்கும், வேறு நாட்டிற்கும் செல்வோர் அவ்வறண்ட நிலத்தின் வழியாகவே செல்ல வேண்டிருப்பதால் நண்பகல் வேளையில் வெயிலின் கொடுமை மிகுதியாக இருக்கும். எனவே இக்காலமே பிரிவுக்கு ஏற்றதாக உள்ளது.

**...அவற்றுள்**
**நடுவண் ஐந்திணை நடுவண தொழிய (தொல்.948)**

தமிழர்கள் தாம் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்பக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பிரித்தனர். குறிஞ்சியும் முல்லையும் தம்முடைய இயல்பில் இருந்து திரிந்த பகுதியை பாலை என்று வழங்கினர்.

**நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே (தொல்.957)**

குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்தப் பகுதி பாலையாகும். மேலும் சிலப்பதிகாரத்திலும் இதனை,

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து**
**நல்லியல் பிழிந்து நடுங்குதும் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும் (சிலப்.காடுகாண்காதை.64-65)**

இந்நிலமானது தன்னுடைய நல்ல இயல்புகளை இழந்து வழிச் செல்பவர்களை நடுங்கச் செய்யும் தன்மை கொண்டது.

**பிரிவு**

பிரிவின் வகைகளை தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

**இருவகைப் பிரிவும் நிலை பெறத் தோன்றலும்**
**உரியது ஆகும் என்மனார் புலவர் (தொல்.959)**

தலைவியை தலைவன் பிரிந்து செல்வதும், தலைவன் தலைவியுடன் உடன்போக்கில் தாய் தந்தையரைப் பிரிவதுமாகிய இருவகைப் பிரிவுகள் நிகழும். பாலைத் திணைக்குப் புறத்திணையாக வாகை திணையை தொல்காப்பியர்,

**வாகை தானே பாலையது புறனே (தொல்.1019)**

குறிப்பிட்டுள்ளார்.

**பாலை பாதை**

வேனிற்காலத்தில் பொருளீட்டப் பிரிந்து செல்லவிருக்கும் தலைவனிடத்தில் தோழியானவள்,

**சீறு அருங் கணிச்சியோள் சினவலின் அவ்எயில்**
**ஏறு பெற்று உதிர்வன போல் வரை பிளந்து இயங்குநர்**
**ஆறு கெட விலங்கிய அழல் அவிர் ஆர் இடை (பாலைக்கலி.2:6-8)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பாலை நிலத்தின் பாதைக் குறித்து தோழி, சிவபொருமான் முப்புரங்களை எரித்ததால் வெடித்து சிதறிய கோட்டையைப்போல வேனிற்காலத்தின் வெப்பத்தால் மலைகள் வெடித்துச் சிதறி பாதைகளை அடைத்துள்ளது. பாலை நிலத்தில் வாழும் மறவர்கள் அப்பாதை வழியேச் செல்வேரைத் தாக்கி பொருள் பொறும் தன்மையுடையவர் என்பதை,

**வலிமுன்பின் வல்லென்ற யாக்கை புலிநோக்கின்**
**சுற்றமை வில்லர் சுரஜவளர் பித்தையர்**
**அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் தாம்**
**கொள்ளும் பொருள் இலர் ஆயினம் வம்பலர்**
**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயிர்வௌவலின் (பாலைக்கலி.4:1-5)**

மறவருடைய பார்வையானது புலியின் பார்வைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. கொள்ளும் தொழிலையுடைய புலியின் கண்கள் அச்சம் தரும்வகையில் இருக்கும். அத்தகைய குணம் கொண்டவர்கள் பாதையில் எதிர்படுவர். சற்றும் எதிர்பாரத வகையில் அம்புகள் கொண்டு உயிர் மாய்த்து பொருட்களை பறித்துச் செல்லும் மறவர் வாழும் பாதை அது. அப்பாதை,

**மாஅல் யானையொடு மறவர் மயங்கித்**
**தூறுஅதர் பட்ட ஆறு மயங்கு அருஞ்சுரம் (பாலைக்கலி.5:2-3)**

பெரிய கால்களையுடைய யானைகள் நடந்து தேய்ந்துப் போன பாதைத் தடமும், மறவர்கள் கூட்டம் கூட்டமாக பொருள் தேடிச் சென்றதால் உண்டான பாதைத் தடங்கள் அவ்வழிச் செல்வோருக்கு குழப்பத்தை விளைவிக்கிறது. சரியான பாதை எது என்று அறிந்துக் கொள்ள முடியாத அளவிற்கு வழித்தடம் அமைந்திருப்பதாக தோழி தலைவனுக்கு கூறுகிறாள்.

பிரிவு அறிந்த தலைவி தலைவனித்தில் தன்னையும் உடன் அழைத்துச் செல்லும் படி வேண்டுகிறாள். தலைவன் அவளுக்கு மறுமொழியாக,

**மரையா மரல்கவர பாரி வறப்ப**
**வரைஓங்கு அருஞ்சுரத்து ஆர்இடைச் செல்வோர்**
**சுரைஅம்பு மூழ்கச் சுருங்கி புரையோர்தம்**
**உள்நீர் வறப்பப் புலர்வாடு நாவிற்கு**
**தண்ணீர் பெறாஅத் தடுமாற்று அருந்துயரம்**
**கண்ணீர் நனைக்கும் கடுமையை காடு (பாலைக்கலி.6:1-6)**

வெயில் கொடுமையால் பசுக்கள் உண்பதற்கும் புல் இன்றி அவை உடல் மெலிந்து காணப்படுகிறது. பசியால் கள்ளிச் செடிகளைத் தின்னும். வேனில் காலமாதலால் மழை இல்லாமல் அருந்துவதற்கு கூட அங்கு நீர் இன்றி இருக்கும். ஆறலைக் கள்வர்கள் நிறைந்த அப்பகுதியில் நீர் இன்மையால் அவர்களும் மெலிந்து காட்சியளிப்பர். கண்ணீரைத் தவிர ஒரு சொட்டு நீரும் இல்லாத பாதையாகும்.

வெப்பத்தால் உடல் மெலிந்த யானைகள் தண்ணீர் தேடித் திரியும் பாதை அங்கு கானல் நீரை உண்மை என நினைத்து பின் தொடரும் களிறுகள்,

**வேனில் உழந்த வறிது உயங்கு ஓய்களிறு**
**வான் நீங்கு வைப்பின் வழங்காத் தேர்நீர்க்கு அவாஅம் (பாலைக்கலி.7:1-2)**

இத்தகைய பாலை நிலத்தில் நீ சென்று ஈட்டும் பொருள் தலைவியைக் காட்டிலும் பெரிதல்ல எனத் தோழி கூறினாள்.

மன்னனின் கொடுங்கோல் ஆட்சியை பாலை நிலத்தில் காயும் வெயிலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**கொடிது ஓர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு**
**கடுகுபு கதிர் மூட்டிக் காய் சினம் தெறுதலின்**
**உறல்ஊறு கமழ் கடாத்து ஒல்கிய எழில்வேழம்**
**வறன் உழு நாஞ்சில் போல் மருப்பு ஊன்றி நிலம்சேர**
**விறல் மலை வெம்பிய போக்கு அருவெஞ்சுரம்**
**சொல்லாது இறப்பத் துணிந்தனிர்க்கு ஒரு பொருள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

**சொல்லுவது உடையேன் கேண்மின் மற்று ஐஇய (பாலைக்கலி.8:1-7)**

இரக்கமின்றி வருந்தி துன்பத்தை உண்டாக்கும் கதிரவன், அதனால் மெலிந்து வலிமை இழந்த யானைகள் தம்முடைய தந்தத்தை நிலத்தில் ஊன்றி நிலத்தை உழும் கலப்பைப் போல சோர்ந்து விழ்ந்து கிடக்கின்ற பாதை. மலைகளும் கதிரவன் வெப்பத்தால் வாடும். இத்தகைய காட்டுப்பகுதியில் எம்மிடம் சொல்லாமல் கடந்து போக எண்ணினாய் என வருந்துகிறாள் தோழி.

சுட்டு எறிக்கின்ற வெயிலில் அந்தணர் நிழலுக்காக குடைப்பிடித்து செல்லும் காட்சியை,

**எறித்தரு கதிர்தாங்கு ஏந்திய குடை நிழல் (பாலைக்கலி.9:1)**

அத்தகைய பாதையில் என்னுடைய மகளும், பிறளுடைய மகன் ஒருவனும் உடன்போக்குச் சென்றனர். அவர்களை கண்டீர்களா என செவிலித் தாய் கேட்கிறாள். வெயிலின் தாக்கத்தால் மரங்கள் தங்களுடைய பசுமையை இழந்த நிலையை,

**வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின் (பாலைக்கலி.10:4)**

மரம் கிளைகள் இன்றி வாடி வேரொடு சாய்ந்து விழும் நிலையில் பாதை உள்ளது. தழைகள் இல்லாத வெறும் மரங்களாகவே காட்சி தருகின்றன.

**கொலை அஞ்ச வினைவரால் கோல் கோடியவன் நிழல்**
**உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம் (பாலைக்கலி.10:6-7)**

கொலைத் தொழிலுக்கும் அச்சாத அரசவினைஞர்களால் நெறிமுறை இல்லாமல் பொருள் பெற்றதால் வளைந்த செங்கோல் கொண்ட அரசனின் ஆட்சியின்கீழ் உள்ள நாட்டைப் போன்று, உயர்ந்த மரங்கள் நிறைந்த வெப்பம் மிகுந்த காடுகள் கொண்ட பாதை.

**அடிதாங்கும் அளவு இன்றி அழல் அன்ன வெம்மையால்**
**கடியவே கனங்குழாஅய் காடு என்றார் அக்காட்டுள்**
**துடிஅடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்**
**பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே**
**இன்பத்தின் இகந்து ஒரீஇ இலை தீந்த உலவயால்**
**துன்புறூஉம் தகையவே காடு என்றார் அக்காட்டுள்**
**அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை**
**மென்சிறகரால் ஆற்றும் புறவு எனவும் உரைத்தனரே**
**கல்மிசை வேய்வாடக் கனை கதிர் தெறுதலான்**
**துன்னரூஉம் தகையவே காடு எனறார் அக்காட்டுள்**
**இன்நிழல் இன்மையான் வருந்திய மடப் பிணைக்குத்**
**தன்நிழலைக் கொடுத்து அளிக்கும் கலை (பலைக்கலி.11:6-7)**

மென்மையான தலைவியின் பாதங்கள் பாலைவனப் பாதையின் வெப்பத்தை தாங்கிக் கொள்ளாது. நீர் வேட்கையால் திரியும் யானைகள் கலங்கிய சிறிதளவு நீரை பெண் யானை பருக பின்னர் எஞ்சிய சிறிதளவு நீரை ஆண் யானை உண்ணும் அளவு பாதை உள்ளது. புறாக்கள் வெப்பத்தால் வாடி காணப்படும். மூங்கில் மரங்களும் காய்ந்து வழிச் செல்வோரை வருத்தமுறச் செய்யும். கலைமான் தன்னுடைய நிழலை பெண் மானுக்கு தந்து உயிரை வதைக்கும் வெயிலின் தன்மை உள்ளது.

இல்லற வாழ்க்கைக்கும், தன்னைச் சார்ந்தோர்க்கும், தன்னை நாடி வருவோர்க்கும் வழங்க பொருள் தேவைப்படுகிறது. இத்தகைய பொருளானது வேனிற்காலத்தில் வெளி ஊர்கள், அயல் நாடுகளுக்குச் சென்று பொருளீட்ட வேண்டும். அதற்காக தலைவன் செல்லும் பாலை நிலத்தின் பாதையின் தன்மை வெயிலின் தாக்கத்தால் பாதித்துள்ளது. பாதையின் ஆபத்துக்கள், விலங்குகளின் நிலை போன்றவை விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**

1. பரத்துவாசி நச்சினார்க்கினியர் (உரையாசிரியர்), (2002) - *கலித்தொகை*, முல்லை நிலையம், தி. நகர், சென்னை – 17.
2. விசுவநாதன். அ. (உரையாசிரியர்), (2011) - *கலித்தொகை*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை - 98
3. இளம்பூரனார் (உரையாசிரியர்), (2010) - *தொல்காப்பியம்* (எழுத்து - சொல் - பொருள்), சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை - 14.
4. கழகப் புலவர் குழுவினர் (தொத்தது), (2017) - *கழகத் தமிழ் அகராதி*, திருநல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.
5. வேங்கடசாமி நாட்டார்.ந.மு. (உரையாசிரியர்), (2010) - *சிலப்பதிகாரம் மூலமும் உரையும்*, ராமையா பதிப்பகம், நாமக்கல்.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**
[1]**இராஜ்குமார், ல.கு.சு.,** [2]**செந்தில்குமார், ம.** “பாலைக்கலி பாதை.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 130-134. டிஓஐ: 10.5281/zenodo.3628543.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
[1]**L.K.S.Rajkumar.** [2]**Senthil Kumar, M.** “Desert Passage.” *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 130-134. DOI: 10.5281/zenodo.3628543.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# ஆநிரை வளர்ப்புத் தொழில்நுட்பம் அன்றும் - இன்றும்
# Diary Farming Technology- Ancient and Modern

**முனைவர்.ஆ. ராஜகுமாரி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊத்தங்கரை.
**Dr. A Rajakumary,** Assistant Professor of Tamil, Adhiyaman Arts & Science College for Women, Uthangarai.
ORCiD: https://orcid.org/0000-0002-8093-8087
**DOI: 10.5281/zenodo.3628547**

## Abstract

*According to Hindu mythology, cattle farming refers to wealth. It becomes inseparable to human beings, because of it's various needs they render in day to day life. Since 'Sangakalam' the people of 'Mullai' were practiced to a well mannered cattle livestock farming in their farms. Those peoples were called in the names idayar, Aayar, kovalar etc. Even the Kings of Sangam Age had also given a special attention to this field due to it's highly valued diary products. According to the modern diary farming, grazing for a minimum 8 hours is important to yield better milk and for the health of the cows. There are ample evidences in Sangam Literature that Aayar's had spent the entire day for grazing. Works such as 'Mullai Pattu', 'Purananuru' and 'Perumpanattrupadai' has citations on the importance of grazing. But the modern diary farming system believes in technologies, inventions and highly nutritious cattle feed for better yield than grazing them with herbs, shrubs and grass. Most of the vetenarians advice grazing is better for cattle and for better yield. Hence the paper concludes that diary farm technology prevailed in Sangam Literature is much better and advisable for all kinds of environments such as our modern times too.*

**Keywords:** Diary Farming, Technology, Ancient and Modern Century, Sangam Times

### முன்னுரை

ஆநிரை என்றால் செல்வம் என்று பொருள். இவ்ஆநிரைகள் பல்வேறு நிலைகளில் மனிதனுக்கு உதவிசெய்கின்றன. இத்தகைய ஆநிரைகளைச் சங்ககால முல்லை நிலமக்கள் நன்கு பாதுகாத்து வளர்க்கும் முறையை அறிந்து வைத்திருந்தனர். இக்கால நவீன கால்நடைப்பராமரிப்பு தொழில்நுட்பம் மற்றும் சங்கால மக்கள் மேற்கொண்ட கால்நடை வளர்ப்பு முறைகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

### ஆநிரை வளர்ப்பு

பண்டைத் தமிழகத்து நிலப்பிரிவில் முல்லை நிலமும் ஒன்று. இந்நில மக்கள் கால்நடை வளர்ப்பில் தங்களை ஈடுபடுத்தி வந்தனர். இவர்கள் ஆடு, மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் ஆயர் எனவும், இடையர் எனவும் கோவலர் எனவும் அழைக்கப்பட்டனர். இவ்ஆயர்களுக்குக் கால்நடை வளர்ப்பு இயல்பான தொழில் என்பதை, **"ஆடுடை இடைமகன்"**[1] **(நற்.266:3), வன்கை இடையன் (நற்.169:7)** என்ற நற்றிணை வரிகளின் வழி அறியமுடிகின்றது.

### ஆநிரைகளின் பயன்பாட்டு சிறப்புகள்

ஆநிரைகளை மன்னர்கள் பேணிக்காத்தனர். பசுவின்பால் மட்டும் இன்றி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பால்பொருட்களும் கூடப்பலவழிகளில் மன்னர்களுக்குப் பயன்பட்டன. நெய்வேள்விகள் செய்ய முக்கியமாகப் பயன்பட்டது என்ற செய்தியைப் புறநானூறு எடுத்துரைக்கின்றது. **"காடு என்றா நாடு என்று ஆங்கு…"[2] (புறம்:166:19)** காடு என்றும் நாடு என்றும் சொல்லப்பட்ட அவ்விடத்தில் காட்டுள் ஏழு வகைப்பட்ட பசுவானும், நாட்டுள் எழுவகைப்பட்ட பசுவானும் தட்டுப்பாடின்றி, நீர் நாணும்படி நெய்யை வழங்கினாய், எண்ணிறப்ப பல வேள்விகளைச் செய்தாய் என்று புலவர் புகழ்கிறார். இப்பாடல் மூலம் வேள்விக்கு நெய் பயன்படுத்தப்பட்டது என்றும், பசுக்களில் பல இனங்கள் இருந்தன என்றும் தெரியவருகின்றது. மன்னர்களால் பெரிதும் மதிக்கப்பட்ட பசுக்கூட்டத்திற்கு உரிய பாதுகாப்பு அளிக்கப்பட்டது.

**மேய்ச்சல் பகுதிகள்**

கறவைப்பசுக்கள் நல்ல பலன்தரவேண்டுமானால் அவற்றைச் சரிவரப் பராமரிக்க வேண்டும். இன்றைக்கு ஆடு, மாடு முதலானவற்றின் மேய்ச்சலைப் பொறுத்தவரை ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம் அவற்றை மேய்ச்சலில் ஈடுபடுத்த வேண்டும் என்றும், அப்போது தான் அவற்றுக்கான முழு உணவும் உடற்பயிற்சியும் உடல் ஆரோக்கியமும் அறிவுத்தப்படுகிறது. இக்கருத்தினை சங்ககால மேய்ச்சல் பாங்கோடு ஒப்பிடுகையில் கால்நடைகளின் மேய்ச்சலுக்கு அவர்கள் அதிக முக்கியத்துவம் கொடுத்தனர் என்பது தெரிய வருகின்றது. இதை உறுதிப்படுத்தும் வகையில் காலையில் மேய்ச்சலுக்குச் சென்று மாலையில் வீடு திரும்பும் தாய்ப்பசுக்கள் குறித்த செய்தி முல்லைபபாட்டில் இடம் பெற்றுள்ளது.

**சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்
நடுங்குசுவல் அசைத்த கையள் கைய
கொடுங் கோற் கோவலர் பின்னின்று உய்த்தர
இன்னே வருகுவர் தாயர் என்போள்[3] (முல்.பா.12-16)**

இவ்வாறு மாடுகள் நன்றாக மேய்வதற்கு முதல் தேவை நல்ல மேய்ச்சல் நிலம், புல்மேய்ந்து பால்சுரக்கும் பசுக்களைப் பற்றிச் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. நல்ல பசும்புல் மேய்ந்த பசுக்கள் பற்றிக் கபிலர் குறிப்பிட்டுள்ளார். கன்று ஈன்ற பசுக்கள் வயிறார புல்லினை மேய்ந்தன என்கிறார்.

**மனைத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்
ஆமா நெடுநிரை நன்புல் ஆர்[4] ( புறம்:117: 4-5)
மேயும் நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோர்
ஆயனை யல்லை…[5] (கலி.107:11-12)**

பசுக்கூட்டம் வயிறாரப் புல் மேய்ந்து மரநிழலில் ஓய்வெடுக்கும் என்றும், புல்வளர்ந்தபெரிய நிலத்தில் மேய்ந்த பல பசுக்களோடு கூடிய எருதுகள் மலர்கள் மலர்ந்த மரங்களின் அடியில் தங்கி அசையிடும் என்றும் (புறம்.339) புறநானூறு கூறுகின்றது. புல்வெளிகள் மட்டும்தான் மேய்ச்சல் நிலமாக இருக்க வேண்டியதில்லை. நீர் வற்றிய ஏரிகளும் குட்டைகளும் கூட மேய்ச்சலுக்குப் பயன்பட்டன. அகழியில் நீரில்லாமையால் அங்கும் கன்றுகள் மேய்ந்தன என்பதை புறநானூற்றுப் (355:1-2) பாடல் மூலம் அறியமுடிகின்றது.

ஆடுமாடுகளை ஓட்டுங்காலத்துச் சீழ்க்கையொலி செய்வாராதலின் இவர்தம் வாய்மடிந்து காணப்படும். இவரை **'மடிவாய்க் கோவலர் (பெரும்பாண்.164) மடிவாய் இடையன்'[6] (புறம்.54:11)** என்று குறிப்பிடுவார்கள். மாடுகளை நல்ல மேய்ச்சல் இடமறிந்து, பால்வளம் பெருகப் பசுக்களும், எருமைகளும், ஆடுகளும் விரும்பி வளர்க்கப்பட்டன. ஓரம்போகியார் அவினியை வாழ்த்தும்போது ஆதன் அவினி வாழ்க (ஐங்.3:1-3) என்று கூறுகிறார். பசுக்கூட்டம் பால்வளம் சுரக்க எருமைகள் பலமிகுக என்று இங்ஙனம் தலைவி இல்லறத்தையே நினைத்து ஒழுகினாள் என்று தலைவியின் சொல்லால் குறிப்பிடுகிறார். பசுக்களும் எருமைகளும் நிறைந்த நாடு வளமான நாடாகக் கருதப்பட்டது. முல்லைநிலம் அமையப்பெற்ற

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

நாட்டையுடைய அரசன் வலிமையுடையவனாகக் கருதப்பட்டான். இதனை 'எருமையைப் போன்ற நிறம் பொருந்திய கரிய கற்கள் அமைந்த இடந்தோறும் பசுக்கள் கூட்டம் பரந்து நிற்பது போன்ற கூட்டத்தை உடையவனே! என்று நரிவெரூஉத்தலையார் பாடியுள்ளார். **"எருமை அன்ன கருங் கல் இடைதோறு**[7] **(புறம்.5:1).** இப்பாடலில் பசுக்கள் போல் பரவிய யானைகள் கொண்டவனாக அவன் குறிப்பிடப்பட்டாலும் உவமையில் உள்ள உண்மை பசுக்கூட்டம் நிறைந்த காடு வளமைக்கு எடுத்துக்காட்டாக கூறப்படுகின்றது. இதன்வழி பசுக்கூட்டம் நிறைந்து வளமாக இருந்தது எனலாம்.

**பால் உற்பத்திக்கு ஏற்ற தீவனங்கள்**

பசுக்கூட்டங்களை முல்லை நிலத்தில் மேயவிட்டு ஆயர்கள் சிறிய குன்றுகளில் மணமுடைய பூக்களை மாலையாகக் கட்டி மகிழ்ந்திடுவர். அங்கு முல்லை நிலத்தில் அருகம்புல்லை வயிறு நிரம்ப உண்ட வலிய நடையை உடைய பசுக்கள் பால் மிகுதியால் பருத்த தம்மடி இனிய பாலைச் சொரியத்தம் கன்றுகளை அழைக்கும் குரலை உடையவனாய் விளங்கும் என்கிறார் புலவர். பால் உற்பத்திக்குப் பசும்புல் தேவை என்றும் அதிலும் அருகம்புல் மிகவும் இன்றியமையாதது என்றும் இப்பாடல் தெரிவிக்கின்றது. **"முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்**[8] **(அகம்.14:7)**. மேலும், காட்டுப்பசு தானாகவே இலைகளைத் தேடி உண்ணும், ஆனால் வளர்க்கப்படும் பசுக்களுக்கு முக்கியமாக வேனிற்காலத்தில், புற்கள் இல்லாத சூழ்நிலையில் இலைகள் தீவனமாக அளிக்கப்பட்டுள்ளது. இந்தக் காட்சியைப் புறநானூற்றின் (புறம்.224:13-17) மூலம் அறிய முடிகின்றது. ஆநிரையைப் பாதுகாத்திடுவதற்காக ஆயர் கூர்மையான வாளால் பூக்களுடனே உதிரும்படி கொம்புகளை வெட்டிக் கழித்து அதன் தழைச் செறிவை அழித்த வேங்கை மரத்தைப் போல் மகளிர் அரிய அணிகளைக் கரிகாலன் இறப்பால் களைந்தனர் என்று கரிகால் பெருவளத்தான் இறந்தபோது ஏற்பட்ட நிகழ்வைக் கூறுகிறார். இதில் வேனிற்காலத்தில் ஆநிரைக்கு வேங்கை மரத்தழைகள் தீவனமாக அளிக்கப்பட்டன என்ற செய்தியை அறியமுடிகின்றது.

**நவீன கால்நடைப்பராமரிப்பு தொழில்நுட்பம்**

இயற்கை முறைகளிலும் நவீன முறைகளிலும் கால்நடைகளுக்குத் தீவனம் அளித்தல் பசும்புற்களை அளித்தல், பால்வளம் கூடுதலாக பெருகச் செய்தல், உயிர்ப்பாதுகாப்பை மேம்படுத்துதல் தொழில்நுட்பம் ஆகும். கால்நடை வளர்ப்பில் சரியான உணவை பயன்படுத்துவதன் மூலம் உற்பத்தியைப் பெருக்க முடியும். 'ஆநிரைகளுக்கு முக்கியமாக பசும்புற்கள் மற்றும் மரத்தழைகள் வழங்க வேண்டும். மரத்தழைகளை நன்கு ஜீரணித்துப் பயன்படுத்தும் ஆற்றல், பசு, எருமை, காளை, ஆடு இனங்களுக்கு உள்ளது என இயற்கை வேளாண்மை விஞ்ஞானி ஆர். எஸ். நாராயணன் குறிப்பிட்டுள்ளார்.

'கறவை மாடுகளின், பால் உற்பத்திச் செலவில் 50-லிருந்து 70-சதவீதம் வரை தீவனத்திற்குச் செலவிட வேண்டியுள்ளது. இத்தீவனச் செலவைக் குறைத்துப் பால் உற்பத்தியைப் பெருக்கக் கறவை மாடுகளுக்குப் பசுந்தீவனம் அளிப்பது மிகவும் அவசியமானதாகும். புரதச்சத்து மிகுந்த பசுந்தீவனம் கறவை மாட்டிற்கு நாள் ஒன்றிற்கு 15-25 கிலோ பசுந்தீவனம் தேவைப்படுகிறது. 15 கிலோ பசுந்தீவனம் அளிக்கும்போது 10 கிலோ தானியவகை அல்லது புல்வகைப் பசுந்தீவனமாகவும் (கினியாபுல்) 5 கிலோ பயிறு வகை மற்றும் மர இலைகளாகவும் இருக்க வேண்டும்."[9] என தொழில்நுட்ப வல்லுநர் பண்ணை மேலாளர், அழகுதுரை குறிப்பிடுகிறார். விரைவாக முளைக்கும் திறன் கொண்ட கோ - ஜி.ஜி.3 கினியாப்புல் கால்நடைகளுக்கேற்ற புதிய தீவனம் பயிர் என்று குறிப்பிட்டுள்ளார். தற்காலத்தில் வறட்சி என்பது ஒருபுறமிருக்க, வேளாண்மைப் பகுதிகள் அழிக்கப்பட்டு வருகின்றன. இத்தகைய நிலையில் கால்நடைத் தீவனங்களாகப் பல முறைசாராப் பொருட்கள் பயன்படுத்தப்படுகின்றன.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

'மாடுகளிடமிருந்து கூடுதல் பால்பெறச் சோளம், கம்பு, கேழ்வரகு போன்ற தானியங்களை நிறையவே அரைத்து அடர் உணவாக வழங்கப்படுகிறது. இவ்வகையான அடர் உணவு வளர்ப்பு மாடுகளுக்கு தேவையில்லை. பிண்ணாக்கு, பசும்புல், தழைகள், பருத்திக் கொட்டை, அரிசித்தவிடு, கடுக்காய், உளுத்தந்தவிடு, வைக்கோல்தட்டை இவற்றைக் கொண்டே உகந்த அளவு பால் உற்பத்தியைப் பெற்றுக்கொள்ளலாம் என இயற்கை விஞ்ஞானி நாராயணன் குறிப்பிடுகிறார், மனித உணவைக் கால்நடைகளுக்கு வழங்குவது நல்லதல்ல. மனித உணவுபோக எஞ்சியதை மட்டுமே வழங்க வேண்டும். அவை

| **'மனிதனுக்கு ஏற்ற உணவுகள்** | - | **கால்நடைகளுக்கு ஏற்ற உணவுகள்** |
|---|---|---|
| தானியம் | - | தாள் |
| அரிசி | - | தவிடு |
| தாவரஎண்ணெய் | - | பிண்ணாக்கு |
| பஞ்சு (உடை) | - | பருத்திக்கொட்டை |

இவைகள் எல்லாம் கால்நடைகளுக்குப் போதாது என்றால், மேலும் பால் அதிகமாக பசும்புற்கள் மற்றும் மரத்தழைகள் வழங்க வேண்டும். மரத்தழைகளை நன்கு ஜீரணித்துப் பயன்படுத்தும் ஆற்றல் பசு, எருமை, காளை, ஆடு இனங்களுக்கு உள்ளது.'[10] இத்தகைய தீவனங்களையே ஆநிரைகளுக்கு உகந்த தீவனமாக சங்ககால மக்கள் பயன்படுத்தியுள்ளனர

**சங்ககால கால்நடை வளர்ப்பு முறைகளும், நவீன பராமரிப்புத் தொழில்நுட்பமும்**

நவீன கால்நடைத் தொழில்நுட்பத்தில் குறிப்பிட்டுள்ள பசுந்தீவனங்களைச் சங்ககால மக்கள் நல்ல மேய்ச்சல் இடமறிந்து மேய்த்தனர். கால்நடைகள் நன்றாக உணவினை எடுத்துக் கொண்டன. மேலும் தழைகளுடன் முற்றாத பச்சை விதைக்குலைகளை வழங்கும்போது முழுமையான சத்துணவை ஒரு கால்நடைபெறுகிறது. கால்நடைகளுக்கு வளம் நிரம்பிய மரங்களின் இலைகள், தழைகள் முக்கிய உணவாகப் பழக்கப்படுத்தி வந்துள்ளதை சங்க இலக்கியம் தெளிவுப்படுத்துகின்றது.

'கால்நடைகளுக்குத் தீங்கிழைக்கும் 'ஆக்ஸலேட்' என்ற நச்சுத்தன்மை புதிய தீவனப்பயிரானக் கினியாபுல்லில் குறைவாக உள்ளது என தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம் தீவனப்பயிர்த் துறையில் இருந்து கினியாப்புல் கோ (ஜி.ஜி.3) என்ற புதிய உயர் விளைச்சல் இரகத்தை 2009 ஆண்டு வெளியிட்டது.'[11] இத்தீவனம் மேய்ச்சல் பகுதி இல்லாத காரணத்தால் பால் உற்பத்திப் பெற்று வளம் பெற வல்லுனர்களால் பரிந்துரைக்கப்படுகின்றது. 'மாடுகளுக்கு மாற்றுத் தீவனமாக புளியங் கொட்டை கூழ் கொடுக்கப்படுகிறது. கிடேரி கன்றுகளுக்குத் தருவதால் அவை பருவமையாதென்றும், காளைக்கோ, வண்டி மாடுகளுக்கோ தருவதால், அவை உடல் பருத்து வருமென்றும் கருதுவதால் கறவை மாடுகளுக்கு, கறவைகாலங்களில் மட்டுமே, பால் உற்பத்தி கூடுவதற்கென புளியங்கொட்டை கூழ் தருகின்றனர்.'[12] இவ்வாறு கால்நடைகளுக்குத் தொழில்நுட்ப மாற்றத்தால் பல உணவுமுறைகள் பயன்பாட்டில் உள்ளதை காணமுடிகிறது.

**முடிவுரை**

பால்வளம் பெருகுவதற்கு பசுந்தீவனங்கள் கால்நடை வளர்ப்பில் முக்கியப் பங்கு ஆற்றுகின்றது. தொழில் நுட்ப வளர்ச்சியின் காரணமாக, மண்ணில்லா வேளாண்மை மூலமாகப் பசுந்தீவனங்கள் உற்பத்திச் செய்யப்படுகின்றது. இதன் மூலம் பசுந்தீவனம் கொடுப்பது தான் பால் உற்பத்திக்கு முக்கியம் என்பதை அறியமுடிகின்றது. தொழில்நுட்ப மாற்றத்தால் தீவனம் மாற்றப்பட்டுள்ளது அதுவும் தீங்கானது என்று கருதும் நிலையில் பாரம்பரிய இயற்கை தொழில்நுட்பத்தைக் கொண்டு கால்நடை வளர்ப்பு சங்ககாலத்தில் சிறப்பாக உள்ளதையும் நவீன தொழில்நுட்ப முறையில் ஏற்பட்டுள்ள மாற்றத்தையும் இக்கட்டுரை தெளிவுப்படுத்துகின்றது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**சான்றெண் விளக்கம்**

1. நற்., 266:3
2. புறம்:166:19
3. முல்.பா., அடி எண் 12-16
4. புறம்., பாடல் எண் 117:4-5
5. கலி., பா.எண் 107:11-12
6. சண்முகம்பிள்ளை, மு.,சங்கத் தமிழர் வாழ்வியல் ப.50
7. புறம்., பா.எண் 5:1
8. அகம்., பா.எண் 14:7
9. நவீன வேளாண்மை இதழ் ஏப்ரல், 2015, ப.53
10. நாராயணன்,ஆர்.எஸ்.,இயற்கை வேளாண்மையில் வாழ்வியல் தொழில்நுட்பங்கள் ப.56
11. நவீன வேளாண்மை ஏப்ரல், 2015 ப.52
12. நவீன வேளாண்மை ஆகஸ்ட் 2015, ப.3

**துணை நின்ற நூல்கள்**

1. சுப்பிரமணியன். ச.வே., (உ.ஆ), *சங்க இலக்கியம் பத்துப்பாட்டு*, கோவிலூர் மடாலயம்,, கோவிலூர், முதற்பதிப்பு, 2003.
2. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ), *பரிபாடல்*, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்ததாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு பதிப்பு 2008.
3. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ), *ஐங்குறுநூறு.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்ததாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு பதிப்பு 2009.
4. துரைசாமிப்பிள்ளை. ஔவை.சு.,(உ.ஆ), *புறநானூறு* (201-400), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்ததாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு அச்சு 2007.
5. நச்சினார்க்கினியர். (உ.ஆ), *கலித்தொகை,* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்ததாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு பதிப்பு 2007.
6. நாராயணசாமி ஐயர், அ., *நற்றிணை நானூறு,* திருநெல்வேலி தென்னிந்திய நூற்பதிப்புக்கழகம், சென்னை, மறு அச்சு 2007.
7. பாலசுப்பிரமணியன். கு.வெ., *புறநானூறு,* புத்தகம் 1,2, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் அச்சு, சத்தியநாராயணன். வெ., 2007.
8. வேங்கடசாமி நாட்டார். ந.மு., *அகநானூறு,* வேங்கடாசலம் பிள்ளை. ரா., (உ.ஆ) (களிற்றியானை நிரை), திருநெல்வேலி தென்னிந்திய நூற்பதிப்பு கழகம், சென்னை, மறுபதிப்பு, 2009.
9. வேங்கடசாமி நாட்டார். ந.மு., *அகநானூறு* (மணிமிடைபவளம்), வேங்கடாசலம் பிள்ளை. ரா.,(உ.ஆ), திருநெல்வேலி தென்னிந்திய, நூற்பதிப்பு கழகம், சென்னை, மறுபதிப்பு, 2007.
10. வேங்கடசாமி நாட்டார். ந.மு., *அகநானூறு* (நித்திலக்கோவை), வேங்கடாசலம் பிள்ளை.ரா., (உ.ஆ), திருநெல்வேலி தென்னிந்திய நூற்பதிப்பு கழகம், சென்னை, மறுபதிப்பு, 2008.
11. சண்முகம் பிள்ளை. மு., *சங்கத் தமிழர் வாழ்வியல்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு.
12. நாராயணன். ஆர்.எஸ். *இயற்கை வேளாண்மையில் வாழ்வியல் தொழில்நுட்பங்கள்,* தாமரை வெளியீடு, இரண்டாம் பதிப்பு, மே, 2015.

**இதழ்கள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

1. நவீன வேளாண்மை இதழ், ஏப்ரல் மாத இதழ் 2015.
2. நவீன வேளாண்மை இதழ், மே மாத இதழ் 2015.
3. நவீன வேளாண்மை இதழ், ஆகஸ்ட் மாத இதழ் 2015.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ராஜகுமாரி, ஆ.** "ஆநிரை வளர்ப்புத் தொழில்நுட்பம் அன்றும் - இன்றும்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 135-140. டிஓஐ: 10.5281/zenodo.3628547.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Rajakumary, A.** "Diary Farming Technology- Ancient and Modern." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 135-140. DOI: 10.5281/zenodo.3628547.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# தமிழ்வழிப் பள்ளிகளும் தமிழ்ப்பாடமும்
# Tamil Medium Schools and Tamil Lessons

**முனைவர். ஆ.ருபா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊற்றங்கரை.
**Dr.A.Rupa,** Assistant Professor of Tamil, Adhiyaman Arts & Science College for Women, Uthangarai.
**ORCiD:** https://orcid.org/0000-0003-0732-6540
**DOI: 10.5281/zenodo.3628574**

## Abstract

*In general idea of Educational Psychology, Students will develop their thinking and creativity when they are educated in their mother language. Many of the great men from Gandhi, Bharati and of the other countries have highlighted the need and superiority of mother tongue education in their inception of education. Educationalists and the Nation makers like Ganghiji and Bharathi has evinced their stand on the importance of the mother tongue in the acquisition of knowledge in the young days of a child. The theories of them are taken as evidences to prove the need of inculcating knowledge through mother tongue. The article aims at examining the status of Mother tongue language schools, mother tongue education and mother tongue education during at the time of having vast increase of English school in this age.*

**Keywords:** Tamil Medium, Schools, Tamil Lessons

### தொடக்கவுரை

தாய்மொழியில் கல்வி கற்றுக்கொடுக்கும் பொழுது மாணவர்களின் சிந்திக்கும் ஆற்றலும் படைப்புத்திறமையும் வளரும். காந்தி, பாரதி, அயல் நாடுகளிலிருந்து வந்த பாதிரிகள் என பலரும் தாய்மொழிக் கல்வியின் மேன்மையை எடுத்துரைத்துள்ளனர். ஆங்கில வழிப்பள்ளியின் எண்ணிக்கை அதிகரித்து வரும் இக்காலக்கட்டத்தில் தாய் மொழி வழிப் பள்ளிகளும் தாய் மொழி கல்வியும், தாய்மொழி வழிக் கல்வியும் எந்நிலையில் உள்ளது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையாகும்.

### தாய்மொழிக் கல்வியின் மேன்மை

'உலகமொழி' 'அறிவியல் மொழி' 'அது நம்மைப் பாதுகாப்பது' 'அதனை விட்டால் நாம் அழிந்துபடுவோம்' என்று மேன்மக்கள் சொல்கிறார்களே, அந்த மொழி மேன்மக்களின் கூற்றை நம்பிக் கானல் நீரைக் குடிக்க ஓடும் மான்களாய் மற்றவர்களும் நாடுகிறார்களே அந்த மொழி ஆங்கிலமொழி. தன் சொந்த மண்ணிலேயே புறக்கணிக்கப்பட்டது. தற்காலத்தில் அவை உலகமொழியாகக் கருதப்படுகிறது என்றால் அதற்குக் காரணம் தாய்மொழிக் கல்வியை ஆதரித்ததால் தான் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். ஆங்கிலமொழியின் தொடக்கத்தைப் பற்றி Richard Foster Jones சொல்லியிருப்பது "ஏறக்குறைய கி.பி.1575 வரை ஆங்கிலமொழியில் பற்றுள்ளவர்கள்கூட, தமது தாய் மொழியைப் பற்றித் தாழ்வாகத்தான் எண்ணினார்கள். இவர்களை ஒருவித தாழ்வுச் சிக்கல் உறுத்தியது. தமது மொழியை வர்ணிப்பதற்கு இவர்கள் கையாண்ட அடைமொழிகளே இவ்வுண்மையைப் புலனாக்குகின்றன. தமது மொழியை அவர்கள் காட்டுமிராண்டித்தனமான பண்படாத மொழியெனக் கூறிக்கொண்டனர். இவ்வாறு தமது மொழியைப் பற்றி கடுமையான பதங்களைக் கையாண்ட

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020
Available at: www.ijtlls.com

போதிலும், இவ்வடைமொழிகள் யாவும் ஆங்கிலமொழி சொல்வன்மையற்றது என்பதையே உண்மையாகக் குறித்தன. எலியட், அஸாம் போன்றோர் ஆங்கிலத்திலே மிகத் திறமையாக எழுதிய போதிலும், தமது தாய்மொழி சொல்வன்மை வாய்ந்ததென்று துணிந்து கூற முற்படவில்லை. இலத்தின், கிரேக்கம் போன்ற மொழிகளுக்கும் ஆங்கிலத்திற்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வை உணர்த்துவதற்கு அவர்கள் ஓர் உவமையைக் கையாண்டார்கள். ஆங்கிலத்தைச் சாதாரண துணிக்கும் இலத்தீனை உயர்ந்த ரக ஆடம்பர உடைக்கும் ஓப்பிட்டனர்" என்பதைக் கவனித்தால் ஆங்கில மொழியின் ஆரம்ப கட்டநிலை அறியமுடிகிறது. ஆனால் தற்காலத்தில் முன்னோக்கி உலகமொழியாகத் தலைதூக்க காரணம் தாய்மொழிப்பற்று தான் என்பது திண்ணம்.

தாய்மொழிக் கல்வியால் மட்டுமே நாட்டை உயர்த்த முடியும். மற்ற மொழிப்பாடங்கள் மொழியறிவிற்குப் பயன்படும். ஆனால் நாட்டின் முன்னேற்றத்திற்குத் தாய்மொழிக் கல்வி வேண்டும் என்பதை அண்ணாமலை கூறியிருப்பது "அறிவு வளர்ச்சிக்குத் தாய் மொழி வழிக் கல்வியே சிறந்தது என்பதை உணர்ந்திருந்தும் அரசு இதில் காலம் கடத்தி வருவது ஏற்புடையதன்று சிலரின் ஆசா பாசங்களுக்கும்- சிலரது பிழைப்பிற்குமே வழி வகுக்கக் கூடிய ஆங்கில வழிக் கல்வியை அறவே நிறுத்த வேண்டும். இன்றைய தினம் இதற்கு மிகுந்த நெஞ்சத் துணிவு வேண்டும். யார் என்ன சொல்வார்களோ என எண்ணம் தளரக் கூடாது. நல்லதைத் துணிச்சலோடு செய்வதில் தவறில்லை. உயர் கல்வி வரை தாய் மொழி வழியிலேயே கற்பிக்க வேண்டும். தாய் மொழி வழிக் கல்வி பெறுவோர்க்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை அளிக்க வேண்டும். ஆங்கிலத்தில் பயின்று அயல்நாடு செல்ல ஆசைப்படும் இரண்டு விழுக்காட்டினருக்கு வேண்டுமானால் ஆங்கில வழியில் கற்றுக் கொடுக்கும் ஏற்பாட்டினைச் செய்யலாம்.

தாய்மொழி வழியில் கற்றுக் கொடுப்பதற்கு ஏற்ற வகையில் அறிவியல் நூற்களையும் பிற நூல்களையும் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும். இதற்கென நிரந்தரமான மொழி பெயர்ப்புத் துறை ஒன்றை அரசு அமைத்திடல் வேண்டும்." என விவரித்துள்ளார். தாய் மொழியில் கல்வி கொடுக்கும் பொழுது தான் மாணவர்களின் சிந்திக்கும் திறனும் ஓப்பிட்டு உணர்வும் புரிதல் உணர்வும் மேம்படும் என்பதை உணர்த்துகிறது. மேலும் தமிழ் படித்தால் தமிழ்நாட்டில் மட்டும் தான் வேலை என்ற பெற்றோர்களின் மேம்போக்கான எண்ணத்தினையும் சமூகத்தின் போக்கையும் மாற்றுதல் வேண்டும் என்பதை அடிக்கோடிட்டுக் காட்டியுள்ளதை அறிய முடிகிறது.

**காந்தியும் தாய்மொழிவழிக் கல்வியும்**

தாய் மொழியைக் கருவியாகக் கொண்டு கல்வி கற்பிக்க மறுத்தது மெக்காலேயின் கல்வித்திட்டம். அவரைத் தொடர்ந்து வந்த மதன் மோகன மாளவியா போன்ற தலைவர்களின் கல்வி முறையும் தாய்மொழிக் கல்விக்கு முக்கியத்துவம் தரவில்லை. மாறாக தாய்மொழிக் கல்வியைப் பின்னுக்குத் தள்ளின. அதற்குத் பின்னால், காந்தியடிகள் வகுத்த "ஆதாரத் கல்வித் திட்டம், தாய் மொழிக்கே முதன்மை தந்து ஆரம்பப் பள்ளி முதல் கல்லூரி வரை, தாய் மொழியிலேயே கல்வி முழுவதையும் கற்பிக்க வழி வகுத்தது. ஆனால், காந்தியடிகளின் 'தாய் மொழிக் கல்வித் திட்டம்' இன்னும் ஏட்டளவிலேயே இருந்து வருகின்றது.

**ஆங்கிலவழிக் கற்பித்தலும் காந்தியடிகளும்**

1. வேற்றுமொழி மூலம் கல்வி பயில்வது மாணவர்களின் உற்சாகத்தைக் கெடுக்கிறது. புதுமையை மங்கச் செய்கிறது. மனத்தில் உயிர்ப்பு சக்தியையே புழுங்கடிக்கிறது. உடல்நலம் அற்றவர்களாக, வேலை செய்ய ஆர்வமற்றவர்ளாகத் தாமே முன்னின்று ஆராய்ச்சி செய்வதிலோ அல்லது ஆழ்ந்த சிந்தனை செய்வதிலோ அக்கறை இருப்பதில்லை என்பார் காந்தியடிகள்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

2. ஆங்கில வழி பயிலும்போது, உயர்நிலைப் பள்ளிப்படிப்பு பயில 12 முதல் 13 வருடங்கள் வரையில் தேவையாக இருக்கின்றன. இதே பாடங்கள் தாய்மொழி மூலம் சொல்லிக் கொடுக்கப்பட்டால் பத்து வருடங்கள் தான் ஆகும். (ப – 190)
3. ஜப்பானில் தாய்மொழி மூலம் கல்வி போதித்ததினால் அவர்கள் மிக விரைவில் வியப்பூட்டும் பாங்கில் மேற்கத்திய நாடுகளைவிட முன்னேறி வருகிறார்கள்.
4. அந்நியமொழி மூலம் கல்வி கற்பிப்பது கணக்கிட முடியாத தீங்கை விளைவிக்கிறது.
5. படித்தவர்களுக்கும் பாமரர்களுக்குமிடையே பிளவை ஏற்படுத்தும்.
6. பள்ளிக்கூடம் என்பது வீட்டைப் போலவே மற்றொரு வீடாக இருக்க வேண்டும். ஒரு குழந்தைக்கு வீட்டில் தோன்றும் எண்ணங்களுக்கும் பள்ளிக்கூடத்தில் ஏற்படும் எண்ணங்களுக்குமிடையே நெருங்கிய இணக்கமிருக்க வேண்டும் அறிமுகம் இல்லாத மொழி இந்த இணக்கத்தைக் குறைத்துவிடும்.
7. ஆங்கிலத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள அளவுக்கு மீறிய முக்கியத்துவம் காரணமாக மற்ற பாடங்களைப் படிப்பது பாதிக்கப்படுகிறது.
8. ஆங்கிலத்தின் மூலம் கல்வி போதிப்பது மாணவர்களின் மனச்சக்தியை உறிஞ்சிவிடுகிறது.
9. தாய்மொழி மூலம் கல்வி புகட்டும்போது நாம் மாணவர்களிடம் எதிர்பார்க்கும் பலனெல்லாம் ஏற்படும்.
10. பள்ளிக்கூடத்தில் நாம் பெறும் அறிவு மற்றவர்களுக்கு, நம் குடும்பத்தில் உள்ளவர்களுக்குக் கூடப் பயன்படுவதில்லை. ஆங்கிலத்தில் கற்றுக்கொண்டதை மற்றவர்களிடையே பரப்ப முடிவதில்லை. (பக்கம் - 191)
11. “போதான மொழி ஆங்கிலமாயிருப்பதால், மாணவர்களின் மூளையில் ஏற்படும் சுமை இரட்டிப்பாகிவிட்டது. சிந்தனையில் விறு விறுப்பை இழந்துவிட்டார்கள். சிருஷ்டி செய்யும் நமது சக்தியை இது அழித்துவிட்டது. வெறும் மை ஒத்தும் காகிதங்களாக ஆங்கிலேயர்களை அப்படியே பின் பற்றுபவர்களாக ஆக்கிவிட்டது. பழைய தலைமுறையைச் சேர்ந்த பிராமணர்களைப் போலவே நாம் அவ்வளவு மோசமானவர்களாகிவிட்டோம். கல்வியைத் தவறாகப் பயன்படுத்துகிறோம். பாமரமக்களின் ரட்சகர்கள் போல் நடந்து கொள்கிறோம்” என்றார்.
12. நாட்டு மொழிகளின் வளர்ச்சியைத் தடுத்துவிட்டது.
13. சொந்த நாட்டில் கற்றவர்கள் அந்நியமாகி விடுகின்றனர்.
14. அன்றாட வாழ்வில் ஒரு பலனும் இல்லை. பயிற்றுமொழி குறித்து இத்தகைய தெளிவான கருத்தைக் கொண்டிருந்ததலால் காந்தியடிகளின் வார்தா கல்வித்திட்டத்தில் பயிற்றுமொழி தாய்மொழியாகவே இருக்கவேண்டுமென்று ஏற்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது. ஜாகீர் ஹிசைன் குழு மேலும் தெளிவான கருத்துக்களைத் தெரிவித்துள்ளது. தாய்மொழி வழிக்கல்வி புகட்டுவது கல்வியின் அடிப்படையாக இருக்க வேண்டும். இது கருத்து, எண்ணங்களில் தெளிவை ஏற்படுத்தும். அதுவே ஒழுக்க நெறிக்கல்வி நல்ல தன்மைகள் சமூகக் கல்வி கற்றுக் கொடுக்க ஏதுவானது. கலையார்வத்தைத் தூண்டவும், வளர்க்கவும் வெளியிடவும் உதவுவது.”

தாய் மொழியில் பயிலும் போது தான் குழந்தைகளுக்குச் சிந்திக்கும் ஆற்றலும் புதியன படைக்கும் திறமையும் காலத்திற்கு ஏற்ப தங்களைத் தகவமைத்துக் கொள்ளும் அறிவும் ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுத்து ஒற்றுமையுடன் வாழும் ஒருமைப்பாட்டுணர்வும் நம் கலாச்சாரத்தையும் உள்வாங்க முடியும். ஒரு வீட்டிற்குள்ளே அந்நியமாக வாழும் சூழல் இன்று சமூகத்தில் காணப்படுவதற்கு தாய் மொழிக் கல்வி இன்மையும் பண்பாட்டினைப் பற்றிய விழிப்புணர்வு இன்மையும் தான் காரணம் என்பது மேற்கண்ட கருத்துக்களில் உறுதியாகிறது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**தாய் மொழிவழிக் கல்வியும் பாரதியும்**

பாரதியார் காலத்தில் ஆங்கில மொழியின் ஆதிக்கத்திற்கு எதிராக பாரதத்தின் கலாச்சாரத்திற்கு ஏற்பப் புதியதொரு கல்விமுறை வகுக்கப்பட்டு தேசியக்கல்வி வழங்கப்பட்டது. அவற்றில் ஆங்கில மொழியின் தாக்கம் வந்ததைப் பாரதியார்

“தமிழ் நாட்டில் தேசியக் கல்வியென்பதாக ஒன்று தொடங்கி, அதில் பாஷையை ப்ரதானமாக நாட்டாமால், பெரும்பான்மைக் கல்வி இங்கிலீஷ் மூலமாகவும் தமிழ் ஒரு வித உபபாஷையாகவும் ஏற்படுத்தினால், அது ‘தேசீயம்’ என்ற பதத்தின் பொருளுக்கு முழுதும் விரோதமாக முடியுமென்பதில் ஐயமில்லை. தேச பாஷையே பிரதானம் என்பது தேசியக்கல்வியின் ஆதாரக் கொள்கை: இதை மறந்துவிடக் கூடாது. தேச பாஷையை விருத்திசெய்யும் நோக்கத்துடன் தொடங்கப்படுகிற இந்த முயற்சிக்கு நாம் தமிழ் நாட்டிலிருந்து பரிபூரண ஸஹாயத்தை எதிர்பார்க்கவேண்டுமானால், இந்த முயற்சிக்குத் தமிழ் பாஷையே முதற்கருவியாக ஏற்படுத்தப்படும் என்பதைத் தம்பட்டம் அறைவிக்க வேண்டும்” தேசிய கல்வி என்ற பெயரில் வந்த ஆங்கில கல்வியினை எதிர்த்து தேசிய கல்வி என்பது அவரவர்களின் தேசிய மொழி தான். ஆனால் இங்கு ஆங்கில மொழியினை வைத்திருப்பது தேசிய கல்வியாகாது. தாய் மொழிக் கல்வி தான் முதன்மை என்று எடுத்துரைத்துள்ளார்.

**பாரதி பிறமொழிப் பகைவரல்ல**

பாரதிக்கு, தம் தாய் மொழியான தமிழ் மொழியிடம் உண்மையான உறுதியான பற்று இருந்தது. அதனால், தமிழ் மொழியின் ஆற்றலையும் சரியானபடி அளந்தறிய அவரால் முடிந்தது. ஆங்கில மொழியிடம் அவருக்குப் பக்தி இல்லாதது போல, பகையுணர்ச்சியும் இல்லை. உலக மொழிகளில் ஒன்று என்ற அளவில் தமிழர் ஆங்கிலம் பயிலுவதை அவர் எதிர்க்கவில்லை. தமிழுக்குரிய இடங்களை ஆங்கிலத்திற்கு வழங்குவதையே அவர் எதிர்த்தார்.’’ பாரதியின் கருத்தினைக் கவனித்தால் அவர் ஆங்கில மொழியின் எதிர்ப்பாளர் இல்லை. அதே சமயத்தில் சமசுகிருதத்தையும் ஆங்கிலத்தையும் நன்றாக கற்ற அவர் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்தார் எனில் ஒன்று தமிழ் மொழியின் பெருமையினை உணர்ந்ததால் என்று சில அறிஞர்கள் கூறுவர். இரண்டாவது தாய்மொழிப் பற்று இருப்பவனால் தான் தாழ்ந்துவிடாமல் உயர முடியும் என்பதை உணர்ந்தவன் பாரதி என்றும் கூறலாம்.

**பாதிரிகளும் தமிழ் மொழியும்**

தொடக்க காலத்திலிருந்தே தமிழகம் வந்த புறச்சமயத்தினர், தமிழ் பயின்று தாங்கள் பெற்ற தமிழ்ப் புலமையால் தமிழ் மக்களைக் கவர்ந்து, அவர்களோடு தொடர்பு கொண்டு, தங்கள் மதங்களை வளர்த்து வந்தனர். இப்படி ஆரியர், சமணர், பௌத்தர், இசுலாமியர், கிறித்தவர் ஆகியவர்கள் தமிழகத்திற்குள் நுழைந்த போது தமிழ் மொழியைக் கற்று செய்த பணியைக் காட்டிலம் செம்மையாகச் செய்தவர்கள் கிறித்துவப் பாதிரிமார்கள் என உறுதியளிக்க பல்வேறு சான்றுகள் உள்ளன.

கிறித்துவ பாதிரிகளுக்கு இந்தியாவில் ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலப் பேரரசு முழுமையான ஆதரவை அளித்தது. பிற நாட்டைச் சேர்ந்தவர்கள் வேற்று மொழியினைப் பேச கூடியவர்கள் என்றாலும் அவர்களுக்கு இந்த நாட்டில் எந்த இடையூறும் இன்னல்களும் நேரிடதவாறு பாதுகாப்பினை நல்கியது ஆங்கில அரசு. இந்நிலையில், தமிழ்த்தொண்டு புரிந்த ராபர்ட் கால்டுவெல் போன்ற பிரிட்டிஷ் பாதிரிமார்கள் தமிழர் மீது ஆதிக்கம் செலுத்திய பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சிக்கு ஆதரவாக இருந்தது இயற்கை. காரணம் அவர்களின் தாய்மொழிப்பற்று. ஆனால் அதே தாய்மொழிப் பற்று நம்மிடையே இல்லாமல் அன்னியர்களின் மொழியான ஆங்கில மொழியின் மீது அளவு கடந்த பற்று வைத்துள்ளோம். அவர்கள் தன் மொழியான ஆங்கிலத்தின் மீது பற்று இருந்தாலும் தமிழ் மொழியையும் பயின்று இலக்கண நூல்கள் முதற்கொண்டு சிலவற்றை படைக்கும் ஆற்றலையும் நம் மொழியில் சில மாற்றங்களையும் அவர்கள் செய்தனர்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

படைப்பாளி ஆகும் ஆற்றல் தாய்மொழியின் வாயிலாகத் தான் பெற இயலும். யார் ஒருவர் தாய்மொழியில் சிறந்து விளங்குகிறார்களோ அவர்களால் பிற மொழிகளை இலக்கண பிழையற கற்க இயல்வது மட்டுமின்றி படைக்கும் ஆற்றலையும் பெறமுடியும் என்பதை கீழ்க்கண்ட கருத்துகள் தெளிவுபடுத்துகிறது.

“கிறித்தவ மதப் பிரசாரத்தை மீனரிகளின் மொழியான ஆங்கிலத்தில் நடத்துவதா, இந்தியர் மொழிகளான தமிழ் போன்ற பிரதேச மொழிகளில் நடத்துவதா? என்ற பிரச்னை பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்தது. மீனரிகளில் மிகப் பெரும்பாலோர் ஆங்கிலத்தின் மூலம் நடத்துவதையே விரும்பினர் என்றாலும், அவர்களில் மிகவும் புத்திசாலிகளானோர், அது அனுபவ சாத்தியமற்றது என்பதனை உணர்ந்திருந்தனர். அதனால், மீனரிகளில் ஜி.யு.போப் போன்றவர்கள், பிரதேச மொழிகளின் வாயிலாக கிறித்துவ மதப் பிரசாரம் செய்வதே பயனுடையதாக இருக்குமென வலியுறுத்தினர். இந்தக் கருத்து கிறித்துவ மி‘னரிகளில் பெரும்பாலோரால் ஏற்கப்பட்டதால், சமயத்தொண்டில் ஈடுபட்டிருந்த பாதிரிமார்கள், தாங்கள் எந்தெந்த பிரதேசத்தில் வாழ்ந்தார்களோ, அந்தந்தப் பிரதேசத்தின் மொழியைப் பயில நிர்ப்பந்திக்கப்பட்டனர். அதன்படி, தமிழகத்திற்கு வாழையடி வாழையாக வந்த வெள்ளைப் பாதிரிமார்கள் தமிழ் கற்க நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

அதன் விளைவாகவே, வீரமாமுனிவர், ராபர்ட் கால்டுவெல், ஜி.யு.போப் போன்றோர் தமிழ் பயின்றனர்.” இவர்கள் தமிழ் பயின்றது தன் மதத்தினைப் பரப்பவும், ஆங்கில அரசாட்சி நிலைபெறவும், ஆங்கில மொழியினை வேரூன்றச் செய்யவும் கற்றனர் என்றாலும் இவர்களால் தமிழ் மொழிக்கு ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது எனலாம். ஏனெனில் தமிழ்நாட்டில் மட்டும் நிலைபெற்று இருந்த தமிழ் மொழி ஆங்கில மொழி, இலத்தீன் மொழி என பிறமொழிகளில் சில நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டு இன்று பல இடங்களிலும் நிலைத்து நிற்கிறது. மேலும் பிற மொழி இலக்கியங்களோடு ஒப்பீடு செய்து தமிழ் அக புற இலக்கியங்களில் உள்ள தன்மைகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. எனவே தமிழ்நாட்டில் தமிழ் தாழ்ந்தாலும் பிற நாடுகளில் உயர்ந்து நிற்கிறது என்பது தமிழ்மொழிக்கு கிடைத்த பெருமையே.

**மொழியியல் துறையில் ஆங்கிலம்**

“தமிழ்நாட்டில் 1970, 80 களில் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் கோவை பாரதியார் பல்கலைக்கழகத்திலும் மொழியியல் துறைகள் உருவாக்கப்பட்டன. இலங்கையில் கொழும்பு பல்கலைக்கழகத்தில் 1970 களின் தொடக்கத்தில் மொழியியல் துறை ஒன்று இயங்கியது. பின்னர் அது காலனி பல்கலைக்கழகத்துக்கு மாற்றப்பட்டது. 1980 களில் யாழ்ப்பாண பல்கலைக்கழகத்தில் ஒரு மொழியியல் துறை ஆரம்பிக்கப்பட்டது. பல ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்கா, கனடா, அவுஸ்திரேலியா ஆகிய நாடுகளிலும் பல்வேறு பல்கலைக்கழகங்களில் கடந்த பல தசாப்தங்களாகத் தமிழ் மொழியியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இவ்வகையில் இதுவரை தமிழ் மொழியியல் தொடர்பான நூற்றுக்கணக்கான முதமானி, கலாநிதிப்பட்ட ஆய்வுகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. சில முக்கியமான நூல்கள் வெளிவந்துள்ளன. தமிழ் மொழியியல் தொடர்பாக இதுவரை நிகழ்ந்துள்ள உயர் ஆய்வுகளில் மிகப் பெரும்பாலானவை ஆங்கில மொழியிலேயே நிகழ்ந்துள்ளது முக்கியக் கவனத்துக்குரியது. இந்தியாவிலும் மேலைநாடுகளிலும் மொழியியல் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே கற்பிக்கப்படுவது இதற்குக் காரணமாகும். இலங்கைப் பல்கலைக்கழகங்களில் மட்டும்தான் மொழியியல் தமிழில் கற்பிக்கப்படுகிறது. எனினும் கலாநிதிப்பட்ட உயர் ஆய்வுகள் இதுவரை இங்கு தமிழில் மேற்கொள்ளப்படவில்லை என்பதும் குறிப்பிடப்பட வேண்டியது.

தமிழைப் பொறுத்தவரை மொழியியல், பரவலாக அறியப்பட்ட, மொழிக் கல்விக்கு அத்தியாவசியமானது என உணரப்பட்ட அறிவுத்துறையல்ல. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை தமிழ்த் துறைகள் அதை உள்வாங்கவே இல்லை எனலாம். பதிலாக, மொழியியலைப்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

பகைமை உணர்வுடனேயே அவை நோக்கிவந்துள்ளன. இன்று வரை அதில் பெரிய மாற்றம் இல்லை." மேற்கண்ட கருத்தானது ஆய்வு செய்வது தமிழ் மொழியியலைப் பற்றி ஆனால் ஆய்வேடு அமைவது ஆங்கில மொழியில் என்பது வேற்று மொழியினர் தமிழ் மொழியைப் பற்றி அறிய ஓர் வாய்ப்பு என்றாலும் பிற மொழியில் ஆய்வேடு சமர்பித்தல் என்பது வருந்த தக்கதாகும்.

**நிறைவாக**

பிற மொழிச் சொற்களைக் கலந்து பேசுவது தான் நாகரீகம் என்ற பெயரில் இன்றைக்கு ஆங்கிலத்தையும் தமிழையும் இரண்டறக் கலந்து பேசுவது வழக்கமாகவுள்ளது. அதே போல் மொழியியல் துறையில் தமிழ் மொழியைப் பற்றி ஆய்வு செய்தாலும் மொழியியலின் பிறப்பியலைப் பற்றி இன்றைக்கும் ஆங்கிலத்திலேயே விளக்குகின்றனர். அயல்நாடுகளிலிருந்து வந்த பாதிரிமார்கள் சமயப்பணியாற்ற வந்தாலும் தமிழ்மொழியினைக் கற்று தமிழுக்குச் சிறப்பு செய்துள்ளனர். ஆனால் தமிழகத்தில் உள்ள மக்களும் மாணவர்களும் தமிழ்ப்பாடத்தைக் கற்பதிலும் நாட்டம் செலுத்துவதில்லை. பேசுவதிலும் ஆர்வம் காட்டுவதில்லை. இந்நிலை மாறுதல் வேண்டும்.

**துணை நின்ற நூல்கள்**

1. ஏ.ஜே.கனகரத்தினா, *ஆங்கிலம் வெற்றி வாகை சூடிய வரலாறு*, ப – 6.
2. மு.அண்ணாமலை, *தமிழ்நாட்டில் கல்வி அன்றும் இன்றும்*, ப - 417.
3. ம.பொ.சிவஞானம், *பாரதியும் ஆங்கிலமும்.* ப - 34.
4. டாக்டர் மா.பாதமுத்து, *காந்திவழி கல்வியும் சமூகமும்*, ப - 190 - 192
5. கட்டுரைகள் ப – 502, *ம.பொ.சிவஞானம், பாரதியும் ஆங்கிலமும்.* ப - 33.
6. ம.பொ.சிவஞானம், *பாரதியும் ஆங்கிலமும்.* ப - 39.
7. ம.பொ.சிவஞானம், *விடுதலைப்போரில் தமிழ் வளர்ந்த வரலாறு*, ப - 52.
8. எம்.ஏ.நு.ஃமான், *காலச்சுவடு (இ),* ப - 22.

**துணைநூற் பட்டியல்**

1. அண்ணாமலை.மு, *தமிழ்நாட்டில் கல்வி அன்றும் இன்றும்.* சரசு பதிப்பகம், வன்னியர் தேனாம்பேட்டை, சென்னை - 600 018. முதற் பதிப்பு - டிசம்பர், 1998.
2. கனகரத்தினா.ஏ.ஜே. *ஆங்கிலம் வெற்றி வாகை சூடிய வரலாறு.* பொன்னி பதிப்பகம், 25, அருணாச்சல புரம், அடையாறு, சென்னை - 20, பதிப்பு - 8-9-90.
3. சிவஞானம்.ம.பொ. *விடுதலைப்போரில் தமிழ் வளர்ந்த வரலாறு*, இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4. முதற்பதிப்பு – 26 ஜீன் 1970.
4. சிவஞானம்.ம.பொ. *பாரதியும் ஆங்கிலமும்,* இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை- 4, முதற்பதிப்பு செப்டம்பர் 11, 1961.
5. சிவஞானம்.ம.பொ. *தமிழா? ஆங்கிலமா?* பூங்கொடி பதிப்பகம், சென்னை – 4, இரண்டாம் பதிப்பு அக்டோபர் 3 2000.
6. பாதமுத்து.மா. *காந்திவழி கல்வியும் சமூகமும்,* காந்திய இலக்கியச் சங்கம், மதுரை 625 020 மூன்றாம் பதிப்பு ஜீலை 2000,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

**இதழ்கள்**

1. *காலச்சுவடு.* மலர் 27, இதழ் 3 மார்ச் - 2015.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**ரூபா, ஆ.** "தமிழ்வழிப் பள்ளிகளும் தமிழ்ப்பாடமும்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 2, இதழ் 2, சனவரி 2020, பக். 141-147.
டிஓஐ: 10.5281/zenodo.3628574.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Rupa, A.** "Tamil Medium Schools and Tamil Lessons." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 2, no. 2, January 2020, pp. 141-147.
DOI: 10.5281/zenodo.3628574.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி/Author Contribution Statement:** இல்லை/NIL

**கட்டுரையாளர் நன்றியுரை/Author Acknowledgement: இல்லை/Nil**

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

# பாலைக்கலியின் பழக்க வழக்கங்கள்
# The Life Style of the Palai (Desert) People

**முனைவர் நா. ஹேமமாலதி,** துறைத்தலைவர், உதவிபேராசிரியர், சாரதா கங்காதரன் கல்லூரி, புதுச்சேரி-4.
**Dr. N.Hemamalathi**, Head & Assistant Professor of Tamil, Saratha Gangadharan College, Pudhucherry-4.
ORCiD: https://orcid.org/0000-0003-0593-6476
**DOI: 10.5281/zenodo.3628576**

## Abstract

*This is an article on the belief and beheviours and of thr Palai People.. The life style of those people are explained from the period of Tholkapyam. The below said topics are taken from the chapter "Palaikali" from the book named, "Kalithogai". It briefly explains the life style, traditions and behaviours in different situations like festivals, banquet, methods of treatment, facial expressions of lenders and borrowers, the act of a newly conquered land by kings etc. From this study, We come to know about the various behavior and rituals practised by the Kings, Brahmin and common man in the early centuries. Hence, the paper discloses the facts from the primary and secondary sources regarding to the social life of the Palai people.*

**Keywords:** Life Style, Palai (Desert) People**.**

### *கலித்தொகை*

எட்டுத்தொகை நூல்களில் 'பா' என்ற பெயர் பெற்ற ஒரு தொகை நூல் கலித்தொகை. அகத்திணைக்குரிய ஐந்திணையையும் பொருட்செறிவோடு பாடுவதற்குரிய ஒரு நூல் கலித்தொகை. இதனை தொல்காப்பியரே,

> **நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
> **பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
> **கலியே பரிபாடல் ஆயிரு பாங்கினும்**
> **உரியதாகும் என்மனார் புலவர். (தொல். அகத். நூ. 56)**

'என்மனார் புலவர்' என முடிக்கப்பட்டதனைக் கொண்டு தொல்காப்பியர் காலத்திற்கே முற்பட்டு இன்பமாகிய அகப்பொருட் செய்யுள்களை கலிப்பாவாலும் பரிபாடலிலும் பாடியுள்ளனர் என்பது புலப்படுகின்றது. இறையனார் களவியலுரையில் கலித்தொகை ஒரு தொகை நூல்களுள் ஒன்றாகவும் சுட்டப்பட்டுள்ளது.

### பாலைக்கலி

கலித்தொகையில் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற முறையில் அமைந்துள்ளது. இந்த முறை வைப்பு,

> **ஒன்றிலேனும் முதலிடம் பெறாத பாலைத்திணையை இவர் முதலில் வைக்காமையால் இது முதலில் வருமோ வராதோ என்று ஐயுற்று மயங்கி வாராதென்று திரியவுணர்வார்க்கு அத்திரிபுணர்ச்சியை நீக்கம் கருதி போலும், அன்றி பாலை நானிலப் பொதுவாதலின் பொதுவை முற்கூறிச் சிறப்பைப் பிற்கூறுவதும் மரபென்பது பற்றி என்னுமாம்**
> **(இ.வை. அனந்தராமையர் (ப.ஆ.), கலித்தொகை, முதற்சம்புடம், முகவுரை)**

என்று குறிப்பிடுவதில் இருந்தும், இதனையே மறுத்து "இன்பத்தின் மறுதலையாகிய துன்பத்தைத் தரும் பாலையை முன்வைத்து விட்டார்" என்று பொ.வே.சோமசுந்தரனார்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

மறுப்பதும் பொருந்தாது. இத்தகைய துன்பமிக்க பாலைத் திணையை நன்கு ஆராய்ந்து இவ்வைந்து வகை திணைகளிலே பாலைத்திணை தான் முதன்மையுடையது என்று துணிந்தே இக்கலித்தொகையில் முன்வைத்துள்ளார், நல்லந்துவனார் (பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.) கலித்தொகை, பாலைக்கலி. ப.7)

**பாலைப் பாடிய பெருங்கடுங்கோ**

கலித்தொகையில் முதற்கண்ணாக வைத்துள்ள பாலைக்கலியினை பாடியவர். பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆவார். சேரக்குடியில் தோன்றியவர். பாலைத்திணைப் பாடல்களை நயமாக உணர்ந்து பாவகையால் பாடிய சிறப்புக்குரியவர். புறநானூற்றில் இவரையும் இவரது ஆட்சிக்குட்பட்ட நாட்டின் சிறப்பையும் குறிக்குமாறு ஒரு பாடல் உள்ளது. இவரது பாடல்களில் முழுக்க முழுக்க பாலைநிலத்து நிகழ்வுகளை படம்பிடித்து காட்டுவதே தனிச்சிறப்பு.

**பழக்க வழக்கங்கள்**

மக்களின் வாழ்வியலை அறிந்து கொள்ள தேவையான ஒரு நூல் கலித்தொகை. அதில் பாலைக்கலி பாடல்களில் தனி மனிதப் பழக்க வழக்கங்கள் காலப்போக்கில் உணர்ச்சி நிலையில் மாறும் தன்மையுடையது. ஆனால் ஒரு சமூகத்தின் பழக்க வழக்கங்கள் எளிதில் மாற்றம் அடைவதில்லை. இத்தகைய பழக்க வழக்கங்கள் மக்கள் வாழ்வியலோடு நெருங்கிய தொடர்புடையவை. அவையெல்லாம் இன்றைய மக்களிடமும் காணமுடிகிறது. மனித வாழ்வியலோடு தொடர்ந்து வருவதை காணமுடிகிறது. சங்க காலம் தொட்டு மக்கள் மிகச்சிறப்பாக வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை அவர்களின் பழக்க வழக்கங்களின் வாயிலாகவே தெரிந்து கொள்ளமுடியும்.

ஒரு மனிதன் ஒரு செயலை தொடர்ந்து பலமுறை செய்யும் பொழுது அச்செயலைப் பல மனிதர்கள் ஒன்றாக சேர்ந்து செய்யும் பொழுது அது வழக்கமாகவும் வருகிறது. சங்க கால மக்கள் தம் வாழ்க்கையில் பின்பற்றிய பழக்க வழக்கங்களை கலித்தொகையின் பாலைக்கலியில் இடம்பெற்றுள்ளதை ஆய்வதுதான் சிறப்பு என்றும், இதற்கு வலுசேர்க்கும் வகையில் மா. இராசமாணிக்கனார் பின் வருமாறு விளக்குகிறார்.

> **பழக்கம் என்பது பயிற்சியின் முதிர்ச்சி எனப் பொருள்படும். நம் முன்னோர் தத்தம் பெரு முயற்சியால் வருந்திப் பயின்று தேறிய பழக்கங்கள் காலப் போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன.**
>
> **(மா. இராசமாணிக்கனார், தமிழர் நாகரிகமும், பண்பாடும், பக். 103-104)**

ஆகவே, மக்களை நல்வழிபடுத்தவும், பண்பாட்டிற்கு பலம் சேர்க்கும் வகையிலும் இத்தகைய பழக்க வழக்கங்கள் தோன்றியிருக்க வேண்டும் என அறிந்து கொள்ளமுடிகிறது. அதற்கென காரணத்தை அறிவதே இக்கட்டுரையின் நோக்கம்.

மக்களின் வாழ்வியலையும், பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் அறிய பாலைக்கலி ஏதுவாக அமைகிறது. திருவிழாக் கொண்டாடுதல், காமன் விழா, அரசர் தம் செயல்கள், அந்தணர் பழக்க வழக்கம், விருந்தோம்பல் பண்பு, உணவுப் பழக்கம், மருத்துவர் மருந்து கொடுத்தல், கடன் பெற தர மாறும் முகபாவம், பகை நாட்டை தீயிட்டு எரிக்கும் பழக்கம் போன்ற பல்வேறு பழக்க வழக்கங்களை இக்கட்டுரையில் விரிவாக காணலாம்.

**திருவிழாக்கள்**

சங்க கால மக்களின் வாழ்க்கை முறையினை அவர்கள் எடுக்கும் திருவிழாக்களின் மூலம் தெரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு மனிதனும் மகிழ்ச்சியோடு இருக்க நினைப்பது இயல்பான ஒன்று அதில், அனைவரும் ஒன்று கூடி எடுக்கப்படுவதுதான் திருவிழாக்கள். இத்திருவிழாக்கள் ஒவ்வொரு இடத்திற்கும் ஒவ்வொரு மாதிரி மாற்றம் கொண்டிருக்கும். திருவிழாக்கள் என்பது மக்கள் அனைவரும் ஒன்று கூடி நடத்தும் ஒரு கூட்டுச் சடங்கு எனலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 2, Jan 2020 Available at: www.ijtlls.com

> **மக்களின் சோர்வினைப் போக்கி இன்பமும் மலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டுவன விழாக்களே. மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடாகும்.**
> **(க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 12)**

என்கிறார் க. காந்தி அவர்கள்.

**கொண்டாடுதல்**

சங்க கால மக்கள் விழாக்கள் கொண்டாடுதல் வழக்கமாக இருந்து வந்துள்ளது. புாலைக்கலியில், தலைவன் பொருளீட்டச் செல்லுவீராயின் தலைவியின் தோற்றம் விழாக்கண்ட மறுநாள் பொலிவிழந்து காணப்படும் இடம் போலக் கணப்படுவாள் என

> **கல்லெனக் கவின்பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்**
> **புல்லென்ற களம் போலப் புலம்புகொண்டு, அமைவாளோ? (பாலைக்கலி.5:10-11)**

கூறுகிறாள். அக்காலங்களில் விழாக்கள் கொண்டாடுவது பழக்கமாக இருந்திருக்கின்றது. ஏனத் தெரிய வருகின்றது.

**காமன் விழா**

பாலைக்கலியில் பெரும்பான்மையும் காமனுக்கு எடுக்கப்படும் விழாவை பற்றியே சொல்லுகிறது. இளவேனிற்காலம் வந்தால் காமனுக்கு விழா எடுக்கும் வழக்கம் சங்க இலக்கிய காலத்தில் கட்டாயம் நிகழ்த்தப்பட்டுள்ளது என்பது தெரிகிறது.

> **குழவி வேனில் விழவுஎதிர் கொள்ளும்**
> **சீரார் செவ்வியும் வந்தன்று (பாலைக்கலி.36: 10-11)**

என்னும் பாடலடியில் பிரிந்து சென்ற தலைவன் வேனிற் காலத்தில் திரும்பி வருவேன் எனக் கூறி சென்றான். பெரிய நீர்த்துறைகள் அழகுற விளங்குகின்றது, காமனுக்கு நிகழ்த்தும் விழாவை எதிர் கொள்ளும் இளவேனிற் காலமும் செவ்வனே வந்துள்ளது. என்பதிலிருந்து தலைவன் வராததை கண்டு வருந்தும் தலைவியின் வாயிலாக, சங்க காலத்தில் இளவேனிற் காலத்தில் காமனுக்கு விழா எடுக்கும் வழக்கம் கட்டாயம் இருந்து வந்துள்ளது என்று தெரியவருகின்றது.

தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்லும் தலைவனை நினைந்து வருந்தும் தலைவியை ஆற்றுப்படுத்தும் தோழி, "நாம் விரும்பும் காதலர் வருவார் காமனுக்கு விழா எடுக்கும் இளவேனிற் காலமும் வந்துற்று. தலைவன் தன் தேரினை விரைந்து செலுத்தி வந்தார் பார்! என்று கூறும் தோழி,

> **நாம் இல்லாப் புலம்பாயின் நடுக்கம் செய்பொழுதாயின்**
> **காமவேள் விழவாயின், கலங்குவள் பெரிதுஎன**
> **ஏமுறு கடுந்திண் தேர் கடவி (பாலைக்கலி.27: 23-25)**

என்ற வரிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. இதன் மூலம் உணர்வது யாதெனில் இளவேனிற்காலத்தில் காமனுக்கு விழா எடுக்கும் வழக்கம் இருந்தது புலப்படுகின்றது.

காமனுக்கு இவ்விழா எடுக்கும் காலத்தில் தலைவன் காதற் பரத்தையருடன் கூடி அவர்களுடன் விளையாடி நீராடும் நிகழ்வையும் சுட்டுகின்றது.

> **மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்து, அவர்**
> **வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ (பாலைக்கலி 35: 13-14)**

என்பதன் வாயிலாக உணரமுடிகின்றது.

துலைவனை நினைந்து வருந்தும் தலைவி, காமனுக்காக எடுக்கப்படும் விழாவில் இழைத்த அணிகலன்களை அணிந்துள்ள பரத்தையருடன் நீராடி விளையாடும் தலைவன் நம்மை மறந்திருப்பான். அவன் கூறிச்சென்ற இளவேனிற் காலம் வந்துவிட்டது என்று அவரிடம் கூறுவார் யாரும் இல்லையோ? என்று தலைவி கூறுவதனையும்,

> **உறல்யாம் ஒளிவாட, உயர்ந்தவன் விழவினுள்**
> **விறல் இழையவரோடு விளையாடுவான் மன்னோ (பாலைக்கலி.30: 13-14)**

